உ

முருகன் துணை.

# குமரகுருபர அடிகள்
# வரலாறும் நூலாராய்ச்சியும்

---

திருநெல்வேலி வடக்குரதவீதி,
மணிவாசகமன்றத்தினின்று
வெளிவருவது.

இது

அட்வகேட்
திரு. கா. சுப்பிரமணியபிள்ளை, M.A., M.L.,
அவர்களால்
இயற்றப்பெற்றது.






பாளையங்கோட்டை சாரதா பிரஸில்,
அச்சியற்றப்பெற்றது.

---

1932.

உ

# முன்னுரை.



இச்சிறு உரைநடை நூல், செந்தமிழ்ச் சைவப் பேரட்ரு பெரியாருள், வரலாற்று முறையிற் பார்க்குங் காலை, இறுதியாய்ச் சைவ நலத்தையுந் தமிழ் மாண்பையும், பனிமலைமுதற் குமரிவரை நிலைநாட்டிய குமரகுரு முனிவரது வரலாற்றினைத் தெளிவாக எடுத்தியம்புவதுடன், அதனையும் அடிகளருள் நூல்களையும் ஆராய்ச்சி முறையின்வைத்து விளக்கும்பொருட்டு இயற்றப் பெற்றது. இதன் குறைகளை அறிஞர் நிரப்புவாராக.

திருநெல்வேலி.
15—4—32

கா. சுப்பிரமணியன்.



பொன்னம்பலநாத முதலியார்.

# உரிமையுரை.



அமரரும் அறியா அரன் றமராகிய
குமர குருபர அடிகள் திருப்பதி
தென்பாண்டி நாட்டின் தலை நகராகிய
நெல்லையம் பதிக்கும், முருகன் செந்தில்
மாபெரும் புகழூ ரதற்கும் நடுவண்
சீவை குந்தம் சீகயி லாயமென்
றரியரன் பேரிடப் பெயரொடு திகழும்
நல்லூர் தன்னில் வேளாண் பெருங்குலம்
செய்பெருந் தவத்தின் உருவாய்த் தோன்றி
இருபெருஞ் செல்வமு மொருங்கமைந் திறைவன்
சீரடிப் பத்தியுஞ் செந்தமிழ் நூல்களிற்
கூரிய நுண்புலஞ் சிறந்தோர் தமிழர்
உலகி லுயர்ந்த பண்டைப் பெருநலன்
படைத் தவரென்னு மெய்யுணர்ந் துரைக்கும்
ஆற்றல் சான்ற வழக்கறி யாங்கில
அறிவின் சீரொடு உழவின் மாண்பும்
இனிதறிந் தெம்மனோர்க் கெடுத்துக் காட்டாகும்
பொருட் காப்புடன்றோர் வண்மையும் படைத்தோர்

மனைமாட்சி வளனும் நன்மகப் பேறும்
உற்றினி துறைவோர் உயர்சீர் மல்கத் தம்
அறுபஃதாண்டு நிறைவின் காலை
இறைவர்க்குப் பெருவிழா இயற்றி மகிழ்ந்தும்
வரையாது எல்லா மரபினருள்ளும்
தக்கார்க்கும் வறியார்க்கும் நல்லமுது தவியும்
பிணிவாய்ப் பட்டார்க்கும் பிள்ளைபெறு வார்க்கும்
மருத்துவசாலைப் பகுதிகள் அமைத்துந்தம்
புகழுடம் புலகமுள நாள் காறும்
நிலைபெறக் குருபர அடிகள் சரிதம்
அச்சிடு பொருளிற் பெரும்பால் வழங்கினோர்
பொன்னம் பலநாத முதலியார் அவர்கள்
இன்னும் பல்லாண்டு நீடூழி வாழ
அன்னார் தமக்கு இந்நூல் ஏற்பே.

---

சிவமயம்.

# குமரகுருபர அடிகள் வரலாறு.

---

சைவசித்தாந்தச் செந்நெறியானது இந்நாட்டிலே, நலிவுற்ற காலங்களிலே, பெருமக்கள் தோன்றி மன்னுயிர்க்கு அதன் உண்மையை அறிவுறுத்தினரென்று பெரியார் வரலாறு கொண்டறிகின்றோம். ஆசிரியர் மெய்கண்ட தேவர் முதலிய சந்தானகுரவர் நால்வரும் அவர் வழி வந்த பெரியாரும் சிவவொளியைப்பரப்பி மறைந்து சின்னாளாய பின்னர், வடநாட்டு நாயக்கர் அரசாட்சியிலே வைணவ சமயமும், துலுக்க சமயமும், ஏகான்மவாதமும், பிறவுந் தலை யெடுப்பவாயின. சைவ மடங்களில் வைகிய துறவிகள் தம்மை யடைந்தார்க்கே சிவநெறியினைப் போதித் தாட்கொண்டமையால் சைவ நன்மக்கள் பலருஞ் சைவசமயச் சிறப்பினை யறியாதாராய்த் தமக்கு ஒரு சமயத்தலைவரை நாடிநின்றனர். அப்போது செந்தமிழுஞ் சிவமாநெறிக் கொள்கையும் சிறப்புற்றோங்கிய தென் பாண்டிநாட்டிலே தோன்றி அவ்விரண்டும், குமரிமுனை முதற் பனிமலைச்சாரல் வரை மிக்க மாண்பொடு திகழும் வண்ணம் திருவருட் பெருவாழ்க்கை நடாத்தித் தமது நிறைமொழியால் நாயக்க மன்னரையும் மகம்மதிய அரசரையும், தமது வயப்படுத்திச் செந்நெறி செலுத்திப் பெருநன்மையாற்றிய பெருந்தகையார் குமரகுருபர அடிகளாவர். ஆதலின் அவர் வரலாற்

றினையும் அருள் நூல்களையும் ஆராய்ச்சிசெய்தல் நம்மவர் கடமையாகும். அதனை ஒருவாறு நிறைவேற்றக்கருதுஞ் சிறுநூல் இதுவாகும், இதன் குறைகளை அறிஞர் நிரப்புவாராக. இப்பெரியார் சரித்திரத்தைச் செய்யுள் வடிவமாகப் பாடியவர் காலஞ்சென்ற பெரும் பாவல ராகிய மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள். அவர் துறை சையாதீனக்கலைத்தலைவராய்த்திகழ்ந்தவர். இனிய நாற் கவிகள் பாடுவதிற்றலைசிறந்தவர். அவரியற்றிய சரித் திரத்தைத் தழுவி அடிகள் வரலாற்றினைத் தெரிக் கின்றாம்.

குமரகுருபர அடிகள் தோன்றிய நாட்டின் தன் மையை அழகுமிகப் பகர்வார்,

"செந்தமிழுஞ் சந்தனமுந் திசையெல்லாம் பரிமளிக்க
மந்தவளியு மிழ்மலய வளர்குடுமி நின்றிழிந்து
கொந்தவிழு மலர்வீசிக் குளிர்கெழு முத்தெடுத்
திறைத்து
முந்தவெழு புனற்பொருநை முழுவளத்த தந்நாடு"
என்றார்.

அந்நாட்டிலே வயல்தோறுங் கயல்மீன்கள் மகிழ் வுற்றுத்துள்ளுகின்றன. எதனாலெனின், உமையம்மை செழியன் மகளாய்த்தோன்றிய காலை, கயற்கொடியுயர்த் தினமையாலும், கயற்கண்ணியென்ற திருப்பெயர் பூண்டமையாலும் என்க. இனைய நன்னாட்டிலே, பொரு நைக்கரையிலே, சைவர்கள் திருக்கயிலை யென்றும்,

வைணவர்கள் வைகுந்தமென்றும் அழைக்குந்திருப்பதியானது திருநெல்வேலிக்குந் திருச்செந்தூருக்கும் நடுவே நம்மாழ்வார் பிறந்த திருக்குருகூர்க்கு மேல்பால் உள்ளது. அவ்வூரிலே பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திலே கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து விளங்கிய சண்முகசிகாமணிக் கவிராயர் தமது மனைவி சிவகாமியம்மையாரோடு மகப்பேற்றின் பொருட்டுத் திருச்செந்தூர்ப் பெருமானை உள்ளத்தில் நினைந்து அருந்தவங் கிடந்தார். அத்தவத்தின் பயனாக அவரது கற்புமிக்க மனைவியினிடம் சற்றேறக்குறைய முந்நூறு ஆண்டுகட்குமுன்னே ஒரு அருமைப்புதல்வர் உதித்தனர். பெற்றோர் அளவற்ற மகிழ்ச்சியுடன் அக்குழந்தையைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து அது ஐயாண்டுற்றும் பேசாதிருத்தலைக்கண்டு மிக்க மனக்கவலை யெய்தினர். குழந்தை நாளடைவிற் பேசக்கூடுமென்று பலநாள்களாக எதிர்பார்த்திருந்தும், அது பேசாமையறிந்து அது மூங்கைப்பிள்ளையாமென வெண்ணி உளம் நொந்து திருச்செந்தூர்ப் பிரானிடம் அதனைக் கொண்டுவிடக் கருதி அதனை அழைத்துச்சென்றனர். செந்திலம்பதிக்குப் புறப்பட்ட காலை நன்னிமித்தங்கள் கண்டமையால், தாயுந்தந்தையும் தெளிவடைந்தனர். திருச்செந்தூரடைந்து, முருகப்பெருமானைப் பேரன்புடன் தொழுது இலைவிபூதிபெற்றுக் கடவுள்பாற் பிள்ளையைப் பெற்றோர் அடைக்கலம் புகுவித்தனர். இலை நீற்றுச் சிறப்பை ஒரு அழகிய செய்யுளிலே துறைசைப்புலவர் பாடினர்.

இலை யமில் குமரவேள் முன் வணங்குவார்க் கென்றுந்
[துன்பம்
இலை அடுபகை சற்றேனும் இலை படுபிணி நிரப்பும்
இலை அளற்றுழன்று வீழ்தல் இலை பலபவத்துச் சார்பும்
இலை யென விலைவிபூதி யெடுத்தெடுத் துதவல்கண்டார்.

திருச்செந்தூரண்ணல் பேரருளினாலே அருமைப் புதல்வர்க்கு நல்லறிவு விளங்கிற்று. அவர் சண்முக விலாசமென்னு முன்மண்டபத்திலே தங்கியிருந்தனர். ஆறுமுகச் செவ்வேள் அருட்டிருவடிவம் அவருள்ளக் கண்ணிற்குப் புலனாயிற்று. அவ்வடிவத்தையே நினைந்து தொழுதிருக்கு நாளிலே, ஒருநாள் குமரவேள் அடிகட் குத்தோன்றி "நீயார்" என்று வினவியருளியவுடன், அவர் வாய்திறந்து "அடியேன்" என்றார். இறைவன் அவர்க்குச் சைவசித்தாந்த உணர்ச்சி நல்கிக் குருபரன் என்ற திருப்பெயருமிட்டு மறைந்தருளினர். அடிகள் தமக்குப் பரஞானம் தமது வாக்கிற்குத் தடை ஏற்படு மிடத்தே கிட்டுமென்றறிவுறுக்கப்பெற்றார். அன்று முதல் அடிகள் தூயதவவேடத்துடன் துறவு வாழ்க்கை நடத்துவாராயினர். திருச்செந்தூர்ப் பிரான்மீது கந்தர் கலி வெண்பா வென்ற அழகிய பொருள்வளமிக்க பாமாலை தொடுத்தனர். அடிகளது பெற்றோரும் பிற ரும் அவரைக் குமரகுருபரனென்றழைக்கலாயினர். பின்னர் அடிகள் தம்மூர்க்குச்சென்று அத்திருப்பதி யில் வைகுங்கயிலைநாதர்மீது "கயிலைக்கலம்பகம்" என் னுஞ் செவ்விய சிறுகாப்பியமியற்றினர். இந்நூலின்

ஒரு சிறுபகுதியே கிடைத்துத் திருநெல்வேலிச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் குமரகுருபர அடிகள் நூற்றொகுதியுட் சேர்க்கப்பட்டது. எட்டுப் பாடல்களே கிடைத்தனபோலும். அதில் "வைகுந்தக் கயிலேசர்" என்ற சொற்றொடர் காணப்படுவதால், அது அடிகள் பிறந்தவூர்க்குரியதென்பது தெளியப் படும்.

சின்னாட் சென்றபின் அடிகள் திருநெல்வேலி, திருக்குற்றாலம், திருச்சுழியல், திருக்கானப்பேர், திருவாடானை, திருப்புனவாயில், திருக்கொடுங்குன்றம், திருப்புவனம், திருப்புத்தூர், திருப்பெருந்துறை, திருவிராமேச்சுரம், திருப்பரங்குன்ற முதலிய தலங்களை வணங்கிக் கூடன்மாநகரம் வந்தடைந்தனர். அங்குள்ள பெரியாரெல்லாம் அடிகளை எதிர்கொண்டு மிக்க சிறப்புடன் வரவேற்றனர். அப்பெரும்பதியிலே திருமலை நாயக்கர் என்பவர் அரசுவீற்றிருந்தார். அவண், அங்கயற்கண்ணி சந்நிதியிலுள்ள ஒரு திருமடத்திலே அடியார்கள் தங்கும்படி வேண்ட அடிகள் அமர்ந்து அம்மைமீது பிள்ளைத்தமிழொன்று பாடியருளினார். அம்மைக்கனவிலே திருமலைநாயக்கர்க்கு தோன்றி 'என் புதல்வன் திருவருள்பெற்றுப் பாடிய செந்தமிழ்ச் சிறுநூலை நான் கேட்க விரும்புகின்றேன்' என்றருளிச் செய்து மறைந்தவுடன், அரசன் எழுந்து அமைச்சர் முதலியோரைக்கூவி, நம்மூரிலே வந்திருக்கும் பெரியவர் யாரென்று வினவ அதற்கவர்கள் வைகுண்டநகரத்திலே

பிறந்து ஐந்தாவது ஆண்டுவரை ஊமையாயிருந்து திருச்செந்திலாதிபன்றிருவருளாற் பேசுந்தன்மையும், பாடுமாற்றலும் பெற்றுத் துறவுபூண்டு சிவவேடத்துடன் பல திருப்பதிகளுக்குச்சென்று தொழுது இவண் போந்துள்ள குமாரகுருபர அடிகளென்பார் அங்கயற்கண்ணம்மைமீது ஒரு பிள்ளைக்கவிப் பிரபந்தம் பாடியுள்ளார் என்றனர். பின் அவர்கட்கு அரசன் தன் கனவினைத்தெரிவித்து அவர்களுடன் அடிகள் வைகுந் திருமடத்திற்கேகி, அடிகளை வாழ்த்தித் தொழுது அம்மைமீது பாடிய சிறு காப்பியத்தைத்தான் கேட்க விரும்புவதாகக்கூற அடிகள் "அவ்வாறேயாகுக" என்று பணித்துத் திருநீறளித்தார். நாயக்கர் அதனை யேற்றணிந்து நன்னாள் ஒன்று குறித்து அந்நாளிலே அரங்கேற்றந் தொடங்குவித்தார். அடிகள் கயற்கண் நாயகியை வணங்கி அரசன் முதலிய யாவருங்கூடிய பேரவை பெருமகிழ்வெய்தும் வண்ணம், பிள்ளைத்தமிழினைத் தமது பெருஞ்சொல்லால் விளக்குவான் புகுந்து ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பருவமாகப் படித்துவரும்போது, வருகைப்பருவம் ஓதுங்காலத்தே அங்கயற்கண்ணி, அருச்சகரின் குழந்தை வடிவினளாய்த் திருமலை நாயக்கர் மடிமீது வீற்றிருந்தாள். அப்பருவத்திலே "தொடுக்குங்கடவுட் பழம்பாடல்" என்ற திருப்பாடலைப் பாடியபோது, அரசன் கழுத்திலிருந்த முத்தாரத்தை எடுத்து அடுத்த பாட்டு முடிவதற்குள் அடிகள் கழுத்திலிட்டு மறைந்தருளினாள். இவ்வியப்புமிக்க

அருட் செயலைக்கண்டு எல்லாரும் இறும்பூ தெய்திப் பேரானந்தங்கடலிற்றிளைத்தனர். இதனைக் கண்ணுற்ற மன்னர், அடிகள் பெருமாண்பினைவியந்து பிள்ளைத் தமிழ் அரங்கேற்றி முடிந்தபின் அடிகளைச் செம்பொன் ஞலியற்றிய அரியணைமீதிருத்தி, அவர் திருமேனியைப் பொன்னுலு மணியாலுமூழ்குவித்து, வீரக்கழலை அவர் திருவடியிற் சாத்தினர். யானை, குதிரை, சிவிகை, குடை, கொடி முதலிய பல விருதுகளுங் கொடுக்கப் பட்டன. அடிகள் மதுரைத் திருமடத்திலே சின்னு ளிருந்தருளவேண்டுமென்று, அரசன் கேட்டுக்கொண்ட தற்கிணங்கி, அவண் இருந்து, மீனுட்சியம்மை குறம், மீனுட்சியம்மை யிரட்டைமணிமாலை முதலிய அரிய பிரபந்தங்களைப் பாடியருளினுர். நாயக்கமன்னர் கருத் துப்படி "நீதிநெறி விளக்கம்" என்னும் அழகிய நீதி நூலியற்றியதற்குப் பரிசிலாக இருபதினுயிரஞ் சிறு பொன் வருவாயுடைய அரியநாயகிபுரம் அவர்க்கு நன் கொடையாக அளிக்கப்பட்டது. அம்மையைப்பாடிய வாறே ஐயனையும் பாடவேண்டுமென்ற அடியாரது விருப்பை நிறைவேற்றுவான் அடிகள் திருவாலவாய்ப் பெருமான்மீது மதுரைக்கலம்பகமென்ற செந்தமிழ் மாலை தொடுத்தனர்.

பின்னர், குமரகுருபரர் வடதிசையை நோக்கிப் புறப்பட்டுத் திரிசிராப்பள்ளியடைந்து அவ்வூர் மன்ன ஞற்பெரிதும் போற்றப் பெற்று அங்கு வீற்றிருக்கும் பெருமானை யிறைஞ்சி அவண் வைகினர். ஆயகாலை,

திருவரங்கத்தில் வதிந்த வைணவப் பாவலராகிய பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் அரசனையும், அடிகளை யுங்கண்டு உரையாடினர். இருவரையும் நோக்கி அரசன் தமது அரசாங்க நாணயமாகிய பொற்காசிலே எவ்வடை யாளம் பொறித்தற்பாலதென்று வினவ, ஐயங்கார் "கருடன்" என்றார். அடிகள் "விடை" யென்றார். "கருடன் பறந்து வட்டமிட்டுச் சென்றுவிடும், விடை முட்டமுட்டச் செல்லும் நலத்தது" என்னும் நயவுரை கேட்ட மன்னன், காசுகளின் மீது விடை பொறிக்கும் படி கட்டளையிட்டனன்.

அவண் நின்றும் புறப்பட்டுக் குமரகுருபரப் பெரு மான், வாட்போக்கி, கடம்பந்துறை, ஈங்கோய்மலை, திருப்பராய்த்துறை, திருப்பாச்சிலாச்சிராமம், திருப் பைஞ்ஞீலி, திருவானைக்கா, திருமூக்கீச்சுரம், திருக்கற் குடி, திருவெறும்பியூர், திருக்காட்டுப்பள்ளி முதலிய பல திருப்பதிகளையும் வணங்கித் திருச்சிராப்பள்ளிக்கு மீண்டனர். அத்தருணம், பிள்ளைப்பெருமாளையங்கார், தமது வைணவத் தொண்டரொருவர் வாயிலாகச் சமய வாதஞ் செய்யுங் கருத்தை அடிகட்கு அறிவித்தார். இருவருக்குந் திரிசிரபுர நாயக்கமன்னர் பேரவையில் நிகழ்ந்த வாதில், அடிகள் சிவனாது முழுமுதற்றன் மையை நிலைநாட்டி அரசனளித்த பரிசு பெற்றனர்.

சின்னாட்கழியவே, குருபரர் வடதிசை யாத்திரை கருதிப் புறப்பட்டுச் செம்பொற்சிவிகை ஏறிச் சென்ன

முழங்கக் குடை நிழற்றப் பரிசனத்துடன் போந்து அன்பிலாலந்துறை, திருக்கானூர், திருமழபாடி, திருநெய்த்தானம், திருவையாறு, திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை, திருப்பழனம் முதலிய திருப்பதிகளைத் தொழுதனர். திருக்குடந்தை, திருவிடைமருதூர் முதலிய பெரும் பதிகளைப்போற்றி போய்த் திருவாடுதுறையடைந்து, அடியார் குழாங்களால் எதிர்கொள்ளப்பெற்று, இறைவனையும், திருமூலர், திருமாளிகைத்தேவர், நமசிவாய தேசிகர் முதலிய பெருமக்களையும் பணிதாழ்ந்திறைஞ்சி, ஆதீனத் தலைவர் பால்விடை பெற்றேகினர். அப்பால், திருமயிலாடுதுறைப் பெருமானைப் பரவித் தருமபுரவாதீனம் நண்ணித் தம்பிரான்மார்களால் வரவேற்கப்பெற்றுத் திருமடத்துக்குச்சென்று, ஆதீனத்தலைவரை வணங்கி அவர் அண்மையிலமர்ந்தனர். அப்போது ஆதீன முதல்வராய்த் திகழ்ந்த மாசிலாமணி தேசிகர், அடிகளை நோக்கி "ஐந்துபேரறிவு" என்னும் பெரியபுராணத் திருப்பாட்டின் அனுபவப்பொருளை வினவ அடிகட்குத் திகைப்புத்தோன்றியது. திருச்செந்தூர்ப் பிரானருளிச்செய்தந்தை உடனே நினைந்து, தேசிகர் திருவடியிற் சரண்புகுந்து அவர் பால் உரியவகையாற்றீக்கை பெற்று மெய்யறிவுரை (ஞானோபதேசம்) பெற விரும்பினர். தேசிகர் அடிகளைச் சிதம்பரயாத்திரை செய்து மீளும்படி பணித்தனர்.

குருபரர் அவ்வாறே விரைவிற் புறப்பட்டுத் தருமையாதீன முதற்றலைவரின் பரமாசாரியார் வீற்றிருந்த திருவாரூர் தொழ விரும்பி, அவண் சென்று திருவீதியைச்சூழ்ந்து தேவாசிரியனை வணங்கித் திருக்கோயிலுட் புகுந்து புற்றிடங் கொண்டாரையுந் தியாகேசரையும் ஆராதகாதலுடன் தாழ்ந்திறைஞ்சினர். அரிதிற் புறம் போந்து ஒரு திருமடத்தினமர்ந்து "திருவாரூர் நான்மணிமாலை" பாடி இறைவர் திருமுன் அதனை அரங்கேற்றினர். அவ்வூரிலிருந்த சிவசமவாதியர் சிலரோடு வாதாடி அவர்கட்குச் சித்தாந்தவுண்மையைத் தெள்ளிதின் விளக்கிப் பெரும்புகழ் படைத்தனர்.

பிறக்க முத்திதரும் அத்திருப்பதியை அகன்று வழியிலுள்ள தலங்களையும் பணிந்து புள்ளிருக்கும் வேளூர் வந்தடைந்தனர். அங்கே தம்மையடைந்தாரது உடற்பிணியும் பிறவிப்பிணியும் ஒழிக்கவல்ல மருந்தீசரையும் தையல்நாயகியம்மையாரையும் வணங்கிப் பரமாசாரியரான முத்துக்குமாரசாமியையும் பேரன்புடன் வழிபட்டனர். அவண் ஒரு திருமடத்திலே அடிகள் துயில்கொண்டபோது, குமரவேள் அடிகள் கனவிற் றோன்றி 'இவண் நீ என்னைப்பாடாமைக் கேதுவென்னை' யென்று வினவித்திருநீறளித்து மறைந்தருளினர்.

குருபரர் உடனே எழுந்து திருவருளை வியந்து மறுநாட்காலையிலே "முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்" பாடி முருகனுக்கு ஏற்பித்தனர். அப்பால் அவ்வூர்

நின்றும் போந்து திருக்கழுமலமுதல்வரை வணங்கிப் போய்த் தில்லை யெய்தினர்.

ஆண்டுத் தம்மை எதிர்கொண்டு வரவேற்ற அடியாருடன்சென்று தில்லைப்பெருமான் திருநடங்கண்டு களித்து எல்லை யில்லதோர் இன்பமார்ந்து அவண் வைகிச் சிதம்பரமும்மணிக்கோவை செப்பினர். அடிகள் யாப்பிலக்கணம் வல்லரோவென்ற ஒருவரது ஐயுறவு நீங்க, இலக்கணப்படி அமைந்த் பாவும் பாவினமுஞ் செறிந்த சிதம்பரச்செய்யுட் கோவையை இயற்றியருளினர். குமரகுருபரனார் தம்மை யடைந்தவர்க்கு அரிய நுண்பொருள் பலவும் அறிவுறுத்தி ஆயிரக்கால் மண்டபத்தமர்ந்திருந்த காலை ஆண்டுக்குழுமிய ஏகான்ம வாதியர் சிலருடைய மயக்கந் தீரும்பொருட்டுச் சைவ சித்தாந்தப் பேரறிவுப் பெருஞ்சுடர் கொளுத்தினர். சிவகாமியம்மை யிரட்டைமணிமாலையும் அங்கேயே பாடப்பெற்றது.

பின்னர், அடிகள் தருமபுரம்போய் மாசிலாமணி தேசிகர் பால் ஞானோபதேசம் பெற்றுத் தமது உடல், பொருள் ஆவி மூன்றையும் அவரிடம் ஒப்புவித்தனர். அவர்மீது பண்டாரமும்மணிக்கோவை யென்ற அரிய பிரபந்தமும் பாடியருளினர். அடிகள் ஒப்புவித்த பெரும்பொருளைத் தேசிகர் அடிகளிடம் திரும்பக் கொடுத்துக் காசிக்குப்போய்ப் பல அறங்களையும் ஆற்று கொண்டியற்றுமாறு பணித்தனர். ஞான தேசிகர் கட்

டளையைச் சென்னிமேற்கொண்ட குருபரனர் காசிச் செலவை மேற்கொண்டனர். வழியிலுள்ள திருவேகம்பம், திருக்காளத்தி முதலிய தலங்களிற் பெருமானைத் தொழுது சென்று அடிகள் காசிமாநகரையடைந்தனர். அங்கே கங்கையிலேமூழ்கி விசுவேசரைப் பேரன்புடன் வழிபட்டுத் துண்டிவிநாயகர்மீது ஒரு திருப்பதிகமும் சிவபெருமான்மீது காசிக் கலம்பகமும் பாடியருளினர். ஆனந்தவனமாகிய காசியிலே குருபரனர் ஆனந்தமாக வீற்றிருந்தார்.

"ஆனந்த முயிர்களெய்த ஆனந்த வல்லியோடும்
ஆனந்த மகார்களோடும் ஆனந்த வனத்துமேய
ஆனந்த வடிவார்தம்மை யானந்தச் செய்யுள்பாடி
ஆனந்தம் பயப்பப்போற்றி ஆனந்த மெய்துநாளில்"

காசியிலே பல அறங்களையு மியற்றுதற்குரிய இடம் பெறுவான், அந்நகர் வேந்தனைப் பார்க்கக் கருதினர். அரசாது பேச்சு வேறு மொழியிலிருந்தமையால், அம் மொழி தமக்குக் கைவரும்வண்ணம் வெண்கமலச் செல்வியைப்பாடினர். கலைமகள்மீது பாடிய பதிகம், சகலகலாவல்லி மாலை யெனப்படும். கலைமகள் அடிகட்குத் தனது காட்சி நல்கி இந்துத்தானமொழியின் பெற்றியை அவர் உள்ளத்திற் பதிவித்தருளினள். குருபரனர், துருக்கிய குருக்கள் பாற்சென்று அன்னோர் மொழியிற்பேசி அவர்களுடைய ஐயங்களைத் தீர்த்தவுடன், அவர்கள் வியந்து அடிகளைத் தமது அரசன்

பாலெய்துவித்தனர். முதலில், அரசன் அவர்க்குத் தக்க இருக்கை நல்காமையின், குருபரனர் ஒரு சிங்க முதுகின்மேலேறிச் சென்றுரென்ப. மகம்மதிய மன்னன் அவரது திருவருட் பேற்றினையுமிக்கதவ ஆற்றலையுங் கடலனைய கல்வி நலனையும் ஒழுக்கமாண்பையுங்கண்டு அவர்க்கு மிக்க சிறப்புச்செய்தான். அடிகளது சொல் வன்மையைக்கண்டு வியவாதாரில்லை. காதலைப்பற்றி அடிகள் பெருஞ்சொல் நிகழ்த்தினல், கேட்டார்யாரும் காமவேட்கையுடையாராவர். போரினைப்பற்றி அவர் பேசினல் முதியோருஞ்சினங்கொண்டு போர்க்கெழுவர். அத்தகைய மாண்புணர்ந்த அரசன், அடிகள் வீற்றிருந் தறஞ்செய்யத் திருமடமொன்றமைத்துக் கொடுத்தான். அவண் அமர்ந்து, அடிகள் எவ்வுயிர்க்கும் பசிப்பிணி நீக்கிப் பிற அறங்களும் ஆற்றிச் சிவபெருமானை வணங்கி யினிதிருந்தனர். கங்கைக்கரையிலே திரு மடத்திற் கருகிலிருந்த திருக்கேதாரநாதர் கோயிலைச் சீர்செய்து அங்கே தென்னட்டுப்பூசனை நியமங்களை ஏற்படுத்தினர்.

இங்ஙனமிருக்கும் நாளில் அரசற்குக் குருபரனர் மீது, அன்பு வளர்வதைக்கண்டு அழுக்காறு கொண்ட மகமதியக்குருக்கள் ஒருங்குகூடி அதனைக் குறைப்ப தற்குச் சூழ்ச்சி முயன்றனர். அவர்கள் தமது மன்னன் பாற்சென்று கூறியதாவது "குருபரனர் கல்வியிற்சிறந் தனராயினும், மெய்க்கடவுளை வழிபடுபவரல்லர்; அவ ரைக்கூவி வினவுக" என்பதே. அரசன் அடிகளைத்

தனது குருக்கண்மாரோடு சமயவாதஞ் செய்விக்கக் கருதி வரவழைத்தனன். குருபரனுர் மகமதிய வாதிகளை நோக்கி "நீவிர் கூறுவதியாது" என்றனர். அவர்கள், "உமது தெய்வம்பொய், அது மெய்க்கடவுளானல், பழுக்கக்காய்ச்சிய இரும்பை உள்ளங்கையிலேந்திச் சோதனைதருக" என்றறைந்தனர். அடிகள் புன் முறுவல் பூத்து "அங்ஙனமேயாகுக" என்றவுடன் அவர்கள் சூட்டினல் மிகச்சிவந்த இரும்புத்துண்டைக் கொணர்ந்தனர். திருவருளை நெஞ்சிலே நினைந்து அடிகள் "சிவபெருமானே முழுமுதற் கடவுளென்பதுண்மையாயின், யான் அவனடித் தொழும்பனென்றல், இவ்விரும்பு என்னைச்சுடாதொழிக" வெனப்பகர்ந்து, அதனைத் தமது திருக்கையில் எடுத்தேந்தி யாதொரு ஊனமுமின்றி விளங்கினர். உடனே அரசன் நடுநடுங்கிக் குருபரனுர் திருவடியிலே விழ்ந்திறைஞ்சித் தானிழைத்த பெருந்தீங்கினைப் பொறுத்தருள்கவென்று குறையிரந்தான். அவையோரெல்லாரும் முழுமுதற் பரம்பொருளைச் சிவனெனத் தெளிந்தனர். துருக்கிக் குருக்கள் யாவரும் அளவற்ற இகழ்ச்சிக்குந் துயரத்திற்குமுள்ளானர்கள். அன்னேர் செய்த சூழ்ச்சி சைவத்தின் மெய்ப்பெற்றியை விளக்கினமையறிந்து அடிகள் மகிழ்ந்தனர். குருபரனுர் யாவற்றையும் பொதுப்பட நோக்கும் விரிந்த வுணர்ச்சியுடையரல்லர் போலுமென்ற ஐயம்நீக்குதற்பொருட்டு, ஒருநாள் அரசன் அடிகளைத் தம்மவரோடு உடனுண்ணும்படி வேண்ட, அடிகள் அதற்

கிசைந்து தமது பணியாளன் ஒருவனை ஒரு பாத்திரத்திலே செவ்வலரி மலரைவைத்து மூடிக்கொண்டுவரச் செய்து அரசன் உணவுச்சாலைக்கு எழுந்தருளினர். அரசன் அப்பாத்திரத்தில் உள்ளது யாதென்றுவினவ, அதுபன்றியூன் என்னவே, அரசன் மிக வெறுப்புக் காட்டியபோது, குருபரனார், அரசனை நோக்கி அது விருப்பு, வெறுப்பின்மைக்கு மாறாகும், எல்லாப் பொருளும் இறைவனாற் படைக்கப்பட்டமையின், அவற்றையெல்லாம் ஒன்றுபோலக் கருதல்வேண்டுமென்றுரைத்த பின்னர் அரசனோடுடனுண்ணுங்காலை, புலாலுணவுகளை மரக்கறி உணவுகளாக மாற்றியருந்தி அரசனுக்குச் சைவ உணவின் சிறப்பையும் புனிதத்தையுந் தெள்ளிதிற் புலப்படுத்தியருளினர்.

இவ்வாறு பல அற்புதச் செயல்களாற்றிப் பல அறங்களையும் வளர்த்து வருங்காலை, சிவகண்மணி நன்கு விளையும் இமயமலைச்சாரலில் ஒரு திருமடம் அமைக்கக் கருதினர். அக்கருத்தை வாகீசமுனிவரென்னுந் தம்பிரானுக்கறிவிக்க, அவர் நேபாள நாடுசென்று, முகராங்கி யென்னுமிடத்திலே ஒரு திருமடம் நிறுவிச் சைவர் யாவர்க்கும் வேண்டுங் கண்மணிகளை அவண் நின்றுங் காசிக்கனுப்பினர்.

சிவபிரானோடு கலப்புறுதற்குரிய காலம் நெருங்கியவுடன் அடிகள் தமது மாணவர் பலருள்ளுஞ் சிறந்த சொக்கநாத முனிவரைத் தமக்குப்பின் அறங்களை வழு

வாது ஓம்புதற்பொருட்டுத் தெரிந்தெடுத்து அவர்க்கு அறிவுரையுணர்த்தி முருகப்பெருமானைப் பூசனைபுரியக் கட்டளையிட்டு, வைகாசித்திங்களிலே தேய்பிறைப் பக்கம் மூன்றாம் நாளிலே விசுவேசர் திருவடிக்கமல நீழலிலே "ஒன்றியொன்றாது மேவி யுலப்பிலானந்த முற்றார்". அவர் கங்கையுள் மறைந்தனரென்ற கதையுங் கேட்கப்படுகின்றது. சொக்கநாத முனிவர்க்குப்பின் அருணாசல முனிவர், அம்பலவாண முனிவர், சடையப்ப முனிவர் என்பேர் காசியில் வாசஞ்செய்து சிவனறம்பேணி நின்றனர். அவர்கட்குப்பின் தலைவராய் விளங்கிய தில்லைநாயக சுவாமிகள் (1720–1756 கி. பி.) வேறொருவரைக் காசியிலே அறம் நடாத்த நியமித்து விட்டுச் சோழநாட்டிலே திருப்பனந்தாளிலே ஒரு திருமடமமைத்துத் தாம் அவண் தங்கிச் சிவபெருமானுக்கும் அடியவர்க்குந் திருப்பணியியற்றிவந்தனர். அவர்க்குப்பின் வந்தோரெல்லாம் திருப்பனந்தாளைத் தலைமையான இடமாகவும், காசியைக் கிளையாகவுங்கொண்டனர். தில்லைநாயக அடிகள் சிவனடி சேர்ந்தபின், இரண்டாவது குமரகுருபர சுவாமிகள் (1756–1790)
சிதம்பரநாத சுவாமிகள் (1790–1798)
சடையப்ப சுவாமிகள் (1798–1836)
கணபதி சுவாமிகள் (1836–1838)
இராமலிங்க சுவாமிகள் (1838–1841)
சொக்கலிங்க சுவாமிகள் (1841–1852)
இரண்டாவது கணபதி சுவாமிகள் (1852–1853)

இரண்டாவது இராமலிங்க சுவாமிகள் 1853–1880) என்போர் தலை சிறந்து விளங்கினர்.

(1880–1894)ல், கோர்ட்டு வழக்கினல் திருப்பனந்தாள்மடம் மடாதிபதிகளல்லாத பிறமுவர் ஆட்சிக்குள்ளிருந்தது. பின்னர், பொன்னம்பல சுவாமிகள் (1894–1898) சோமசுந்தர சுவாமிகள் (1898–1914) இரண்டாவது திண்டுக்கல் சொக்கலிங்க சுவாமிகள் (1914–1919) மூன்ருவது சொக்கலிங்க சுவாமிகள் (1919–1930) என்போர் காசி மடத்ததிபதிகளாய்த் திகழ்ந்தனர். கடைசியாய்க் காலஞ்சென்ற உயர்திரு சொக்கலிங்க சுவாமிகள் தம்முடைய காலத்திலேயே தமக்குச் சின்னப்பட்டமாக நியமித்திருந்த உயர்திரு சுவாமிநாத சுவாமிகள் இப்போது மடாதிபதிகளாக விளங்குகின்ருர்கள். இவர்கள் தமிழ் வளர்ச்சியில் இணையற்ற ஆர்வமுஞ் சைவப்பற்றும் உடையவர்கள். இவர்களும் இவர்க்குப் பின்வருவோரும் சைவ சித்தாந்த நெறியினையும், செந்தமிழ்ப் பெருமையையும், பிற அறங்களையும் பேணிப் பெரும்புகழ்படைத்து என்ஞான்றும் செவ்விதின் இலங்கும்வண்ணம் எல்லாம் வல்ல இறைவன்றிருவருள்புரிக.



## வரலாற்றுராய்ச்சி.

அடிகள் வரலாற்றினைத் திட்பமாக அறிதற்கு அகச் சான்றுகள் மிகக்குறைவாகவேயுள்ளன. அவர் புராணம் பாடிய பெரும் பாவலர் பலசெய்திகளைத் தக்ககர்ண பரம்பரைக்கதைகளாலறிந்திருத்தல்கூடும். திருப்பனந் தாள் மடத்தைத் தில்லைநாயகசுவாமிகள் நிறுவுவதற்கு முன், காசி மடம் எத்துணை செல்வமுடைத்தாயிருந்த தென்பது விளங்கவில்லை. திருப்பனந்தாள் மடத்துத் தலைவர்கள் காலமும் பிற விபரமும் சென்னைச் சட்டத் தீர்ப்பறிக்கைப்புத்தகம் பத்தாவதன்கட் காணப்படு கின்றன. சின்னாட்குமுன் திருப்பனந்தாள் மடத்தாரால் வெளியிடப்பட்டுள்ள கந்தர்கலிவெண்பா நூலின் முற் பகுதியுட் சேர்க்கப்பட்டுள்ள ஸ்ரீ காசி மடத்துப் பரம் பரைவிளக்கம் நன்கு உற்றுநோக்கத்தக்கது. அவ்விளக் கத்தின்கண் தில்லைநாயக சுவாமிகட்குப்பின் குமர குருபர சுவாமிகள் ஒருவர் மடாதிபதியாய்த்திகழ்ந்த மையால், காசிக்குமாரசாமிமடம் நிறுவிய பெருந்தகை யார் ஆதி குமரகுருபரசுவாமிகளெனப்பட்டனர். பாண்டிநாடே பழம்பதியாகவும் என்று மணிவாசகப் பெருமான் திருவாய்மலர்ந்தருளியதற்கிணங்கச் சைவ முத்தமிழும் என்றுஞ்சிறப்புற்றோங்குந் தென்னாட்டிலே அவ்விரண்டிலுந் தலைவராய்த்திகழ்ந்த குமரகுருபர முனிவர் தோன்றினமை பெரிதும் பொருத்தமானதே. அடிகள் காலந்திட்பமாக அறிதல்கூடாதெனினும் அவர்

மதுரைக்குச்சென்ற காலை, அவண் ஆட்சிபுரிந்தமன்னன் திருமலைநாயக்கர் என்பது தெளிவு. அடிகள் தமது மீனாட்சியம்மை குறத்தினிறுதியில்

"நீர்வாழி தென்மதுரை நின்மலனாருள் வாழி
கார்வாழி யங்கயற்கட் கன்னிதிருவருள் வாழி
சீர்வாழி கச்சிநகர்த் திருமலைபூபதி வாழி
பேர்வாழி யவன்செல்வம் பெரிதூழி வாழியவே"

என்று வாழ்த்துரைத்தமை காண்க. திருமலைநாயக்கர் காலம் 1623 முதல் 1659 வரை யென்று சரித்திர நூலார் முடிவுகட்டினர். அடிகள் திரிசிராப்பள்ளிக்குச் சென்றபோது, அது ஒரு நாயக்கமன்னனாட்சியிலிருந்ததாகத் தெரிகிறது. கி. பி. 1625ல் திருச்சியையாண்ட முத்துவீரப்ப நாயக்கன் இறந்தபின் சிலகாலம் அரசியின் ஆட்சியில் திருச்சி இருந்ததாகலின் கி. பி. 1625 வது ஆண்டிற்குச் சில காலத்திற்குப்பின்னேயே அங்கே குருபரனார் சென்றிருத்தல கூடும். தாயுமான அடிகள் காலம் 1608-க்கு 1662 வரை யென்பது திண்ணமாயின், அடிகளும் அவரும் ஒரு காலத்தவராவர். ஆனால் ஒருவரையொருவர் சந்தித்தமை நன்கு விளங்கவில்லை. கி. பி. 1644-க்குமேற் சில்காலம் தாயுமானவர் திரிசிரபுரம் மௌனகுருமடத்திற்றங்கியிருந்தனர். அந்தக் காலத்திற்கு முன்னமே குமரகுருபரனார் திரிசிராப்பள்ளி நீங்கி வடநாடு சென்றிருக்கவேண்டும். ஆதலின் 1630--48 கி. பி. யில் அடிகள் தென்னாட்டிலே சைவ சமயத்தை நிலைநாட்டினர்போலும், பிள்ளைப் பெருமாளய்யங்காரும் அடிகள் காலத்தவரே.

அடிகள் பிறந்த ஊர் சீவைகுண்டமென்றழைக்கப் படுகிறது. அவ்வூரின் வடபாகத்திலே கயிலாயநாதர் கோயிலும், சைவர்வாழுந் தெருக்களும்உள்ளன. அப் பகுதி கயிலாயபுரம் என்ற பேர் பெறுதற்குரியதே இத்திருப்பதி திருநெல்வேலியிலிருந்து 18 மைலுக்குக் கிழக்கே தாம்பிரவர்ணிக்கரையிலுள்ளது. அதற்கு மூன்று மைலுக்குக் கிழக்கே ஆழ்வார்திருநகரியிருக் கின்றது. திருச்செந்தூர் சீவைகுண்டத்திலிருந்து 18 மைல் தூரத்திற் கடற்கரையிலுள்ளது; அது, முருகக் கடவுளின் ஆறுபடை வீடுகளுட்சிறந்தது; அங்கு வீற்றி ருக்கும் பெருமானே இம்மாகாணச் சைவரெல்லாம் குல தெய்வமாக வழிபடுகின்றனர்கள். "நெடுவேள் நிலைஇய காமர்வியன்துறை" "நஞ்செந்தில்மேல் வள்ளிமணாளன்" என்ற குறிப்புக்கள் முறையே புறநானூற்றிலுந் தேவாரத் திலுங் காணப்படுவன. அடிகள் முதற்கட்பாடிய கந்தர் கலி வெண்பாவினுள், சைவ சித்தாந்த சாரத்தையே தொடக்கத்திற் செவ்விதின் ஓதினமையால், அடிகள் முற்பிறப்பிலேயே சிவநெறி நின்ற பெருந்தவமும், சித் தாந்த உணர்ச்சியும் உடையவரென்பது கருதப்படும். சைவ சித்தாந்த முழுமுதற் பரம்பொருளே திருச்செந் திற் பெருமானென்பதை அடிகள் கலி வெண்பாவினுள் தெள்ளிதின்விதந்தனர். கலி வெண்பாவானது சைவச் சிறுவர் பலராலும் கல்வியும் அன்பும் விளைதற்பொருட் டும் பிணிகள் நீங்கும்பொருட்டும் இன்றும் நாடோறும் பாராயணஞ்செய்யப்பட்டு வருகின்றது. அடிகள் முரு கப்பெருமான் திருவருளை ஐந்தாண்டிற்பெற்றபின்,

உலகநெறி நில்லாது கடவுட்டுறவுபூண்டு சமயநாட்டத் திருப்பணி பூண்டமை, மூன்றாண்டிற்றிருவருள்பெற்ற சமய வேந்தராகிய ஞானசம்பந்தர் அருள்வாழ்க்கையை நினைவுறுத்துகின்றது. அடிகளும் சம்பந்தப்பெருமானைப்போலச் சிவிகை, சின்ன முதலியவற்றோடு சென்றதாயறிகின்றோம். ஆதலால் அவர் குட்டித் திருஞானசம்பந்தரெனப்படுதற்குரியர். மதுரையிலே பிள்ளைத் தமிழியற்றியகாலை அம்மையால் முத்தாரமிடப் பெற்று ஆட்கொள்ளப்பெற்றனர். தம்மைப் பாடுவித்ததும் கேட்டதும் அம்மையேயென்று தமது திருப்பாடலொன்றிலே அடிகள் அறிவுறுத்தியுள்ளார். மீனாட்சியம்மை யிரட்டைமணிமாலை 17ம் பாட்டு :—

"கடம்பவனவல்லி, செல்வக்கற்பூரவல்லி
மடந்தையபிடேகவல்லி—நெடுந்தகையை
ஆட்டுவிப்பாளாடலிவட்காடல் வேறில்லையெமைப்
பாட்டுவிப்பதுங்கேட்பதும்" என்றது காண்க.

'பிள்ளைத்தமிழென்பது, தமிழிலே சிறு காப்பிய வகைகள் தொண்ணூற்றாறினுள் ஒன்று. அரசரையும் பெரியோரையும் குழந்தைப்பருவத்தினராகப் பாவித்து அன்பு தோன்றப் பாடுவதுபோலத் தெய்வத்தைப் பாடுதல் வழக்கமாயிற்று. அங்கயற்கண்ணம்மை தடாதகைப் பிராட்டியாராகத்தோன்றி அருமைச் சிறுபுதல்வியாகத் திகழ்ந்தமையால், பிள்ளைத்தமிழ்க்குரியளாயினள். பிள்ளையைக்காக்கும்படி, காத்தற்கடவுளாய திருமால் முதலிய

பல தெய்வங்களைவேண்டும் பகுதி காப்புப்பருவமெனப் படும். குழந்தை இரு கைகளையும், இரு முழந்தாளையு மூன்றித் தலைநிமிர்ந்தாகும்பருவமே செங்கீரைப்பருவ மெனப்படும். இது குழந்தை தவழ்தற்குத் தொடங் குங்காலம். இப்பருவமுதற்றான், குழந்தையின் செயல் கள் சிறப்பாகப் பிறரை மகிழ்விப்பன, பெற்றோரும் உற்றோரும், தாலாட்டுவதைக் குழந்தையறியும் பருவம் தாலாட்டுப்பருவம், குழந்தை இருகைகளையுங் கொட்டி விளையாடும்பருவம் சப்பாணிப்பருவமெனப்படும். முத்த மிடுவதைக்கண்டு குழந்தை மகிழும் பருவம் முத்தப் பருவம். குழந்தை தளர் நடையுடன் விரும்பினவர் பாற்செல்லும்பருவம் வருகைப்பருவமாம். திங்களைக் குழந்தையொடுவிளையாட அழைக்கும்பருவம் அம்புலி பருவம், இதுவரை ஆண்பாற்பிள்ளைத்தமிழும், பெண் பாற்பிள்ளைத்தமிழும் ஒத்த பகுதியுடையன. சிறுவர் விளையாட்டாகிய சிறுவீடழித்தல், சிறுபறை முழக்கு தல், சிறுதேருருட்டுதல் என்று மூன்றும் ஆண்பாற் பிள்ளைக்கவியிலும், அம்மானை, நீராடல், ஊசலாடல் என்பன பெண்பாற்பிள்ளைத்தமிழிலுஞ் சிறப்பாகப் பாடப்படும். இவ் வேறுபாட்டை அடிகளுடைய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழையும், முத்துக்குமார சாமி பிள்ளைத்தமிழையும் ஒத்துப்பார்ப்பதாலினிது விளங்கும்.

குறமென்பது முக்காலத்துச் செய்திகளையும் குறத்தி பாடுவதாக அமைக்குஞ் சிறுகாப்பியமாகும்.

குறவஞ்சியென்பது, இசை நாடகவுறுப்புக்களொடு பாடப்பெறுஞ்சிறுநூல். இரட்டைமணிமாலையென்பது வெண்பா, கட்டளைக்கலித்துறையென்னும் இருவகைப் பாட்டுக்களாற்றொடுக்கப்படுவது. ஒவ்வொரு வகையி லும் பப்பத்துப் பாடல்கள் பாடப்பெறும். இது மாலை போன்ற பிரபந்தமாதலின் ஒவ்வொரு வகைப் பாட் டொன்றிற்குப்பின் மற்றொருவகைப் பாட்டமைத்துப் பாடுவது. அதாவது இருவகையும் விரவிவருவது. அடிகள் மீனாட்சியம்மைமீதும், சிவகாமியம்மைமீதும் இரட்டைமணிமாலை பாடினர். மும்மணிக்கோவையென் பது மூவகைப் பாட்டுக்கள் விரவி, முப்பதுப் பாட்டுக் களால்முடிவது. நான்மணிமாலையென்பது நால்வகைக் கவிகளாற் பாடப்பெற்று நாற்பது பாட்டுக்கொண்டது. அடிகள் பாடியமும்மணிக்கோவையிரண்டும் நேரிசை வெண்பா, கட்டளைக்கலித்துறை, நேரிசையாசிரியப்பா வென்னு மூவகைப்பாட்டுக்களுடையன. திருவாரூர் நான்மணிமாலை இவற்றோடு ஆசிரியவிருத்தமுமுடையது. அடிகளுடைய பிரபந்தங்கள், பட்டினத்தடிகளுடைய பிரபந்தங்களை நினைவுறுத்துவன; அடிகளது கலம்பகங் களிரண்டும், அகத்துறைகள் மலிந்துள்ளன; கலம்பக மென்பது, பாவும், பாவினங்களும், சொல்லணி பொரு ளணிகளும் விரவப்பெற்று உலகியலை நன்கு தெரிக்குஞ் சிறுகாப்பியமாகும்; கலம்பகத்திற்கு உறுப்புக்கள் பதி னெட்டென்ப அவற்றின் மேலும்உள்ளன. அந்தாதித் தொடையால் அது செய்யப்படுவது, வீரப்புகழ்ச்சிக்

காகப் புயவகுப்பு அமைந்துள்ளது. பெண்டிர் விளை யாட்டைக் குறிப்பதற்கு அம்மனை, ஊசல் என்னும் பகுதிகள்உள்ளன. மதங்கியார், பிச்சியார், கொற்றியார் குறத்த, மறவர், கள்ளுண்பார், பாணர், சாலவித்தைக் காரர், தவவேடத்தர், போலிச்சித்தர், வலைச்சியர், இடைச்சியர் முதலியோர் உலகவாழ்க்கையில் மக்க ளோடுபழகி, மக்கள் குடிவாழ்க்கையிற்கலத்தலின் அன்னோர்க்குரிய பாடல்கள் கலம்பகத்துட் காணப் படும். ஒருதலைக்காமம், தூதுவிடுதல், பிரிவாலிரங்கல் தழைகொடுத்தல் முதலியதுறைகட்குரியபாடல்களும் உலகியல் தெரிப்பனவே. உலகியல் நயங்களையமைத்துக் கற்பார் உள்ளத்தை மகிழ்வித்தற்குக் கலம்பகமே சிறந்த சிறுகாப்பியமாகும். பாக்களிற் பலவகுப்புடைய மயங் கிசைக் கொச்சகக்கலிப்பா, வஞ்சியினங்கள், மடக்கு, திரிபு முதலியவற்றின் சொன்னயங்களையேற்ற பெற்றி விரிப்பதற்குங் கலம்பகமே இடந் தருகின்றது, கலம் பகம் மக்கள் சார்பாகப் பாடப்படின் நூற்றிற்குக் குறைந்த செய்யுட்களாலும் அமைபப்பெறும்.

அடிகளது செயயுட்கோவையானது நால்வகைப் பாவின் பலவகைகட்கும் எடுத்துக்காட்டுகளுடையதாய் ஆசிரியாது செய்யுளியற்றும் பெருவன்மை தெரிப்ப தாகும். அடிகள் அருட்கவி இலக்கணங்கற்றவரல்ல ரென்று ஒரு புலவர் குறைகூறியதைச் சிலர் அடிகட்கு அறிவித்து அவரை இந்நூல் பாடியருளும்படி வற்புறுத் தினமையால் அது பாடப்பெற்றதென்ப. நீதிநெறி

விளக்கம் உயரிய செந்தமிழ்ச் சொன்னடையுடைய தாய்க் குருபாஞூ தூஉலகியலறிவு ஆழத்தையும், அகலத்தையும் உணர்ந்துங்கண்ணுடிபோல்வது. இத னைப்பற்றி ஓர்கதையுமுண்டு. திருமலை நாயக்கர் ஒரு நாள் உணவுகொள்ளக் காலந்தாழ்த்ததையறிந்த அடிகள் அவரிடம் "வகுத்தான் வகுத்தவகையல்லாற்கோடி தொகுத்தார்க்குந்துய்த்தலரிது" என்னுந் திருக்குறளை எடுத்தியம்பியனர். அதனைக்கேட்ட மன்னன் "இது யாண்டுளது" என்று வினவ இது திருவள்ளுவரிலுள்ள தென்றபோது அந்நூல் விரிந்ததாகலின், சுருக்கமான ஓர் அரியநீதிநூலினை அடிகள் பாடித்தரவேண்டுமென்று கேட்டதற்கிணங்கி, அடிகள் நீதிநெறிவிளக்கம்பாடின ரென்ப. அடிகள் பாடிய துண்டிவிநாயகர்பதிகம் பெரிய விருத்தங்களையுடையது. அதன்கண் வட மொழிக்கலப்பு அதிகமாகக் காணப்படுகின்றது. கயி லைக்கலம்பகம் முற்றிலுங்கிடைத்திலது. அதனையுஞ் சேர்த்து அடிகள் பதினறு பிரபந்தங்கள் பாடினரென் றறிகின்றோம். பதினறுகலைகளையுடைய முழுமதிபோல அவர் நூற்கோவை விளங்குகின்றது.

அடிகள் தருமபுரவாதீனஞ்சென்ற காலை ஆண்டு வீற்றிருந்த மாசிலாமணி தேசிகர் அவ்வாதீனத்து நான் காவது தலைவராய் விளங்கினர். ஆதீன முதற்றலைவர், திருவாரூர் திருஞானசம்பந்த தேசிகர் என்பார். அவர் திருவாரூரிலே ஞானப்பிரகாசரிடம் மெய்யறிவுரைபெற் றவர். அடிகள் முதற்றலைவரையும், தமது ஞானசாரி

யாரையும் வேறுபடுத்தவில்லையென்பது பண்டார மும்மணிக்கோவையாற்றெளியப்படும். முதற்றலைவர் திருப்பதியாகிய திருவாரூர்க்கும், "ஐந்து பேரறிவு" என்னும் பாட்டிற்குரிய தில்லைத்திருப்பதிக்குஞ்சென்று மீண்டபின், அவர் ஞானோபதேசம் பெறுவாராயினர். அப்பாட்டின் சொற்பொருளை அடிகள் உணராதவரல்லர். அதன் அனுபவப் பயனையே தேசிகர்பாலுணர்ந்தனர். பெருந் தவத்தினராய அடிகட்கும்அறிவுரைநல்கும் பெருந்தகையாரையுடைத்தாயிருந்த ஆதீனத்தின் பெருமை இற்றைக்காலத்துக்குன்றினமை, கழிவிரக்கந் தருவதே.

உலகப் பெருஞ்செல்வத்திற்பிறங்கினுலும், அடிகளைப்போலத் தாழ்மைமிக்க தூயபேரன்பிற்சிறந்த உள்ளமுடையார் வேறொருவருமிலர் என்பது பண்டார மும்மணிக்கோவையாற்றெள்ளிதிற்புலனும், பண்டார மும்மணிக்கோவையைக் கலைமகள்துணைகொண்டு திருவருளினாலே தாம்பாடியதாக அடிகள் உரைத்ததோர்க.

"உள்ளத்தருள் நின்றுணர்த்த என்நாவில் உறைந்த வெள்ளை
வள்ளக் கமலத்தவள் மாசிவாமணி வண்புகழில்
எள்ளத் தனையளவோர் தொடையாக்கி யிசைத்தனளாற்
கள்ளப்புலன் கொண்டுரைத்தே னலனிக்கவி முற்றுமே"

அடிகள் திருவாரூரிலே ஞானப்பிறவியெய்தவும், தில்லையிலே கூத்தப்பெருமான்றிருவருட்காட்சி பெறவும், காசியிலே முதல்வனோடுகலக்கவும், உரிய பெருந்

தவத்தினராயினமைகாண்க. அடிகள் காசியிலே மடமமைத்துச் சைவத்தை நிலைநாட்டாவிடின், தென்னாட்டுச் சைவசித்தாந்தமொன்றுண்டென்பதை வடநாட்டினர் அறிதற்கிடமிராது. மகம்மதியர் ஆட்சி திறம்பெற்றிருந்த அக்காலத்திலே காசிக்குச் செல்லுஞ்சைவர்க்கு வசதிகள் அமைதல் எளிதன்று.

மொழியுங்குலமுஞ் சமயமும் வேறாக உடைய மக்கள் கூட்டத்தினடுவே எல்லா வசதிகளுமமைத்து விசுவேசரை வணங்கும் பேறுதந்த பெருமான் குமரகுருபர முனிவரே யென்பது சைவருள்ளத்திலே யென்றும் நின்று நிலைபெறுதற்குரியது.

அடிகள் காசியிலே நிகழ்த்திய பல அற்புதங்களைப் பற்றிய விவரம் நமக்கு நன்கு கிடைத்திலது. சிங்கமுதுகின்மேற் குருபரனார் ஏறிச்சென்றமைக் கறிகுறியாகக் காசி மடத்திலே ஒரு கல்வடிவம் அமைந்துள்ளது. இக்காரணம்பற்றியே அம்முத்திமாநகரின்கண் ஏனைய மடங்களினுங் குமாரசாமி மடத்திற்கு மிகுந்த மதிப்பு ஏற்பட்டிருக்கின்றது. புறச்சமயத்தார் நடுவே அற்புதங்களாலன்றி வழக்கீட்டினால், சமயத்தை நிலைநாட்டுதல் அரியதாகும். அடிகட்குப் பின்வந்தோர், காசியிலே செந்நெறிகடைபிடித்துச் சைவத்தை நிலைநாட்டியிருப்பின், இன்று வடநாடு முழுதுஞ் சைவசித்தாந்தம் பரவியிருத்தல்கூடும். பின்வந்தோர் பொருளீட்டத்தையும் பாதுகாப்பையுங்கருதித் தென்னாட்டிலே

தமக்கு நிலையான இடத்தையமைத்துக்கொண்டனர் போலும். "முனிவரு மன்னவருமுன்னுவ பொன்னான் முடியும்" என்றதற் கேற்பப் பொருளீட்டம் வேண்டப் படுவதேயெனினும், அப்பொருள் உயரிய நோக்கங்களை மட்டுமே நிறைவேற்றப் பயன்படாவிடின், தீமையும், இடையூறும் விளைவித்தல்கூடும். பொருட்பயனாவது, மெய்ப்பொருளாய சிவன்றிருவருளினைத் தேடிக்கொள் வதேயாம். இதனைத்தெளிந்து சிவநெறியையுஞ் செந் தமிழையும் பேணுதலே திருமடத்தார் கடமையா மென்க.

அடிகள் திருச்சிராப்பள்ளியிலே வைணவத்தை யும், திருவாரூரிலே சிவசமவாதத்தையும், தில்லையிலே ஏகான்மவாதத்தையும், காசியிலே தருக்கமதத்தையுந் தழுவிய மக்களோடுவாதிட்டுவென்றனரென்று அறி கிறோம். இவற்றின் இயல்பினைச் சுருக்கியுரைத்து இப் பகுதியை முடிக்கின்றோம்.

வைணவமதமானது, ஆதியில் சைவசமயத்தின் ஆறு பகுதிகளுள் ஒன்றாயிருந்து, பின் வேற்றியல் படைந்தது; அரியையும் சிவசக்தியையும் உடன் பிறந் தாராகக்கூறும் வழக்கம் யாருமறிந்ததே. "அரியலாற் றேவியில்லையையனையாறனார்க்கே" என்ற தேவாரத்தை யும், "சிவசக்தியின் புருடவடிவாயவிண்டு" என்றக் காமிகாகமக்கருத்தையும் உற்றுநோக்குமிடத்தே, அரி சமயமானது சிவசத்தியை ஆண்வடிவமாகக்கருதி வழி

பட்டாரது நெறியாக ஆதியில் விளங்கிற்றென்று கருத இடமுண்டு. பிற்காலத்தே மும்மூர்த்திகளுள் ஒருவராகிய காத்தற்கடவுள் வழிபாடு தழைத்தோங்கவே, பண்டைவிண்டுநெறி அதனுள்ளடங்கித்தன் வடிவமிழந்தது. இராமகதை, பாரதக்கதை முதலிய கதைகளுங்கலந்தபின் திருமாலுக்குப் பத்துப் பிறப்புக்கூறப்பட்டது. இது "பிறப்பித்தோரிலையே" என்ற பரிபாடற்கருத்தொடு முரண்படுவது. பிறக்கின்றதெய்வம் கடவுளன்றென்பது சைவ சித்தாந்தக் கொள்கையாதலின், வைணவம் கடியப்படுவதாயிற்று. மும்மூர்த்திகளுக்கப்பாற்பட்ட அவர்கள் தலைவனைச் சிவனெனவழிபடுவோர், மும்மூர்த்திகளுள் ஒருவராயவிண்டுவைத் தலைவனோ டொப்பக்கருதாரென்பது தெளிக. பிற்காலத்தே வைணவமானது ஏகான்மவாதக்கலப்புற்று, சித்துஞ்சடமுமாய உலகனைத்துங் கடவுளிடமிருந்து தோன்றுவதே, சித்துஞ் சடமுங்கடவுளின் பகுதிகளே யென்ற விசிட்டாத்துவிதக் கொள்கையைப்பற்றிய போது, அக்கொள்கைசித்திலிருந்து சித்தேதோன்றும், சடத்திலிருந்து சடமேதோன்றும் என்னுஞ்சற்காரியவாதத்திற்கிழுக்காமாதலின், சைவ சித்தாந்திகளால் அது மறுக்கப்படுவதாயிற்று. பிள்ளைப்பெருமாளய்யங்கார் இலக்கண இலக்கியம் வல்லராய்ப் பாவன்மையுடையராய்த்திகழ்ந்த அன்பர். அவர் சாத்திரநுட்பமுணர்ந்தவரல்லர், தன் திருமால்பத்தி காரணமாகச் சைவத்தை மறுக்க முன்வந்தவர், அவர் எவ்வாறு சைவசித்தாந்தப் பேராசிரியராய குமரகுருபரனரை வெல்லுதல்கூடும்?

இக்காலத்தே சைவரும், வைணவரும் தத்தஞ் சமயதத்துவக் கொள்கைகளையுணர்ந்து, பண்டைத் தமிழரது திருமால் வழிபாட்டைக் கடைப்பிடிப்பராயின் இரு சமயத்தார்க்குமுள்ள சமய முரண்பாடு தூரம் போய்த்துச்சமாய்விடும்.

இனி, சிதம்பரத்திலே குருபரனார் காலத்தே ஏகான்மவாதம் தலையெடுக்கக்காரணம் விளங்கவில்லை. தில்லைவாழந்தணர் ஆதியிலே சிவநெறியைக் கடைப் பிடித்தவர், அவர்கள் சுமார்த்தக்கொள்கையினரல்லர். இக்காலத்திலே அன்னோர் சுமார்த்தரோடு கலக்கக் கருதுகின்றார்கள். அவர்களைச் சுமார்த்தக்கொள்கை யினராக்கு முயற்சி அடிகள் காலத்திலேயே நிகழ்ந்தது போலும்; அவர்காலத்தே அது பலிக்கவில்லை. கடவுளரின் பெருந்தன்மையையுணர்ந்து, கடவுளோடு அத்துவித பாவனைசெய்வோர் கூறியமொழியினைப் பொருள் கொள்ள அறியாது அவற்றிற்குத்திரிவுப்பொருள் கொண்டமையால் ஏகான்மவாதம் உலகிற்றோன்றிய தென்ப. "மண்ணானாய் மலையானாய்" என்றால் பொன் பணியாதல் போல, இறைவனே மண்ணாகவுமலையாகவு மானான் என்று கொள்ளின், அது சித்திற்குஞ் சடத் திற்குமுள்ள வேறுபாடறியாமையான்வந்த இழுக் காதல்போலச் சிற்றறிவும், சிறுதொழிலுமுடையன வாய உயிர்களை இறைவனையென்று கோடலும் பெருந் தவறாகும்.

சிவசமவாதமென்பது சைவத்தின் உட்பகுதியாய அகச்சமயத்துள் ஒன்று; முத்திநிலையடைந்த உயிரானது கடவுளைப்போல ஐந்தொழிலுமியற்றவல்லதாய்க் கடவுளைப்போன்ற பேரறிவுடையதாய் விளங்கும் என்ற கொள்கையுடையது. முத்தியெய்திய உயிரானது கடவுளைப்போல ஐந்தொழில் நடத்துவதாயின் கடவுளின் வேறாகிய தனிமுதலாக அது காணப்படும். கடவுள் அறிவிக்க அறிந்துஞ் செய்விக்கச்செய்தும் அவனுக் கடங்கிநிற்கும் உயிரின்செயல் இறைவன் செயலாமே யன்றி உயிரின் செய்கையாகாது; கடவுட்கு உயிர் சமமாயின் பல கடவுளர் உளர் எனப்பட்டுக் கடவுள் ஒருவரே என்னுங்கொள்கை பொய்யாம். ஆன்மாவானது ஒன்றைச்சார்ந்து நிற்பதென்னுமியல்பறியாதார் கூற்றே இஃதாமாகலின், சிவ சமவாதம் அறிவிற்குப் பொருத்தமாவதன்று. முப்பொருளுண்மைமாத்திரமறிந்து அத்துவிதக்கலப்பி னியல்பறியாதார் சிவசமவாத வென்னுங் கொள்கையைப்பிறப்பித்திருத்தல்கூடும். இதனைப்போலச்சிறிதுபிழைபட்ட கொள்கைகளே சைவசித்தாந்தத்திற்குக்கீழ்பட்ட அகச்சமயங்களெனப்பட்டன.

துருக்கர்மதம் ஒரு கடவுளை வணங்கவேண்டுமென்றும், மகம்மதிய மக்களுள் வேற்றுமை பாராட்டக்கூடாதென்றும் போதிப்பதாகலின், சைவசமயத்தின் ஒரு கடவுட்கொள்கையும் விரிந்த நோக்கமும் அம்மதத்திற்கு ஏற்றனவாயின. ஆனால் மகமதிய மதத்தினர் புலாலுண்ணுவதிற்பெரிதும் பழகியவராதலின்,

அடிகள் புலாலை யொழித்தல் தக்கதன்றென்றார்கள் போலும். ஆனால் மகம்மதியர் பன்றிப்புலாலை வெறுத்தவர்கள். அதனையறிந்த அடிகள் அவர்கட்கு நல்லறிவுச்சுடர்கொளுத்தினர். எம்மதமும் மக்கட்குரித்தே யென்பதும், உயர்ந்தார்க்குச் சித்தாந்தக்கொள்கை ஏற்றதென்பதும், மகம்மதிய அரசர்க்கு அடிகள் வாயிலாகக் கைவந்த உண்மைகளென்னலாம். எச்சமயம் இந்நாட்டில் உலாவினும் அதனைத் தன்னுளடக்கியுள்ள ஒரு சமயம் சைவசித்தாந்தமென்பது குமாரகுருபரப் பெருமானது காசி வாழ்க்கையால் வடநாட்டிலும் நிலைநிறுத்தப்பெற்றது.



# குமரகுருபர அடிகள் நூல்களின் ஆராய்ச்சி.

---

கந்தர்கலி வெண்பாவினுள், குமரகுருபரர் சைவ சித்தாந்தக் கொள்கைகளைத் தொகுத்துரைத்தமை போலப் பிறர் எவரும் சிறுதுதிநூலுள் அவற்றை யியம்பவில்லை. அவர் ஐந்தாண்டிலேயே இந்நூல் இயற்றினராகலின், முற்பிறப்பிலேயே அவர் சைவ சித்தாந்த நூற்பயிற்சியிற்றலைசிறந்தவரென்பது ஊகிக்கப்படும். கலி வெண்பாவின் முதல் இரண்டடியில், இறைவன், அயனுந் தெளிந்துணர்தற்கரிய பழமறையாலுங் காணப் படாதவன் என்பதுணர்த்தப்பட்டது. (காசிக்கலம் பகம் 2) "உரையாத பழமறையின் முதல் எழுத்தாய" ஓங்காரப்பொருளை அயன் அறியாது முருகப்பிரானால் ஒறுக்கப்பட்டமையால், இவ்வாறு அடிகள் கூறினர் போலும், அதிகாரம் பெற்றுள்ள அயன் முதலிய கடவுளரால், நாதகலை முற்றுமறியப்படவில்லையென்று ஆசிரியர் சிவஞானமுனிவர் பிறிதோரிடத்திற் கூறியதுங் காண்க. 'பழமறை' யென்பது திருவருள்பெற்ற சிவஞானிகளின் கடவுட் பழம் பாடல்கள் என்று கூறுவாருமுளர். (மீனாட்சி பி. 43) "காலத்தொடு கற்பனை கடந்த கருவூலத்துப் பழம் பாடல்" என்றதுமது. பெரியோர்க்கு இறைவன் பிரணவப்பொருளை அறிவுறுக்குமுகத்தானே, மெய்ந்நூலறிவினை அவர்க்கு நல்குகின்றானென்பது

(காசிக்கலம்பகம் 1)

"நீரெழுத்துப் போன்ற உடல்நீத்தார்க்கு நீ நவில்வது
ஓரெழுத்தே முழுதும் அவர் எவ்வண்ணம் உணர்
வதுவே"

என்றமையாலறிக. நூலறிவிற்கு அப்பாற் பட்டவன் கடவுளாதலின், 'பழமறையுங்காணாத' என்றார். மெய்ந் நூற் பொருளைக்கேட்டுச் சிந்தித்துத்தெளிந்து நிட்டை கூடவல்லார்க்கு மெய்ந்நூலானது முற்றிலும் பயன் படுவதாய்ப் பிறர்க்கு மயக்கம் விளைப்பதுபோலுமென் பார், (திருவாரூர் நான்மணிமாலை 28)

தன்னுடைமயக்கந் திசைமேல்வைத்துச்
செல்நெறிபிழைத்தோன் திசைமயங்கிற்றௌன
மொழிகுவதுஎய்ப்ப முதுக்குறைவின்மையின்
பழமறைமயங்கிற்று என்றுமுழுவதும்
எய்யாதுஇசைக் குறும்போலும்
ஐயநின்தன்மை அளப்பரிதுஎமக்கே என்றார்.

பழமறையின் பொருளறியாது, பழமறைமயக்கவுணர்ச்சி தருவதாகக் கூறுதல், திசைதெரியாதவன் தான் மயங்கி நிற்கும்போது, திசை மயங்கிற்று என்றியம்புதல் போலாம் என்றவாறு. இப்போதுள்ள வடமொழி வேதத்துட் பலதெய்வப்பெருமை பகரப்படுதலின் (சிதம்பர மு. 16) 'வேதபுருடனும் யாதுநின் னிலையெனத்—தேறலன் பலவாக்கூறினனென்ப' என்றார். வேத வியாசர் காசியிலே விசுவநாதர்திருமுன், விண்டுவிற்குப்

பாத்துவங்கூறிக் கைதம்பித் தமைகூறியவிடத்தே, வேதத்தின் மயக்கவியல்பு குறிக்கப்பட்டது.

"முன்னைநான் மறையுமுறைப் படநிறிஇய
மன்னிருஞ் சிறப்பின்வாத ராயணனுங்
கையிழந்தனன் அதுபொய் மொழிந்துஅன்றோ"

என்றது காண்க.

'பழமறை' என்ற சொற்றொடர் அடிகள் காலத்தே வடமொழி வேதங்களையுங் குறிப்பதற்கு வழங்கலாயிற்று. (மீனாட்சி பி. 2) 'பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப்பசுங்கொண்டலே' என்றவிடத்துஅதுபுலனாதல்காண்க. பழமறைகட்கு மூலம் நாததத்துவம். அது பரம்பொருட்காட்சிக்குரிய சுத்த மாயையின் முதற்பகுதியாதலின், அதனை அடிகள் (கந்தர்கலி 2, 3) 'தேமேவு நாதமும்' என்றார். நாதத்தின் நுட்பப்பகுதி நாதாந்தமாம். அது எல்லாத் தத்துவத்திற்கு மேற்பட்டதாகலின், அது முடிவெனப்படும். 'நாதாந்த முடிவும்' என்றது அதனையே. சடமாகிய தத்துவங்களின் உதவிகொண்டு அறிதல் பாசஞானமாம். பாசஞானத்தால் இறைவன் அறியப்படானாகலின், 'பழமறையும் நாதமும் நாதாந்தமுடிவுங் காணாத' என்றார்.

உயிரானது, பாசத்தின்வேறாகத் தன்னைக்கருது மறிவு பசுஞானம். அது பாசக்கலப்பற்ற அறிவாகலின், அதனை அடிகள் (க. கலி வெண்பா 3, 4) 'நவைதீர்ந்த போதம்' என்றார். இறைவன் உயிர்களின் சிற்றறிவிற்கு அப்பாற் பட்டபேரறிவுப் பெரும்பொருளாதலின்,

'நவைதீர்ந்த போதமுங் காணாதபோதமாய்' என்றார். பிற அடிகளின் கருத்து வருமாறு :—

(க. க வெ. 5) இறைவன் சடப்பொருளிற்குரிய முதல், நடு, முடிவு என்ற அளவைக்கடந்தவன், அவன் என்றும் ஒரு படித்தாய் உள்ளவன். (6) அவன் இன்ப வடிவினன். அவன் இயல்பாகவே கட்டுட்படாதவன், அவன் குணங்குறியில்லாதவன். (7) எங்கும் நிறைந்த வன், அவன் எத்தன்மையனென்று எம்மால் உணரப் படாதவன். (8, 9) தன்பொருட்டு ஐந்தொழில் செய்வா னல்லன்; அவன் பெருவடிவம், மன முதலிய கரணங் களுக்கெட்டாதது. உயிர்கள் மேல்வைத்த பெருங்கரு ணையாலே சிவம், சத்தி, சதாசிவம், ஈசாம், சுத்தவித்தை என்ற ஐந்து தூயதத்துவ வடிவங்களை அதிட்டித்து அவற்றாற் றடக்குறாத இன்பப்பொருளாய், எவ்வுயிர்க் கும் அடிப்படையான ஒப்பற்ற சார்பாய்ப் போக்குவா வில்லாத முதல்வனுய் விளங்குகின்றான். இந்திர சால வித்தையியற்றுவான், பிறரைமயக்குமயக்கந்தனக்கில் லாது நிற்றல்போல, இறைவன் உருவத்திருமேனி கொண்டும், எம்மைப்போல அதன்கண் தடக்குறுவா னல்லன், மாயையின்கண் உலகமெல்லாந் தோற்றுதற்குக் காரணனுயும் தனக்கு ஒரு காரணமில்லாதவனுயும், முதல்வன் விளங்குதலின், அவன் 'கருவின்றி நின்ற கருவாய்', 'உருவின்றி நின்றஉருவாய்' நிற்பவன்.

இறைவன், விழைவு, அறிவு, செயல் என்ற மூன்று வகையான ஆற்றலுடையவன். அவனது விழைவாகிய

இச்சாசத்தி ஒரு தன்மையதாய் உலகை உய்விக்குந் திருநோக்கமுடையது. அறிவு, செயல் என்னும் ஞான சத்தியுங் கிரியாசத்தியும் ஒன்றினென்று மிகுந்துங் குறைந்தும் இயலும். அவனது ஞானசத்தி பொது வகையாகச் சுத்தமாயையிலே தொடர்புற்றகாலே, சிவ தத்துவமென்ற அதன் பகுதியுளதாம். அவனது கிரியா சத்தி சுத்தமாயையைப் பொதுவாகச் செலுத்தியகாலே சத்தி தத்துவமுண்டாம், சுத்தமாயாகாரியங்கள் எல் லாம் இவற்றின் ஒடுங்குதலால், இவை இலயதத்துவ மெனப்படும், அத்தத்துவங்களிலே இறைவன் அருவாய் நின்று இலயமூர்த்தியெனப் பெயர்பெறுவன். இலயமா வது ஒடுக்கம். இறைவனது இருவகைச் சத்திகளும் ஒத்துநின்றியலுங்காலே, சுத்தமாயையினின்று சதாசிவ தத்துவமென்பதுளதாம். அதனோடு தொடர்புற்ற முதல் வன் அருவுருவத்திருமேனியனாய்த் தோற்றமுறும் எல்லாவற்றிற்கும் அடிப்படையான பாதுகாப்பாயமை யும் நிலையே போகமூர்த்தமெனப்படும். போகம், பாது காப்பு என்னும் பொருட்டு. இரு சத்தியுங்கலந்த நிலை யிலே, கிரியைமிகுந்து எல்லாவுலகமுந் தோற்றுவிப்ப தற்கு இறைவன் கொள்ளும் உருவத்திருமேனி அவ னது அதிகாரநிலையெனப்படும். அதிகாரமாவது, அதி கரித்தல், விரிதல், வளர்தல் என்பதே. இதற்கிடமா யுள்ள சுத்தமாயையின்பகுதி, ஈசுரதத்துவமெனப் படும். இறைவனது ஞானசத்திமிகுந்து, உயிர்களின் அறிவு விளங்குதற்கு மூலகாரணமாய எழுத்தோசைகள்

மந்திரவடிவமா யமைதற்குரிய சுத்தமாயைப்பகுதியே சுத்தவித்தை யெனப்படும். அஃது, முதல்வனது தூலமாய உருவத் திருமேனிக்குரிய இடமாதலின், அவனது அதிகாரமூர்த்தநிலயமாம். இறைவனது முச்சத்திகளையும் மும்மூர்த்தங்களையும் மூவகைத்திருமேனியையுங் குறிப்பார்.

கந்தர் கலி வெண்பா.

"ஆக வருமிச்சை யறிவு இயற்றலால் இலய
போக அதிகாரப் பொருளாகி—யேகத்
துருவு மருவு முருவரு வுமாகி" என்றார்.

இறைவன் உயிர்கட்குப் போகத்தையும் வீட்டினையும் கொடுத்தற்கும், தீவினைப்பயனை ஊட்டுவித்தற்கும் முறையே போகவடிவங்களும் யோகவடிவங்களும், வேகவடிவங்களும் கொண்டருள்வனாதலின், 'பருவ வடிவம்பலவாய்' என்றனர். படைக்கப்பட்ட உலகனைத்தும் இறைவனுக்குத் திருமேனியே. அது ஒலியுலகம், பொருளுலகமென்றிருவகைப்படும். முன்னையது எழுத்து, பதம், மந்திரம் என்று மூவகைப்பட்டு, உயிர்களின் உடம்புகளைப் பற்றிநிற்கும். பின்னையது கலை, தத்துவம், புவனம் என்னு மூன்று பகுதிகளுடையது. இவற்றுள் மந்திரங்களை உதிரமாகவும், பதங்களை முடியாகவும், எழுத்துக்களைத் தோலாகவும், புவனங்களை உரோமமாகவும், தத்துவங்களை எழுவகைத்தாதுக்களாகவும், கலையை, அவயமாகவும் அடிகள் கூறியருளினர்.

(கந்தங்கலி வெண்பா) "தாங்கரிய
மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப்—பந்தனையால்
ஒத்த புவனத்துருவே யுரோமமாத்
தத்துவங்க ளேசத்த தாதுவா—வைத்த
கலையே யவயமாக் காட்டும் அத்துவாவின்
நிலையே வடிவமாய் நின்றோன்" என்றது காண்க.

இனி அண்டங்களை இறைவன் திருமேனியாகவும் நிற்பனவு நடப்பனவுமாய பொருள்களெல்லாம் அவனுக்கு அங்கமாகவும், இறைவனது முச்சத்திகளும், அவனது அந்தக்கரணங்களாகவும் கூறுவார்,

"பலகோடி
அண்டம் உருவாய் அங்கம் சராசரமாய்க்
கண்ட சத்திமூன்று உட்கரணமாய்" என்றார்.

காசிக்கலம்பகத்துள் (78ம் பாட்டு) அண்டகோளம், இறைவன்றிருமுடியாகவும், பாதலம் ஏழும் அவன் தாள்களாகவும், எட்டுக்குலவரைகளும், அவன் புயங்களாகவும், முச்சுடரும், அவன் கண்களாகவும், இருப்பதாக அடிகள் செப்பியருளினர். சிதம்பர மும்மணிக்கோவை 8ம் பாட்டினுள்ளும் இக்கருத்து வந்தது காண்க.

கலம்பகம்.

"வான மொன்று வடிவு அண்டகோளமே
மவுலி பாதலமேழ் தாள்மலை யெட்டு
நான மொன்று புயமுச் சுடருமே
நயன மாப்பொலியுமகிலேசனே"

இறைவன் பெருவடிவிற்குச் சிறு அம்பலமாகிய சிற்றம்பலம் போதாதென்ற நயம், மும்மணிக்கோவையுட் காண்க. அண்டமுழுதும் நிறைந்து, அதற்கப்பாற் பட்டு அளப்பில்லாதவன் முதல்வனுகலின், (காசி க. 79) 'அகிலாண்டமாய் அகண்டமான அகிலேசா' என்றார். (சிதம்பர செய்யுட்கோவையுள் 59) 'அருவமு முருவமு மாகி நின்றுமவ் வருவமு முருவமும் அகன்று நின்றனே' என்றதுமது. இறைவன் சிவமுஞ்சத்தியுமாய் விளங்கு மாதொருபாகனுயினும், மெய்ம்மையாகத் தனக்கென ஒருடம்பை வேண்டாதவன், ஆதலின்,

(மதுரைக்கலம்பகம் 13.)

'விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனரே யாமாகில்
அருமை யுடம் பொன்றிருகூறுவதேன் அம்மானே
ஆனுலுங் காயமிலே யையரவர்க் கம்மானே'

என்ற விடத்து அடிகள் இரட்டுறமொழிந்தார். மதுரேசர் தமது அன்பரது பகைவனைத் துணித்துவென்றனராயின், அவருடைய திருமேனி சத்தியுஞ்சிவமுமாம் இருபிளவாய்த் தோன்றுதல் எதனுலே? அங்ஙனந் திருமேனி யிருபகுதிப்பட்டும், அவர் தீங்கியாது முற்றிலர். கூறுபட்டமையாலாய காயம் யாதுமில்லை என்பது ஒருபொருள். மற்றொருபொருளாவது :—'எல்லாத் தெய்வங்களினும் யானே பிறவியை யொழிப்பேனென்று ஆன் கொடியாகிய விருதினையுயர்த்திப் பிறவியை யறுக்குங் கடவுளாய இவர், மாதொருபாக வடிவங்கொண்டார்; அது உயிர்கட்குப்போக மளித்தற்பொருட்டுக்

கொண்ட திருமேனியே. 'தம்பொருட்டு உடம்புயாதும் வேண்டிற்றிலர்' என்பதே.

ஆண் பெண் ஆகிய எவ்வுருவும் இறைவன் இறைவியின் திருவுருவமே யென்பார்.

(சிதம்பரச் செய்யுட்கோவை 68)

'எவ்வுருவு நின்னுருவு மவளுருவு மென்றன்றே
அவ்வுரும் பெண்ணுருவும் ஆணுருவுமாயவே' என்றார்.

சத்தியும் சிவமும் பொருட்டன்மையால் ஒன்றே யென்பார்.

'நின்னலாதவளில்லை யவளலானீயில்லை
என்னில் நீயேஅவனு மவளுமாயிருத்தியால்'' என்றார்.

இருபகுப்புந் தன்பாலுடைமையால் இறைவனை ஒருவனென்று கூறுதலுந்தவறு, ஒருத்தியென்றலுந்தவறே. (செய்யுட்கோவை 54) 'ஒருவர்' என்ற பொதுப்பெயரே அவர்க்கேற்றது என்றார். ஆணும் பெண்ணும் அல்லாதவற்றின் வடிவமும் அவர் வடிவமேயென்பார்,

(மதுரைக்கலம்பகம் 4)

'அவன் அவள்அதுவெனும் அவைகளி லொருபொருள்
இவன் எனஉணர்வுகொ டெழுதருமுருவினை' என்றார்.

இறைவனது அளப்பருந்தன்மை யுரைப்பார்,

(மதுரைக்கலம்பகம்)

'இலதென உளதென இலதுள தெனுமவை
அலதென அளவிட அரியதோர் அளவினை
குறியிலன் அலதுஒரு குணம்இலன் எனநினை
அறிபவ ரறிவினும் அறிவரும் நெறியினை' என்றருளிச் செய்தார்.

நமது அறிவுட்பட்ட ஐம்பூதமும் ஞாயிறுந்திங்களும் உயிரும் இறைவனது எண்வடிவமாகக் கருதுதல் ஒருமுறை. (செய்யுட்கோவை 54) 'மருவருக்கன் மதிவளி வான் இயமானன் தீ நீர் மண்ணென்னும் எண்வகையுறுப்பின்வடிவுகொண்ட', (சிதம்பர மும்மணி 10) 'இருபெருஞ்சுடரு மொருபெரும் புருடனும்-ஐவகைப் பூதமோடெண்வகை யுறுப்பின்—மாபெருங்காயந்தாங்கி' என்றும் வருவன காண்க. செய்யுட்கோவை 68ம் பாட்டினுள், ஒரு தொழிலுமில்லாதநீ ஐந்தொழிலும் எவ்வாறு உடையாய்? தொழில்செய்யுங் கரணங்கள் நினக்கில்லை, ஐந்தொழில் விளையாட்டும் உன் பெயரை வைத்து உன்சத்தி நடத்துவதே, உன்சத்திக்கு விளையாட்டு விருப்பமுண்டோவெனின், அது கிடையாது, அவ்விளையாட்டும் உயிர்கள் பொருட்டே யாமன்றோ. விருப்பின்மையால், நினக்குத்துயரம் யாதுமில்லை. உண்மையாகத்துயருறுவதும் உயிரே. நீ முனிவையோவெனின், உனக்கு அச்செயலுமில்லை; எவ்வுயிரும் ஈன்றெடுத்த திருவருட்சத்தி முனிவதும் அவற்றின் நலன்பொருட்டே.

'இன்னருளே மன்னுயிர்கட்கு எத்தொழிலும்
அன்னை முனிவதுந் தனயர்க்கருள்புரிதற்கேயன்றே'

என்றமையால், இறைவனது இயற்கைச்சிறப்பும் பேருளும் புலனாதல்காண்க.

உலகங்களையெல்லாம் இறைவி யுண்டாக்கிப் பாதுகாக்க, இறைவன் அவற்றை ஒடுக்குவது அம்மை

கட்டிய சிற்றில்லை ஐயன் அழித்தாற்போலுமென்ற கருத்தை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழுள் அடிகள் அழகாக விரித்துரைத்துளர். அது வருமாறு:— (மீ. பி. 8) உலகைச் சூழ்ந்துள்ள வட்டமாமலை சுவராக வும், எட்டுப்பெருமலைகளும் எடடுத்தூண்களாகவும் அமைத்து நடுத்தம்பமாக மேருவினைநாட்டி, அண்ட கோளத்தாலே மேன்மூடப்பெற்ற சிறுவீட்டினுள்ளே ஞாயிறு, திங்கள் என்னும் இருவிளக்கேற்றி, பிரளய வெள்ளமாகிய நீரிற்கழுவிய புவனங்களென்னும் பழங் கலங்களை எடுத்து அடுக்கி உயிருள்ளனவுமில்லனவுமாய படைப்பெனும் புத்துணவை அக்கலங்களிற் பெய்து வைக்கின்றாய், உன உழைப்பினைக்கருதாது, நீ பன் முறைகட்டுஞ் சிறு வீட்டினை மீட்டுமீட்டும் அழித் தொழித்துப் பரவெளியிற் றிரியும்பித்தன் ஒருவன் தன்முன்னின்று கூத்தாடியவுடன், மகிழ்ந்து சின மொழிந்து நாள்தோறும் சிதறிய பொருள்களையெல்லாம் எடுத்தடுக்கிப் பெரிய பழைய உலகவீட்டினைவேய்ந்து செம்மைசெய்யும் ஒரு பச்சிளம் பெண்பிள்ளையாய நீ செங்கீரை யாடியருள்க:—

(மீனாட்சி குறம் 47)

'வைத்த பகிரண்டமெனும் மணற்சிற்றில் இழைத்
திழைத்துஓர்
பித்தனுடன் விளையாடும் பெய்வளையைப் பாடுவனே'

என்றதுமது. கூத்தப்பெருமான் திருவடிவம் எவ்வாறு ஐந்தொழிலைக் காட்டுகின்றதென்பது பின்வருஞ் சிதம் பர மும்மணிக்கோவை யடிகளால் விளங்கும்.

பூமலிகற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பில் நானிலவளாகமும்
ஏனைய புவனமு மெண்ணிங்குயிரும்
தானேவகுத்த துன் தமருகக்கரமே. (உடுக்குக்கை)

தனித்தனி வகுத்த சராசரப்பகுதி
அனைத்தையுங் காப்பதுன் அமைத்த கைத்தலமே.
(அபயக்கை)

தோற்றுபுநின்ற அத்தொல்லுலகு அடங்கலும்
மாற்றுவது ஆரழல் அமைத்ததோர்கரமே.
(நெருப்பமைத்தகை)

ஈட்டியவினைப்பயன் எவற்றையு மறைத்துநின்று
ஊட்டுவதாகும் நின் ஊன்றியபதமே.
(முயலகனை மிதித்தஅடி)

அடுத்த இன்னுயிர்கட்கு அளவில்பேரின்பம்
கொடுப்பது முதல்வ நின்குஞ்சிதபதமே.
(தூக்கியபாதம்)

உலகமொடுங்கும்பொருட்டு முதல்வன் ஊனநடன மியற்றுவது மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் 33ம் பாட்டினுட் கூறப்பட்டது. உயிர்கள் தவத்தால் இறைவன் திருவடிவம் பெற்றாலும் அகிலாண்டத்தைப் படைப்பதும் ஒடுக்குவதுஞ் செய்யவல்லரல்லர். அவ்வாற்றல் இறைவன் ஒருவனுக்கே உள்ளது. ஆகலின்,

(காசிக்கலம்பகம் 17)

'சுற்றமாகச் சுடலேயில்வாழ்வதும் தோலுடுப்பதும்
தொண்டர்க்கரிது அன்ருல்.........................
கற்பந் தோறுங்கடை நாளுலகெலாம்
செற்று மீளப்படைக்கவும் வேண்டுமே
தேவரீர் பதஞ் சித்திப்பதில்லேயே' என்ருர்.

பதம் என்பது தனிநிலேயைக்குறித்துநின்றது.

இறைவன் திருவருள் பதியப்பெறின், யாரும் எத்தொழிலுஞ் செய்யவல்லவராவரென்பது அடிகள் கருத்து. (செய்யுட் கோவை 74)

'விரும்பும் பெரும்புலியூ ரெம்பிரானருள் மேவிலொரு
துரும்பும் படைத்தழிக்கும் அகிலாண்டத் தொகுதி
யையவே'

எழுவகைப்பிறப்பினுள் தேவப்பிறவியும் ஒன்ருமாதலின், 'தேவன்' என்ற சொல்லாலே பிறப்பிறப்பில்லாத கடவுளே விளித்தல்தவறு. ஆனுல் 'மகாதேவன்' என்று மறைகள் அவனே வழங்குகின்றன. மறைகளின் பொருளேத் தெரிவதோ அரிது. மறைகள் கடவுள் திருவாக்காமெனின், அவனே தன்னியல்பை மறைத்துத் தன்னே அவ்வாறு கூறினன்போலும் என்பார்,

"ஆருயிர்க் கமைத்த ஒரெழு பிறப்பினுள்
முற்படு தேவருள் முதல்வன் என்றெடுத்துக்
கற்பனே கடந்த கடவுள் நிற்பழிச்சுதும்
தொன்மறைக் குலங்கள் முன்னியது யாதெனப்

பன்முறை தெரிப்பினும் பயன்கொள அரிதால்
தேவரின் ஒருவன் என்று யாவருமருள
... நீயே நின்னிலை நிகழாது மறைத்துக்
கூறிய தாகும்'' என்றார்.

இறைவன் உயிர்களின் பொருட்டியற்றியருளிய அருஞ்செயல்களை வியப்புச்செயலாகப் பாராட்டுதல் அத்துணைசிறந்த முறையாகாது. அவைகள் அவனது பெருங்கருணைத் திறனைக்காட்டுமேயன்றிப் போற்றலைக் காட்டுவனவாகாவென்பார், இறைவனைநோக்கிக் கூறுவதாவது:—(செய்யுட்கோவை 68) 'எவ்விடத்தில் எப்பொருளும் ஒருங்குஉண்ண இருக்கும் நீ—வெவ்விடத்தை எடுத்து அமுதுசெய்ததும் ஓர் வியப்பாமோ?' (காசிக்கலம்பகம்) மூவுலகினையும் நினது கட்பொறிக் கிரையாக்கும் பெரியோய், விண்ணிலுலாவிய மூன்று எயில்களையழித்தமை பெருமையோ? 'மேதக்கபுவனங்கள் தொலைத்திடுநீ வெகுண்டாய்போல்-மாதக்கன் பெருவேள்வி தொலைத்ததும் ஓர்வன்மையோ? நீ மாலயன் அடிமுடிகாணாதவாறு நின்றனையென்னின், எங்கு நிறைந்த பரம்பொருளாகிய நீ ஓரிடத்தில் நெடியதோருருவங்கொள்ளுதல் கடினமோ? அண்டத்திற்கப்பாலுள்ள பெரும்புறக்கடலை உன் பெருவடிவத்தின் ஒரு சிறுபகுதியாகக்கொண்ட நீ, ஒருபோறாகிய கங்கையைச் சென்னியிலேற்றமை பெரிதோ? நின் அடியார்களே காமவெகுளிமயக்கத்தை பொழிக்குமாற்றலையுடையராயிருப்ப, நீ காமனைவென்றமை ஓர் அருஞ்செயலோ?

உனது இனியபல திருநாமங்களுள் ஒன்றை யிடைவிடாதுபயிலுமன்பர் நமனை வெல்லுதல் கூடுமாயின், நீ அவனையுதைத்தமை போற்றத்தக்கதோ? மாயையினாலே எல்லாவுயிர்களையு மயங்குவிக்கும் நீ, தாருகாவனத்திலே சில பெண்டிரை மயக்கினமை அற்புதமோ?' என்பதே. இதனால் இறைவனது வியத்தகு செயல்கள் அவன் கருணையின் விளைவாதலோடு, மிக எளிதாய் நிகழ்வனவேயென்று எம்மனோர்க்கு அடிகள் அறிவுறுத்திய வாறும்.

இறைவன் ஒழிவில்லாத முயற்சியுடைமையால் ஓய்வின்றி உறக்கமின்றியிருக்கின்றானென நகைச்சுவை தோன்றக் கூறுவார்,

(காசிக்கலம்பகம்)

"இருப்பார் அவிமுத்தத்து எங்கே கண்மூடுவர்
என்றும்வெள்ளிப்
பொருப்பாளர் ஓடித் திரிவதல்லா லிப்புவனங்களை
உருப்பாதியிற் படைத்து ஓர்பாதியிற் றுடைத்து
ஊழிதொறும்
விருப்பு ஆருயிர்களின் மேல்வைத்துத் தாஞ்செயும்
வேலைகண்டே"

என்றார். 'அவிமுத்தமெனப்படுங் காசியில் இருக்கும் பெருமானார், உயிர்கள் மேல்வைத்த கருணையால், தம்முடைய உடம்பின் ஒருபாதியிலே எல்லாவற்றையும் படைத்து, மற்றொருபாதியிலே அவற்றைஒடுக்குவதால்,

திருமேனி முழுவதும் இளைப்பாறும் நேரம் வாய்க்கப் பெற்றிலர். மேலும், வெள்ளிமலையிலுறைவது மாத்திர மன்றி, வெள்ளியாகிய பணக் குவியல் உடைமை யால், பணத்தைக் காத்திருக்குங் கவலையுடையார்க்கு எவ்வாறு கண்மூட முடியும்? தாம் தமது அன்பராகிய அதிகாரமூர்த்திகளை யதிட்டித்துத் தமது எண்ண மாத்திரையானே நிகழும் தொழில்களைக் கண்ணுற்று முத்தித்தானத்திலிருப்பார், உறங்கார்' என்ற பொருள் வளம் இச்செய்யுளுட் ததும்புதல் காண்க. முதல்வனார் போக்குவரவற்றவராதலின் 'இருப்பார்', அவர் எல்லாங் காட்டுவதோடு காண்பதுஞ்செய்கையால்; வேலைகண்டே யிருப்பார்; 'தேய்தலும் பொன்றுதலுமிலாகலின், எங்கே கண்மூடுவர்? இறைவன் உலகைத்தோற்றுவிப் பதும் ஒடுக்குவிப்பதுமாத்திரமன்றிக் காப்பவனு மவனே யென்பார், (மதுரைக் கலம்பகம் 11) 'மழகதிர் வெயில்விட ஒழிவிடு சுடர்வலயங்கொடு லோகமடங்கச் சுமந்தன' என்றார். முத்தொழிலின் வினைமுதல் நீ, மூவர்க்குமுழுமுதல் நீ, என்றமையால், இறைவன் முத் தொழில் செய்யுமூவருள் ஒருவனல்லன்' என்பதை யினிதுவிளக்கினர். இறைவனது திருவருட் செயல்கள் முரண்படும் பல்வேறு திறத்தனவாமெனின், அவை உயிரறிவுக்கெட்டாத அவனுடைய வரம்பிலாற்றலை விளக்குவனவே. அவை எமக்கு வியப்புவிளைத்தல் இயல்பே. சிவஞ்சத்திகட் குருவமொன்றாயிருப்பவும், சிவ்பெருமான் ஐயமேற்றுண்ணவும், அம்மை முப்பத்

திரண்டறம் வளர்க்கும் வண்மை காட்டவும், அமைந் தமை உலகத்திலெங்கும் காணப்படாததென்பார்,

(திருவாரூர் நான்மணிமாலை 8)

"ஒருகாலத் திவுருவமற் றென்றே
இடப்பால் முப்பத்திரண் டறம்வளர்ப்ப
வலப்பால் இரத்தல் மாநிலத்தின்றே" என்றார்.

இறைவன் உமையம்மைக்கு அறம்வளர்ப்பதற்கு ஒரு சிறிதும் போதாத அளவுள்ள இருநாழிகொடுத்தது பொருத்தமில்லை, (சிதம்பர மு. 18, காசிக்கலம்பகம் 41) தன்றேவிக்கு மிகக்குறையாகக் கொடுத்து, பிற ராகிய அன்பருக்கு முத்திச்சரக்கறையைத் திறந்துவிட் டதும் ஒரு பொருத்தமின்மையே. இறைவன் எச்சம யத்தவர்க்கும் அவ்வவர்பொருளாயும், யாவர்க்கும் பொதுவாகவும் விளங்குவதை ஒரு அழகிய செய்யுளால் அடிகள் உணர்த்துகின்றார்.

"இதுவே பொருளென் றெவர்எவர் கூறினும் ஏற்பது எது
அதுவே பொருளென் றறிந்துகொண்டேன் அப்பொருள் எவர்க்கும்
பொதுவே யென்றானும் பொருந்துமெல் லோர்க்கும் பொதுவில் நிற்கும்
மதுவேய் மலர்ப்பொழி லாரூரினும் வைகும்வைகலுமே'

இதனுள், 'ஆரூரினும்' என்பது திருவாரூரினு மென்றும், எவருடைய ஊரினும் என்றும் இருபொரு

ளுடைமை காண்க. இறைவன் ஐந்தொழிலியற்றுங் காலை உயிர்களின் பக்குவத்திற்கேற்றவாறு தம்முள் ஒவ்வாமை போற்றோன்றும்பல் வேறுசெயல்களைச்செய் வன். "எந்தைதான் இன்னன் என்றும், இன்னதாம் இன்னதாகி, வந்திடானென்றுஞ்சொல்ல வழக்கொடு மாற்றம் இன்றே" என்ற சிவஞானசித்தித்திரு விருத் தத்திற்கூறிய கருத்தினை அடிகள் அழகாகத் திருவாரூர் நான்மணிமாலை 24-வது செய்யுட்கண் விளக்கினர். அது வருமாறு:—முழுமுதற்பொருளாகிய சிவம் ஒரு காலத்திலே ஆமையோட்டினையணிந்து தலையோடேந்திப் பெண்கள் நிற்குங் கடைவாயில்தோறும்போய் ஐயம் ஏற்றுண்ணும்; பிறிதொருகாலத்திலே, மால் அயன் மகவான் முதலியோர்க்குப் பதவிகள் கொடுத்தும் எடுத் தும், அன்பர்க்குதவியும், அவர் பகைவரையொறுத்தும் அரசியற்றினும் இயற்றும்; மற்றொரு பொழுதிலே செஞ்சடைவிரித்து வெண்ணீறுபூசி, எருக்குமாலைசூடி யோகியாய் நிற்பினு நிற்கும்; மடந்தையோடுறைந்து புலந் தும் புணர்ந்தும் போகநெறி போற்றினும் போற்றும், ஞானமுத்திரைகாட்டி மோனத்திருப்பினுமிருக்கும்; அது கற்பனை கடந்ததாகலின், அது நிற்பது இந்நிலை தான் என்னும் நியமமோவின்றே'.

இறைவன் தமது துன்பத்தைக்கண்டும் விரைவில் அருள்புரியாமைக்கு அடிகள் ஒரு கற்பனைக்காரணம் கவினுறச்செப்பினர்:—மும்மூர்த்திகளும் அகண்ட மூர்த்தியென்று வழிபடும் அண்ணலே, உன்பொன்

னடித் தொண்டுபூணும் பேற்றிற்குரியனல்லேனெனி னும் உனது அடியாரின் சார்புபெற்றுடையேனுதலின், சிற்றறிவினனுகிய எனது துன்பந்தீர்ப்பது உன்கடன் என்பதை நீ அறியமுடியாததென்பதில்லை. நீ அறிந்தும் தீராதவஞ்சத் தீப்பிறவியால் வருந்திச்சோருவேனுகிய எனது துயரத்தை ஒழித்தருளுகின்ருயில்லை. ஏன் நீ அவ்வாறு என்னைப் புறக்கணித்தனை யென்றுவினவின், பிருகு முதலிய முனிவர் வெஞ்சொல்லால் ஏற்பட்ட பிறவியின்பொருட்டு உடல் சுமந்துழன்ற தேவர்கட் கல்லது

"பிறவியின் துயர் நினக்கு அறிவரிதாகலின்
அருளா தொழிந் தனை போலும்
கருணையிற் பொலிந்த கண்ணுத லோயே" என்றனர்.

பிறிதொருபாட்டிலே அடிகள், இறைவனைநோக்கி 'நீ காலதத்துவத்தைக் கடந்தவனுய்க் காலத்தினியல்பறி யாதவனுதலின், விரைவில் அருள்புரிகின்ருயல்லை, என் றனர்.

(செய்யுட்கோவை 64)

"பல் பே ரூழிசெல்லினு மடிகட்
கொல்லை யுஞ் செல்லாதாகும் ஆகலின்
அளவில் காலம் அலக்கண்உற் றுழலும்என்
தளர்வு நோக்காய் போலு நோக்கிற்
கருணை செய் தருளா யல்லை
அருணலம் பழுத்த ஆடல் வல்லோயே"

இறைவன் நல்லடியார்க்குக் கெடுதிசெய்யும் அற மூர்த்தி யென்றிகழ்வார்போல் அவனைத்துதித்தனர். கண்ணரும் கண்ணப்பரும் அருள்வழிநிற்பவும், அவர்கள் கண்ணைப்பறித்தமையால், (சிதம்பர மும்மணிக் கோவை 13) 'ஒருபிழை செய்யாதருள் வழிநிற்ப—இருவர்கண்பறித்த தருமமூர்த்தி' என்றார். இறைவன் கண்ணப்பர் உமிழ்ந்த நீரை முடிமேல் உவந்தேற்றும், அவர் எச்சிற்படுத்திய ஊனமுதமுண்டும், அவர் செருப்படிக்குச் செம்மாந்திருந்தும் (திருவாரூர் நான்மணி 36) 'விசயன் வில்லடிபொறுத்தும்', 'அருந்தமிழ் வழுதி பிரம்படிக்குவந்தும்', பாவைபாற்றாதுபோயும், 'எளியரினெளியராயினர்-அளியர்போலும் அன்பர்கடமக்கே' என்றவிடத்து அடிகள் இறைவனது பெருங்கருணையை மிகவியந்தனர். மார்க்கண்டர்க்காக மறலியை யுதைத்ததை நயமுறக்கூறுவார், பிறதேவர்காணுத் திருவடியை அவன் கண்டமையாற் பெருந்தவப்படைத்தவன் என்றார்.

(திருவாரூர் நான்மணி 32)

'நின்திருப்பாத நேர்வரக்கண்டு
பொன்றினனேனும் புகழ்பெற்றிருத்தலின்
இமையாமுக்கண் எந்தாய்க்கு
நமனார்செய்த நற்றவம்பெரிதே'

இறைவன் தம் வயமுடையனென்பார் (சிதம்பர மும்மணி 14) 'ஆட்டுகின்றோரின்றி மன்றுளாடு மானந்தத்தேன்' என்றார். அவன் அறிவித்தாலன்றி அவன்

இயல்பினையறிய முடியாது. (சிதம்பர மும்மணி 16) 'நின்பெருந்தன்மை நீயே யிரங்கி—உண்ணின்றுணர்த்தின் உணரில்லதை' என்றது காண்க. (திருவாரூர் நான்மணி 5) கடவுட்கு ஆகாயமே ஆடையாதலின், பகற்பொழுது, அவர் ஆடை வெண்ணிறத்தது. இரவின்கண் அது கருநிறமுடையது, அந்திப்பொழுதில் அது செந்நிறமுடையது, என்றியம்பினர், இதனால், தோன்றுவனயாவற்றையும் இறைவனோடு தொடர்புபடுத்தி நோக்கும் அடிகள் உயர்நிலை விளங்குதல் காண்க.

## உயிரியல்பு.

இதுகாறும், இறைவனியல்பும் வடிவும் ஆய்ந்தனம். இனி உயிர்களைப்பற்றியாய்வாம். கடவுளுக்கும் உயிர்க்குமுள்ள பொதுத்தன்மைகளைப் பண்டார மும்மணிக்கோவை ஏழாஞ்செய்யுளில் அடிகள் இனிதுவிளக்கினர். "கடவுளாகிய உனக்கும் உயிர்களாகிய எங்களுக்கும் தன்மைஒன்றே, இது பொருந்தாதென்னிற் பொருந்துமுறைகாட்டுதும், நீ என்றைக்கு இருக்கின்றாயோ, அன்றைக்கே நாங்களும் இருக்கின்றோம். அழியாநிலைமை நம்மிருவர்க்கும்பொதுவே. வியாபகம் உனக்குளதாயின் எங்களுக்கும் அஃதுண்டு, அறிவென்ற பெயரும் அங்ஙனம் பொதுவே. உனக்கு விழைவு, அறிவு, செயல் என்றும் ஆற்றல்கள் உளவாயின், எங்களுக்கும் அவையுள்ளன". இஃதிவ்வாறாக, உயிர்களின் தனியியல்பினைக்கூறுமிடத்து, (கந்தர்கலிவெண்பா) 'இருண்மலத்துள் மோகமுறும் பல்லுயிர்'.

என்றார். இருண்மலமென்பதைச் சித்தாந்த நூலோர் ஆணவமலமென்பார். ஆணவவிருள், உயிரினறிவை, மறைத்திடுதலால், (கந்தர்கலி வெண்பா) 'ஆணவமான படலங்கிழித்து' என்றார். ஆணவத்தொடர்பால், உயிர் கட்கு அகந்தைமேற் பட்டகாலே, இறைவன் தோன்றான். அகந்தை யொழிந்த இடத்தே இறைவன் தோன்றுவன். இக்கருத்தை அடிகள் மிக அழகாக இயம்பியுள்ளார்.

(பண்டார மும்மணி 6)

"தான் நின்றுழனைத் தனக்குள்ளே யொளிக்கும்
என்றன்மைநிற்க
யான் நின்றபோது எனக்குள்ளே யொளித்திடும்"

(காசிக்கலம்பகம் 83)

"தான் என்றவர்முன் ஒளித்தோடித் தன்னையிழந்
தவர்முன்
யான் என்று சென்றிடுங் காசிப்பிரான்"

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் 61ம் பாட்டிலே, 'அகந்தைக்கிழங்கை யகழ்ந்தெடுக்குந் தொழும்பருளக் கோயிற் கேற்றும்விளக்கே' என்றது காண்க. போகத்தி லாழ்ந்த சிந்தையுடைய விண்ணவர்க்கு இறைவன் தோன்றாமைக்கு ஒரு கற்பனைக் காரணங்கூறுவார், விண்ணோர், இறைவனுக்குத் தீயவிடத்தைக் கொடுத் துத் தாங்கள் அமுதத்தையுண்டமையால், அவன் அவர் கட்கு ஒளித்தனனென்றார்.

'மும்மலம்பொதிந்த முழுமலக்குரம்பையில்', 'கன்ம மலத்தார்க்கு', 'மாயையினாலனைத்துலகும் மயக்குநீ' என்றும் வருவனவாற்றால், உயிர்கட்கு ஆணவத்தோடு, வினை, மாயை என்ற பாசங்களுமுண்டென்பது பெறப் படும். ஆணவமலமாகிய அழுக்கைப் போக்குதற் பொருட்டே, மாயாமலத்துடன் உயிர்களை இறைவன் இணைத்தமையால், (கந்தர்கலி வெண்பா) 'மலபாக முறவே—தந்த அருவுருவம் சார்ந்த விந்து மோகினி மான் பெந்தமுறவே பிணிப்பித்து' என்றார். இதனுள். நுண்ணுடம்பும் பருவுடலுங்குறிப்பிப்பார், 'தந்த அரு வுருவம்' என்றார். விந்து என்பது சுத்தமாயை, மோகினியென்பது அசுத்தமாயை, மான் என்றது பிர கிருதி மாயை. சுத்தமாயையிலே உயிரின் அறிவினை விளக்கும் நால்வகை வாக்குகள் தோன்றுகின்றன. உயிர்களின் செயல், அறிவு, இச்சையென்பவற்றைப் பொதுவாக விளக்கும் கலை, வித்தை, அராகம், என்னுந் தத்துவங்களும் காலம் நியதி யென்னுந் தத்துவங்களும் அசுத்தமாயையிற்றோன்றுவன. உயிரின் ஆற்றல்களைச் சிறப்பாக விளக்கும், குணம், புத்தி, அகங்காரம் என்பன பிரகிருதியிற்றோன்றும். இத் தத்துவங்களோடு பிணிக்கப்பட்ட உயிர் தூலஉடம்பு எடுக்குங்கால், நால் வகைத்தோற்றமும், எழுவகைப்பிறப்பும், எண்பத்து நான்கு நூறாயிரவகை உடலமைப்பும் உடையன.

(சிதம்பர மும்மணி 13)

'முட்டையிற் கருவில் வித்தினில் வெயர்ப்பில்
நிற்பன நெளிவ தத்துவ தவழ்வ
நடப்பன கிடப்பன பறப்பன வாக'

(பண்டார மும்மணி 10)

'ஈரிரு கண்ணுற் றெழுதாம் வகுத்த
ஆறே ழிரட்டி நாரு யிரத்த' என்றது காண்க.

உயிர்கள் எண்ணிலவாதலின், (சிதம்பர மும்மணி 13) 'கண்ணகன் ஞாலத்து எண்ணில் பல்கோடி பிள்ளைகள் பெற்ற பெருமனைக்கிழத்தி' யென்றுமையம்மையை விதந்தோதினர். (சிதம்பர மும்மணி 25)

'பல்லுயிர்த் தொகுதியும் பவக்கடலழுந்த
அல்லல் செய்யுமவா' என்றமையால், அவாவே

பிறப்பிற்குக் காரணமென்ற திருக்குறட்கருத்தை அடிகள் வற்புறுத்தினராவர். அவாவினுல் வினை ஏற்பட்டு, வினைப்பயனை நுகர்தற்குப் பிறவி தொடரும், அவா எல்லையற்றதாகலின், வினையும் அளப்பில்தாகவே பிறவியும் அனையதே. பல்பிறவி யெடுத்தாலும், துன்பம் வந்தபோது பிறவியை வெறுத்தலும், அது நீங்கிய போது, கவலைநீங்கிச் சிற்றின்பத்தாழ்தலும் மக்களியற்கை. பிறவித்துயரத்தை முற்றிலும் உணர்ந்து, அதனைக்களையுமாறு உயிர்கள் முயலாமையின், பிறவி நீங்குவதில்லை. யாக்கை யெடுக்குமுன் உயிர்கிடந்த கேவல நிலையும் பிறவியோடொக்குமாதலின்,

'என்று நீயுளை மற்றன்றே யானுளன்
அன்று தொட்டின்று காறும் அலமருபிறப்பிற்கு
வெரு வா லுற்றிலன் அன்றே ஒருதுயர்
உற்றுழி யுற்றுழி யுணர்வதை யல்லதை
முற்று நோக்கா முதுக்குறை வின்மையின்' என்றார்.

அடிகள் தமது அனுபவத்தைக் கூறுமுகத்தான் எம்மனோர்க்குண்மை யறிவிக்கு மியல்பினர்.

இறை திருவருளாற் பிறவிக்கடலைப் பெரும்பான் மையும் தாம் நீந்திவிட்டமையாற் சிறுபான்மையே இன் னும் நீந்தக்கிடப்பதென்றுங் கருத்துப்பற்றி,

"முந்நீர் நீந்திப் போந்தவன் பின்னர்ச்
சின்னீர்க் கழிநீத் தஞ்சான் இன்னும்
எத்துணைச் சனனம் எய்தினும் எய்துக
அத்த மற்ற அதனுக்கஞ்சலன்யானே" என்றார்.

பெருங்கடல் நீந்தினவனுக்குச் சிறுகால்வாய் அச்சம் விளையாதென்றனர்.

(சிதம்பர மும்மணி 4)

'வறிதே நின் திருமன்ற நோக்கிப்
பிறவா நன் னெறிபெற்ற னனன்றே' என்றமையால்,

அடிகள் பிறவாமை யெய்தினமை தெளிவு, எனினும், மீண்டும் பிறவி வருமோவென்ற ஐயப்பாடும், வரினும் இறைவன் ஆட்கொண்டருள்வன் என்ற நம்பிக்கையு முண்மையால், தமக்கு மேல்வரும் பிறவிகள் சிலவா யமையுமென்பதே அடிகள் கருத்துப்போலும். (சிதம்பர

மும்மணி 20ல்) கூத்தப்பெருமான் திருநடங்கும்பிட்டும், தமது பிறவிநீங்க வில்லையாயின், திருநடனக்காட்சி மறைகூறிய பயன் பொய்த்ததென்று வீணாகப் பிறர் அதனைப்பழித்தல் கூடுமாதலின், தமக்குத் தகுதியில்லையாயினும், கடவுள் உய்தி நல்கவேண்டுமென்றமை அடிகளது பேரின்ப விழைவினையுணர்த்தும். உலகப்பொருளின்கட் செல்லும் அவாவே வறுமை. சிந்தையின் நிறைவு நல்குவதாய அறிவே செல்வம். ஆதலின், அறிவாகிய செல்வமே, தமக்கு வேண்டுமென்றனர்.

(சிதம்பர மும்மணி 25)

"செல்வ மென்பது சிந்தையி னிறைவே
அல்கா நல்குரவு அவாவெனப் படுமே"
"அல்லல் செய்யும் அவாவெனப் படுமவ்
வறு மையி னின்றும் வாங்கி
அறிவின் செல்வ மளித்தரு ளெனக்கே"

இறைவனது திருநடங்கண்டபின், மெய்யன்பில்லாத தமக்கும், அவன் திருவடிதருதல் பொருத்தமே. எவ்வாறெனின் (சிதம்பர மும்மணிக,) 'மருந்தை உண்ணும் விருப்போடு மனமகிழ்ந்துண்டாலும், அருவருத்து முகஞ்சுழித்துத் தலைநடுக்குற்றுக் கண்ணீர் சிந்திக்கொண்டு அதனையுண்டாலும், மருந்து தீப்பிணியைத் திண்ணமாக மாற்றுவதுபோலப் பொதுவில் நடமாடும்நீ பகையும் நொதுமலும் பாராட்டாமல், நடுநிலையாக எனக்குந் திருநடக்காட்சிப் பெரும்பயன் அளித்தலே முறையாம்' என்றனர்.

உயிர்கள் நல்வினைசெய்து அதன்பயன் துய்த்தற் பொருட்டு விண்ணுலகஞ்சேறலும், தீவினையிழைத்து, அதன்பயன் நுகர்தற்பொருட்டுக் கீழுலகம்புகுதலும், இருவினைப்பயன் துய்த்தபின் மீண்டு நில வுலகிற் பிறத் தலும், உளவாமாகலின், அவைகள், மேல், கீழ், நடு என்னுமூவிடத்திற்கும் காற்றாடிபோலவும், வண்டி யுருள் போலவும் சுழலுந்தன்மையனவென்பார், 'கன் மத்துக்கீடாய்க் கறங்குஞ் சகடமும் போற் சென்மித் துழலத் திரோதித்து' (கந்தர்கலி) என்றார். தமது தேசி கன் வாயிலாக, முதல்வனை வழுத்துவார், அவன் உயிர்ப் பயிர்விளைக்கு முதல்வன் என்றார். (பண்டார மும்மணி 10) "மாயையாகிய நிலப்பரப்புடைய பெரியகாட்டிலே, பற்பல புவனங்களாகிய மாகாணங்களிலே நான்குவகை யான வாயில்களையுடையனவாய் ஏழுதிறத்தனவாகப் பருக்கப்பட்ட எண்பத்துநான்கு நூறாயிர வயல்களிலே, உயிர்களென்னும் பயிரை நட்டு, ஊழ் என்ற ஆழமான நீர் நிலைக்கண்உள்ள, தெய்வத்தால் வருவன, தன்னால் வருவன, பிறரால் வருவன என்னு மூன்று மதகுகளை அவ்வப்போது திறந்து, ஆசையென்னுங் கால்வாய் வழி யாக, நுகர்பொருள் என்னும் புதுப்புனல் கொணர்ந்து, அதனைஐம்பொறியென்னு மடையினூடு பருவம்பார்த்து வயல்களிற்பாய்ச்சி, இன்பத்துன்ப மென்னுமிரண்டு ஊற் றின் வெள்ளம் புறம்போந்தோட, அப்புனலை மந்திரம், பதம், வர்ணம், புவனம், தத்துவம், கலையென்னும் அறு வகை ஏரிகளில் நிரப்பி, விளைகின்ற பயிரை விளைய

விடுத்து, விளைந்த பயிரை அறுத்து உரிய இடங்களிற் சேர்க்கும் உழவன் தமது தேசிகன்" என்றனர்.

பல் பிறவிகளிலே மும்மல வயத்ததாய்உழன்ற உயிர், அறிஞர் நல்வழி காட்டக்கண்டு, வீடுபேறு காதலிக்குமென்னும் உண்மையை அடிகள் தம்மியல்புதெரிப்பார் போன்று உலகியற்கேற்ற உருவக நயந்தோன்றச் செப்பினர்,(சிதம்பர மும்மணி 28)'நீங்காது தொடர்ந்த ஆணவநங்கை யென்னும் பரத்தையைப் புணர்ந்து, அவளோடு பிணிப்புற்ற என்றன்மையை யுணராது, அவளை நீங்காது, நீங்கினவன்போல நினைந்து, மோகத்திலழுந்திக் கலந்திருக்கும்போது, அவளது தங்கையிருவருள் குடிலை யென்பவள் ஐந்து புதல்வரைப் பெற்றனள், மோகினி யென்பவள் மூவரைப் பெற்றனள், அம்மூவருட் கலை யென்பவள் வேறு மூவரைப் பெற்றனள், அம்மூவருள், மான்என்பவள் இருபத்துநால்வரையீன்றனள், இங்ஙனம்தோன்றிய முப்பத்தைவரையுங் காமக்கிழத்தியராகக்கொண்டு, அளவில்லாத காலம், அவர்களொடு கலந்திருந்தபோது, இங்ஙனம் முறை பிறழ்ந்து இவரோடு சேர்தலை யொழிகவென்று அறிஞர் உணர்த்தினர், அப்போது அஞ்சி ஐயனே! நின்பால் அடைந்தேன், எனக்கு நீ ஞானக்கொடியை மணம்புரிவித்து, நீங்காத அன்பெனும் பொருள் கொடுத்து இறவாமையென்னும் வீட்டினிலிருத்திக் குறையாத செல்வமுடைய அடியரோடு இனிது கூட்டியருள்வாயாக" என்று வேண்டினர். இதன் குறிப்பு :— ஆணவத்தின் வசப்பட்டபோது தன்னைமறந்து ஆணவவசு

மாய் நிற்றலின், தான் அதனைப்பற்றி நிற்றலை உயிர் அறியாது. நூல்வாயிலாக அதன் நிலை அறிந்தவிடத்து, அதனின் நீங்கமுயன்று, நீங்கியதாகத் தன்னைக் கருதி னும், மலபரிபாகம் வரும்வரை உள்ளபடி நீங்காதிருத் தலின், 'ஏகலன் தணந்தாங் கென்னையுமுணராது' என் றார். குடிலை யென்பதுசுத்தமாயை, அதன் விருத்தி யாகிய சிவதத்துவம்,சத்திதத்துவம், சதாசிவதத்து வம், ஈசுரதத்துவம், சுத்தவித்தை என்னும் ஐந்து தத்துவங்களும், குடிலை பெற்ற ஐம்புதல்வராக உரு வகிக்கப்பெற்றன. மோகினியாவது அசுத்தமாயை; அதின் நின்றும் காலம், நியதி, கலை என்பவை தோன் றின, கலையில் நின்று, வித்தை, அராகம், மான் மூன் றுந் தோன்றின; மானாகிய மூலப்பிரகிருதியினின்று குணம், புத்தி, அகங்காரம், மனம், அறிவுப்பொறி யைந்து, வினைப்பொறியைந்து, பூதநுட்பமாகிய தன்மாத் திரையைந்து, பூதம் ஐந்து, என்னும் இருபத்துநான்கு தத்துவங்களும் தோன்றின. புருடதத்துவம் உயிரே யாதலின் அதனை யொழித்தொழிந்த தத்துவங்கள் முப் பந்தைந்தாயின, உயிர்கட்குச் சகல நிலையில் இத்தத்து வங்களின் தொடர்புண்மையால்இவர்கள் காமக்கிழத் தியரெனப்பட்டனர்.

இறைவன் அருட்குருவாய் வந்த காலை, பிறவிக் கேதுவாய ஊழ்வினையையொழித்து வினைப்பயனை நுகர் தற்குரிய (கந்தர்கலி வெண்பா கண்ணி 24 to 30) 'அறுபது புறக்கருவியையும் எட்டு அகக்கருவியையும்,

பிறவற்றையுங்களைந்து, மூல மலமாகிய ஆணவ விருளை யோட்டி, ஞானக்கண்ணை நல்கி, இறைதன்மையும் உயிரியல்பும் விளக்கி, உலகமனைத்திலும் இறைவன் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையுங்காட்டி, நிலையான பேரின்பத்தை நல்குவன் என்பது.

கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரன் என்றோர் திருப்பேர்கொண்டு—திருநோக்கால்
ஊழ்வினை யைப்போக்கி உடலறுபத் தெட்டுநிலம்
ஏழுமத் துவாக்களிரு மூன்றும் பாழாக
ஆணவ மானபடலங் கிழித்தறிவிற்
காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டிப்—பூணும்
அடிஞானத் தாற்பொருளு மான்மாவுங் காட்டிக்
கடியார் புவனமுற்றுங் காட்டி—முடியாது
தேக்குபர மானந்தத் தெள்ளமுத மாகியெங்கும்
நீக்கமற நின்ற நிலைகாட்டிப்—போக்கும்
வரவு நினைப் புமறப் பும்பகலு
மிரவுங் கடந்துல வாவின்ப—மருவுவித்து என்பதா
லறிக. (கந்தர்கலி)

இதனுள், உடல் அறுபத்தெட்டு என்றது, தாத்துவிகங்கள் அறுபதையும் புரியட்டகப்பகுதி எட்டினையுமென்க. நிலத் தத்துவத்தின் கூறாகிய தோல், எலும்பு, நரம்பு, தசை, மயிர், என்னும் ஐந்தும், நீரின்கூறாகிய புனல், உதிரம், மச்சை, மூளை, சுக்கிலம் என்னும் ஐந்தும், அனற்பகுதியாய உணவுசெறித்தல், துயில், அச்சம், புணர்ச்சி, சோம்பல் என்னும் ஐந்தும், காற்றின்

துணைகொண்டு நிகழும், ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல் என்னும் ஐந்தின் ஏதுவும், வான்துணை கொண்டு நிகழும், வெகுளி, இவறல், விழைவு, பிடிப்பு, பொறாமை என்னும் ஐந்தின் வாயிலும், சொல்லுதல், செல்லுதல், இடுதல், கழித்தல், இன்புறல் என்னும் ஐந்திற்கேது வாயவினைப் பொறியும், நாடிகள் பத்தும், வாயுக்கள் பத்தும், உடல் உள்ளுறுப்பாகிய உணவுப்பை, செறிபை, நீர்ப்பை, மலப்பை, சுக்கிலப்பை, என்னும் ஐந்தும், நெற்றி, கண்டம், நெஞ்சு, உந்தி, மூலம் என்னும் அவத்தையிடம் ஐந்தும், அறுபதாதல் காண்க. இவைகள் தத்துவங்களாலாயினமையால், தாத்துவிகங்களெனப்படும். பூதநுட்பம் ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம் என்னும் மூன்றுங்கூடிய நுண்ணுடம்பு, புரியட்டகம் எனப்படும். அவ்வெட்டையும் உடன் கூட்டி, உடற்பகுதி அறுபத்தெட்டாதல் காண்க. அத்துவாக்கள்—மந்திரம், பதம், வர்ணம் என்று மூன்றினாகிய ஒலியுலகமும், புவனம், தத்துவம், கலையென்னும் பொருளுலகமும் ஆம். நிலம் ஏழு என்றது, உடற்கும் உலகிற்கும் ஆதாரமாய்ச் சுத்த தத்துவங்களோடு தொடர்புடைய நிலைகளை. அவை, மூலாதாரம், உந்தித்தானம், நெஞ்சு, கழுத்து, நாக்கினடி, புருவநடு, உச்சி என்பன. இவற்றின்கண் மந்திரவடிவங்களை அதிட்டித்துக் காரணேசுரர் உளர். பிறவியொழியுங்கால், இவையும், ஒழிதலின், இவையெல்லாம் 'பாழாக' என்றார். முப்பத்தாறு தத்துவங்களையுங்கடந்த அருள்

வெளியைத் 'துவாதசாந்தம்' என்று வழங்குவது மரபு. தலையுச்சிக்குப் பன்னிரண்டங்குலத்திற் கப்பாலுள்ளதாக அதனை நூலோர் பாவித்தனர். பன்னிரண்டங்குல முடிவில் இறைவனை முத்தர்வழிபடு வாராதலின், அன்னோரை, (மீனாட்சி பிள்ளைத்தமிழ் 75) 'துவாத சாந்தத்தொரு பெருவெளிக்கே விழித்துறங்குந் தொண்டர்' என்றார். திருவருளாகிய அன்னையைக் கூறுமிடத்தும், 'துவாத சாந்தப் பெருவெளியிற் றுரியங்கடந்த பரநாத மூலத்தலத்து முளைத்த முழுமுதலே' என்றது காண்க.

அடிகள், உடம்பைப் புன்குரம்பை யென்னும், வீட்டினை, உயிரின் 'புக்கில்' என்றுங்கூறினமை, திருவள்ளுவனாரது அருமை மொழிகளை நினைவுபடுத்தும். நாயனார், "புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுட் டுச்சிலிருந்த உயிர்க்கு" என்றார். அடிகள் காசிக்கலம்பகத்துள் (38ம் பாட்டினுள்) "குடியிருக்கும் புன்குரம்பை குலைந்திடுநாட் கொலைக்கூற்றங்குமைத்த செம்பொன் அடியிருக்கும் பரந்தாமப்புக்கில் புகுந்தானந்த அமுத மாந்திக்கடியிருக்கும் நறைக்குழன் முத்திதிருவை முயங்கிடவுங் கடவேன் கொல்லோ" என்றனர்.

கூற்றுவனாகிய நுளையன், உவர்நீர்க்கேணியாய உடம்பின்கண், சிற்றுயிர்களாகிய மீனைப் பிடித்தற் பொருட்டு, கபம், வாதம், பித்தமென்னும் முத்தலையுடைய தூண்டிலைபிட்டு மீன் தூண்டிலிலகப்பட்டதையுணர்த்தும் வாழ்நாள் எல்லையாகிய சடைக்கருவினைக்

குறிக்கொண்டு பார்த்து, மீனெடுத்துத் தின்பதற்குப் பல்லினை அசைத்துக்கொண்டிருக்கின்றானாதலின், அவன் முயற்சி தவறி அவன் வெட்கப்பட்டுப் புழுங்கும் வண்ணம்,

. (திருவாரூர் நான்மணி 12)

"அருட் பெருங்கடலின் அவ்வாருயிர் மீனம்
கருக்குழி கழியப் பாய்ந்து தெரிப்பரும்
பரமா னந்தத் திரையொடு முலாவி
யெய் தரும் பெருமித மெய்த
ஐய நின் கடைக்கண் அருளுதி" என்றவிடத்து

அடிகள் யாக்கை நிலையாமையை நயமுற அறிவுறுத்தினமை பாராட்டத்தக்கது. உலகப்பற்றறுதலும், இறையருள்புரிதலுமே, அடிகள் எஞ்ஞான்றும்விழைந்த பெருந்தவத்தாராகலின், உலகப்பற்றறுதற் பொருட்டு ஒருவரம் இறைவன் பால் வேண்டுமிடத்தே, அடியர் பெருமையையும் அழகாக அடிகள் நவின்றனர். அது வருமாறு:—இந்திரனது இன்ப வாழ்க்கையும் இருநிதிக்கிழவனது பெருஞ்செல்வமும், காமன் எழிலும், உத்தமயோகியால் அஞ்சி வெறுக்கப்படுவன. அவை கிடைப்பினும், அவர்கட்கு அவை இடையூறாகமாட்டா. ஆனால்; யானோ வாதமிகுந்தகாலை புளிப்புணவும், பித்தமிகுந்தகாலை உப்புணவும், கபமிகுந்தகாலை இனிப்புணவும், பிறவும் நாவிற்கேற்ற சுவை யுளதாமாறு உண்டு, அவ்வவற்றின் மயமாய் நின்று, காமக்கடலின் மூழ்கிப்

பாவமும் பழியும் பற்றுவேனையன்றி, மெய்ப்பொருளறிந்து, புல்லறிவாண்மையை யொழித்து, ஐம்புலன்களையும் வென்று, அறநெறிதலைக்கூடி, தீநெறிதவிர்ந்து, நல்வழிச்செல்லுதற்குத் தவவலிமையற்ற மூடனேனாகலின், எனக்கு ஒருவரம் இறைவனே நீ தந்தருளவேண்டும். அஃதாவது, பெருங்குளிரினாலே நடுக்குற்று வருந்தியகாலை, கரியதுணி பலவற்றைத் தொடுத்துத் தைத்த ஒருடையன்றி வேறொரு ஆடையுங் கிடையாதாகுக. படுப்பதற்கு, வறியவர் வீட்டுப்புறத்திண்ணையல்லது வேறு இடம் இல்லையாருக. கடுமையாகிய பசி ஏற்பட்டால், உப்பில்லாது சமைத்த கூழல்லது, வேறுணவு வாய்விட்டரற்றினும், தருவாரில்லையாகுக. நாள்தோறும் ஒழுக்கமும் உயர்ந்த பெரும்பொருட் கேள்வியுமுடைய மெய்த்தவர் குழாத்தொடுங் கூடியிருக்குமாறருள்க. இவ்வாறு எடுத்த உடல் நீங்குமளவும் உதவிபுரிந்து, நின்மாண்பு மிக்க திருவடியொழியப் பிறிதொன்றையும், யான் இரந்து வேண்டினும் நீ நல்காதிருப்பதே யாகும்" என்றனர்.

வீடு பேறடைதற்குத் தகுதி யெய்தச் சத்திநிபாதம் வேண்டுமென்றும் அதற்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் அமைதல் வேண்டுமென்றும், அடிகள் கந்தர் கலி வெண்பாவுட் குறித்தனர். (கந்தர்கலி வெண்பா கண்ணி 21, 22) சத்திநிபாதம் என்பது திருவருள் வீழ்ச்சியென்று பொருள்படும். சத்தி, அருள், நிபாதம், வீழ்ச்சி. நிலையாமை யுணர்ந்தோர், நல்வினையின் பயனைய

வின்னவர்பதவிகளை விரும்பார். தீவினையின் பயனாய நரகத்துன்பத்தை விரும்பாமை தெளிவு. ஆதலின் நல்வினையையும் தீவினையையும் ஒப்பவே நோக்குவர், இருவினைப்பயனையும் ஒப்ப வெறுத்தல் தான், இருவினையொப்பெனப்படும். இதனால், உலகப்பற்றின்மை தலைப்பட்ட உயிர்கள், நிலைத்த இன்பத்தையவாவும் நிலையே, அவற்றைப்பற்றிய ஆணவமலம் நழுவுதற்குரிய தருணம். அந்நிலையே மலபரிபாகம் எனப்படும். மலங் கழலுஞ் சமயத்திலே, திருவருட் சத்திவிரைவிற்பதிலே, சத்திநிபாதமாம். தமக்குச் சத்திநிபாதம் வரவில்லையாயினும், இறைவன் மெய்ப்பொருளுணர்த்தித் தம்மை ஆட்கொள்ளுதலே சிறப்புடைத்தென்பதை அடிகள் பண்டார மும்மணிக்கோவை 16ம் செய்யுளில் நயமுற நவின்றனர். இறைவனை விளித்துக்கூறுவார் "நீ, மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர் வார, மொழிதடுமாற, உழுவலன்பு அலைப்பச் சத்திநிபாதத்தன்மை வந்தடைந்தோர்க்கு ஞானம் நல்குதல் வியப்பாகாது; மணிவாசகனார் முற்றுமுணர்ந்த பெரியோர் நடுவே, கைக்குறிப்பொன்றையறிவதனுற் கண்ணே செவியாகப்பெற்ற ஊமைப்பெண்ணைப் பேசுவித்து ஆட்கொண்டது வியத்தக்க செயலாமாறுபோல, அடியேனையும் நீ ஆட்கொள்ளுதலே சிறந்தது. நின்திருமுன் எய்திய விசேடத்தால், உய்திபெறாதார் யாருமிலரே, வாழைத்தண்டிலே தழல் கொளுத்தி, அதனைப் பையப்பைய முற்றிலுந் தீப்பற்றும்படி சில சூழ்ச்சிகளியற்றுவதொப்ப, நீ எனக்கு ஞானம் நல்கும் பருவம் வராவிடினும், பையப்பைய

என் பிறவி மயலை யொழித்து அருள்புரிவது நின் கடனே” என்றனர். இன்னும், (பண்டார மும்மணி 19) ‘எனக்குப் பக்குவமில்லையென்று அருளாயாயின், இகழ்ச்சி உனக்கே ஏற்படும், தாய், சினந்து தன் குழந்தையை ஒருகாற்பாராது போயினும், அக்குழந்தையைப் பிறிதொருகால் எடுத்துப் பசியாற்றுதல் அவள் கடனே. நீ குருவாக உருக்கொள்ளுதல் அடிக்கடியன்று, ஆதலின், சமயாதீதப்பொருளை அடியேனுக் கறிவுறுத்தற்கு இப்போது சமயமில்லையென்று மருது, நீ எனக்கு அருள்புரியவேண்டும். விதியின்படி பதினறுண்டெல்லையளவே வாழ்தற்குரிய மார்க்கண்டேயர் பொருட்டு, அவர் உயிரினை உரிய கால வெல்லையிற் கவா வந்த நமனைக்கொன்று அவர் வாழ்நாளை நிலைப்படுத்திய தற்காக, உன்னைக் குறை கூறுவார் யார்? அதுபோலப் பருவமில்லாத எனக்கு நீ அருள்புரிந்தாலும், உன்னைத் தடுப்பார் எவருமிலர்? என்றமை காண்க. மேன்மை தாழ்மை நோக்காது வரையாது வழங்கும் வள்ளல் போல, நீயும் சரியை கிரியை யோகத்தின் மேற்பட்ட ஞானத்தை எனக்கு வழங்கவேண்டு மென்பார்,

(பண்டார மும்மணி 28)

கற்றன ராயினுங் கல்லா ராயினும்
அற்றனம் யாமென அடைந்தனர் தமையெனிற்
காலம் பாரார் கருத்தினை யளவார்
சீல நோக்கார் தீக்குணங் கொள்ளார்
பரிசிலர் வேண்டிய பரிசுமற் றெல்லாம்
வரிசையோ டளிப்பது வள்ளியோர் கடனே,

அதனால்

சரியையிற் றாழ்க்கலை கிரியையிற் பணிக்கலை
யோகத் துய்க்கலை பாகமு நோக்கலை
நாளை யின்றென வொருவேளையு நவிற்றலை
ஈண் டென்னக் கருளுதி யிறைவ
பூண்டுகொண் டிருப்பனின் பொன்னடித் துணையே"
என்றார்.

இறைவனது திருமுன் எய்தியபோது அன்பர் யாவர்க்கும் திருவருட்பதிவு ஏற்படுதலின், பெரியோர்க்குஞ் சிறியோர்க்கும் வேற்றுமையில்லையாகலின், (பண்டார மும்மணி) 'சத்திநிபாதம் நின் சந்நிதிப்பட்ட இத்திறத்தெளிதினி லெய்திய தெனக்கே' என்றார். சிதம்பர மும்மணிக்கோவை நான்காஞ்செய்யுளில் இறைவன் சந்நிதிச்சிறப்பை அடிகள் உவமைகளால் இனிது விளக்கினர்:—(சிதம்பர மும்மணி 4) தவமிக்க பெருந்தொண்டர் மெய்ந்நூலினைப் பல்காலோதி நிரம்பிய அறிவுடையராய், அளவைகளாற் பொருளியல்பினைத் திட்பமாகத் தெரிந்து, பொருட் பொருத்தங்கண்டு, சிவமிதுவெனத் தெளிந்து அம்பலவாணரை ஆராவன்பினோடு மனமாரவணங்கிப் பேராவியற்கை பெற்றனர். யானோ, சரியை, கிரியை, யோக ஞானங்களிற்பயிலாது உன் பொற்றிருமன்றினைவாளா நோக்கிப் பிறவாநெறி பெற்றனன், பொன்னிறப்புறாவும், கருநிறக் காக்கையும் இமயமலையைச் சார்ந்தபோது இரண்டும் ஒரு நிறத்தன வாதல்போல, இன்னருள் பழுத்த நின்றிருமுன் எய்திய

பெருந் தொண்டரும் யானும் பெற்ற பேறு ஒன்றே யாகலான் அன்னோர்க்கும் எனக்கும் வேற்றுமை யுளதோ" என்றனர். பிறிதொரு பாட்டிலே, (பண்டார மும்மணிக்கோவை) ஞானத்தால் அடையும் வீட்டின் பத்தைக் காதலர் மகிழ்ந்துடனுறைந்து நுகருஞ் சிற் றின்பமுணர்த்து மொழிகளால் அடிகள் விளக்குகின் றார். தம்மைத் தலைவியாகவும், தமது குருவடிவாய் நின் றருள்புரியு முதல்வனைத் தலைவனாகவுங்கருதிக் கூறுவ தாவது :— (பண்டார மும்மணி 7) சம்பந்தன் என்ற பெயருடைமையால், எம்மொடு சம்பந்தஞ் செய்தல் நினக்குத்தகும், எடுத்த உடலின் அமைப்பாற் புருடன் என்ற நாமத்தினை நாங்கள் உடையேமாயினும், உயிர் களாகிய நாங்கள், நின்முன் நங்கையர்களே. 'புருடனைச் சத்தியாக' நீ கொண்டதற்கு எடுத்துக்காட்டாவான், புருடோத்தமனென்று பெயர்பெற்ற திருமாலே, (நீ அவனோடு கலந்து சாத்தனைப்பயந்தனையல்லவா?) தலை வன் ஒருவன் ஒத்தவியல்புடைய தலைவியை நாடுதலே பொருத்தமாமெனின், யாமும், அழியாத்தன்மை, வியா பகம், விழைவுசெயலறிவுடைமை, என்னுந் தன்மை களால், உன்னையொத்துளேம். நாங்கள் நின்பெருமை யுடையேமல்லேமெனின், தலைவனுக்குரிய சிறப்பு தலை விக் கின்றெனினுங் குற்றமில்லையென்றுங் கருத்துப் பற்றித் தொல்காப்பிய நூல்,

"உயர்ந்தோன் றலைவன் ஒத்தோட் புணரினும்
இழிந்தோட் புணரினும் இழிபெனப் படாதே"

என்று விதித்தலின்,

காதலி ளெமையருட் கைப்பிடித் தருளி
ஒருவரு முணராப் பரம வீட்டில்
இருள் அறைதிறந்த பெருவெளி மண்டபத்து
உயர்நா தாந்தத் திருமலா மளியிற்
புளகமெய் போர்ப்ப மொழி தடுமாற
உள்ளொலி நாதப் புள்ளொலி முழங்க
ஞான வாரமுத பானம தருந்திக்
கருவிகள் கழன்று பரவச மாகிப்
பரமா னந்தப் பரவையுட் படிந்து
போர வியற்கை பெற்றினி திருப்ப
ஆரா வின்பம் அளித்தருள் எமக்கே.

குறிப்பு:—சிவஞானிகளல்லாத பிறர் உணராத வீடென்பார், 'ஒருவருமுணரா' என்றார். புணர்ச்சிக்குத் தனியிடம் வேண்டுமென்ற குறிப்புப்பற்றி அவ்வாறுரைத்தார். இருள் என்பது ஆணவம். அறை, கட்டினைக்குறிக்கும். ஆணவநீங்கிய கட்டற்றநிலை குறித்தவாறு. நாததத்துவ முடிவின்கண் உள்ளது பரநாதம், அதுவே திருவருள்நிலயம். திருவருட் சத்தியே வீட்டிற்கு ஆதாரமாதலின், அந்நிலயத்தை 'அமளி' என்றார். ஐந்தெழுத்திலுள்ள வகாரங்குறிப்பதும் அஃதே யென்ப. அபராவன்பே, சிவானந்த நுகர்ச்சியை நல்குமாதலின், அவ்வன்பின் மெய்ப்பாட்டினைக் குறிப்பார் 'புளகமெய்போர்ப்ப' என்றார். 'நாதப்புள்ளொலி' யென்றது, உள்நாத மொலித்தற்குரிய ஞானயோகத்தையும், ஞானவாரமுதமென்பது, பரஞானத்தையுங்

குறிக்குமென்ப. 'கருவிகள் கழன்று' என்றமையாற் பிறவியறுதலும், 'பாவையுட்படிந்து' என்றமையாற் சிவானந்தப்பேறுங் குறிக்கப்பட்டன. நிலைத்த பேரின்பமே 'பேராவியற்கை' யெனப்பட்டது. இது திருவள்ளுவர் சொற்றொடர். இதனை அடிகள் பலவிடத்தும் எடுத்தாளுகின்றார்.

(கந்தர்கலி வெண்பா 30, 31ல்) உயிர்கள் மூவகைப் படுமென்றும், ஆணவமல மாத்திரமுடையவர்கட்கு இறைவன் உள்நின்று உண்மைஞானமளிப்பன் என்றும், ஆணவத்தோடு, வினைப்பற்றுமுடையார்க்குத் தமது இயற்கை வடிவொடுதோன்றி மெய்யறிவுறுத்துவனென்றும், மும்மலமுடையவர்கட்கு மனிதவடிவங் கொண்டாதல், மனிதவடிவத்தை யதிட்டித்தாதல் அவன் ஆட்கொண்டருள்வனென்றும் அடிகள் தெளிவுறவோதினர். இறைவன் மானுடச்சட்டை சாத்தி வருதல் பண்டார மும்மணிக்கோவையுள் வற்புறுத்தப்பட்டது.

(பண்டார மும்மணி 19)

"சாயா மும்மலச் சகலரே முய்ய
எம்முருக் கொண்டும் எம்மொடு பயின்று
மும்மலக் கிழங்கை முதலொடு மகழ்ந்து
சிற்பர முணர்த்துஞ் சற்குரு வாய" என்றது காண்க.

இக்கருத்தை அடிகள் அழகிய சில மடக்குகளால் விளக்கிய பகுதி வருமாறு :—

(பண்டார மும்மணி 13)

தலைப்படு கலைமதி தாங்காது ஆங்கத்
தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படும்
மானி டனுய வடிவு கொண்டருளாது
மானி டனுய வடிவு கொண்டருளி
யெற்பணி பூணுது எற்பணி பூண்டு
பாரிடஞ் சூழாது பாரிடஞ் சூழ்தர
ஆரூ ரமர்ந்த ஞான சம்பந்த'' என்றதுமது.

“தலையிற் பொருந்திய கலையுடைய மதியினைத்தாங்காது, மேம்பட்ட சிவஞானமாகிய பேறறிவுடன் விளங்கி, மானை இடக்கையிற்றரித்த வடிவங்கொள்ளாது மனிதனுய வடிவுகொண்டருளி, எலும்புமாலை, முதலியன பூணுது, எனது பணிவிடையை ஏற்று பூதங்களாற் சூழப்பெறுது உலகத்தார் தம்மை வலம் வந்து வணங்குமாறு ஆரூரின்கண் அமர்ந்த ஞானசம்பந்த'' என்பது இதன் பொருள்.

இறைவன் ஞானகுருவாய் வந்து நல்கும் பேற்றினைக் கந்தர்கலி வெண்பாவினுள் அடிகள் விரித்துரைத்தார்.

(கண்ணி 33)

“மூன்றவத் தையுங்கழற்றி முத்தருடனே யிருத்தி
ஆன்ற பரமுத்தி யடைவித்துத்—தோன்றவரும்
யான் எனதுஎன் றற்றவிடமே திருவடியா
மோன பரானந்த முடியாக—ஞானந்

திருவுருவா இச்சை செயலறிவு கண்ணா
அரு ளதுவே செங்கையலரா—இருநிலமே
சந்நிதியா நிற்குந் தனிச்சுடரே எவ்வுயிர்க்கும்
பின் னமற நின்ற பெருமாளே" என்றது காண்க.

மூன்றவத்தை யென்பன, உடலோடுகலவாத தனி நிலை, அதனோடுகூடிய கலப்புநிலை, மயலற்ற போதுள தாய சுத்தநிலை. ஞானம் பெற்றுப் பிறவியற்றவிடத்தே அவத்தை மூன்றுங் கழிந்தொழியும் என்பது அடிகள் கருத்து. முத்தருடனேயிருத்தி என்றது, 'அதிகாரம் பெற்ற முத்தர்களாகிய ஸ்ரீகண்டர், அனந்தர், அணு சதாசிவர் முதலியோரோடு அவ்வவர்க்குரிய புவனங் களிலிருத்திச் சுத்த போகம் நுகர்வித்து' என்னும் பொருட்டு. 'கணாதிபர்களாகிய சுத்தவித்தியா தத்துவ வாசிகளோடு கலந்து அபரமுத்திப்பயன் கொள்வித்து' என்றும் பொருள் கொள்ளுவர். அபரமுத்தர்களும் புவனாதிபதிகளாய உருத்திரர் முதலியோரும், மால் அயன் முதலிய தேவர்கள் இறுதியுற்ற காலையும், இறவா திருப்பர்; அவர்கள், எல்லாம் ஒடுங்கிய காலத்திலே இறைவனோடு இரண் டறக்கலப்பதாய பரமுத்தியடை வர். ஞானம்பெற்ற அதிகாரிகளை அடிகள் என்று மிளை யராயிருப்பரென்னுங் கருத்துப்பற்றி, 'பல்லாண்டு செயச்செல்லா இளையோரும்' என்றனர். பேரிறுதி யாகிய மகா சங்காரமுடிவிலே இறைவன் நட்ட மாடு வதைக் குறிப்பார்,

(செய்யுட்கோவை 64)

"மல்லாண்ட திரடிண்டோட் டுமாய்முதலு மணிநாவிற்
சொல்லாண்டமறைமுதலும் பலராங்குத்தொலைவெய்தப்
பல்லாண்டு செலச்செல்லா வினையோரும் பனிப்பெய்த
அல்லாண்ட நள்ளிருளில் அழலாடுந் தொழிலினையே"

என்றார். முத்தி நிலையுற்ற உயிர்கட்கு இறைவனது பேரறிவுப் பெருவடிவமே எஞ்ஞான்றும் புலனாதலின், தமது அறிவுஞ்செயலும் இறைவனது அறிவு, செயல் என்னுமிரண்டினுள் அடங்கக்காண்பர். அவர்கட்கு, இறைவன் கலப்பாலுளதாம் இன்பமே வரம்பிலதாய்ப் பெருகும். ஆதலின், தஞ்செருக்கற்ற இடமே இறைவன் திருவடியாகவும், சொல்லிறந்த சிவானந்தமே, அவன் திருமுடியாகவும், அவனது முச்சத்திகளே முக்கண்களாகவும், அவனது பேரறிவே திருமேனியாகவும், திருவருளே அவனது அபயத்திருக்கரமாகவும், உலகம் அவன் சன்னிதியாகவும், அவனது பூரண நிறைவே, எல்லா உயிரினும் அவன் கலந்த தன்மையாகவுந் தோன்றுமென்று அடிகள் அறிவுறுத்தினரென்க.

மெய்த்தொண்டர்கள் பெருமையைப் பாராட்டுவதில் அடிகள் அளவற்ற ஆர்வமுடையவர். அவர்களோடு பயிலுங்கால் அவர்களது சிவபாவனைக்குட்பட்டுத் தாம் உய்திகூடியதாக அடிகள் கூறுஞ் செய்யுட்கருத்து வருமாறு:—(சிதம்பர மும்மணி 10) 'புறத்தே தவவேடம்பூண்டு உள்ளே வஞ்சகம் பொதிந்த நெஞ்சனேனாயினும், பொன்மலை வாய்திறந்தாற்போன்ற

பொன்னம்பலமாகிய தெய்வமன்றத்திலே திருநடனக் காட்சி பெற்று உய்தி எய்தினேன். உய்வதற்குரிய பெருந்தவம் யாது முயலாது எளிதில் அதனைப் பெற் றமை எவ்வாறெனில், பொருந்தாவொழுக்கம் பூண் டேனுயினும், தவவேடம் பூண்டதற்குத் தக்க வண்ணம் நின் தொண்டரொடு பழகுவதிலே, அவர்கள் என் வேடத்தைப்பார்க்குந்தோறும் பார்க்குந்தோறும், நின் தன்மை என்னிடத்தேயிருப்பதாய் நினைந்து நினைந்து பலநாள் என்னைக்கருதினமையால், அவர்களுடைய பாவனை முற்றி அதன் பயனுக, அடியேன் பெரும் பேறெய்தினேன். எவ்விடத்தில், அப்பெரியார் உன்னை எண்ணினும், அவ்விடத்தில் நீ இருக்கின்றுய் என்ப தற்கு ஐயம்வேறில்லை. ஆகலின் நிலையுடைப்பொருளும் நிலையிலாப்பொருளும் இன்னவென்று திட்பமாக உள் ளத்திற்கொண்டு, புல்லறிவு நீக்கி, நல்லறிவு கொளுத்தி எம்மனோரையுமிடித்துரைத்து, அறநெறி நிறுவி யெம் மைச்செம்மை செய்தருளத் திருவுருக்கொண்ட நற் றவத் தொண்டர்கூட்டம் பெற்றவர்க்குப் பெறலாகா தவைஉளவோ', என்பதே. தமது தேசிகர் பால் ஒரு வரங்கேட்குமுகத்தால், தொண்டர் பெருமையை அடி கள் விளக்கிய செய்யுட் கருத்து வருமாறு :—(பண்டார (மும்மணி 4) 'பலர் பலவாறு முரண்படக்கூறுஞ் சமயங் களிற் புகுந்துழலாது, தெயவத்தன்மை நிறைந்த சைவ சித்தாந்த நெறிநின்று இறவா நிலைமை பெற்றின்பமார்ந் திருக்கும் பிறவாச் சிறப்புவேண்டும். அது எனக்குக்

கிடைத்தற்கரிதாயின், யான் ஒரு பிறவியை விரும்பு கிறேன். அது ஐந்திருநீழலிலாசனுய்த் திகழும் இந் திரனுகியிருப்பதற்கன்று, மலரோனுகிப் பல்லுயிரையும் படைத்தற்கன்று, பாம்பணையில் அறிதுயில் கொள்ளுங் கடவுளா யுலகங்காப்பதற்கன்று, அப்பதவிகளிலே கேடு றுதல்கூடும். ஆதலின், உயர்ந்த கல்வியும் ஒழுக்கமு மில்லாதவராய்ப் பழிப்புடையாராயிருப்பினும், நின் பொன்னடியைப் புகலாகப்பெற்ற அடித்தொண்டர்கள் 'திருவமுதுண்டு தெருக்கடை யெறிந்த பரிகலம் அருந்தி யிப்பிறவிக் கடலைக்கடக்க முயலும் தவமிக்க நாயாகி, நின் றிருவருளையுமறவாது பிறப்பதாகிய பேறே எனக்கு வேண்டும்' என்றனர்.

இதனுல், சைவசித்தாந்தச் செந்நெறிப் பயன் கொள்ளும் அடிகள் விண்ணவர்பதவிகளை விரும்பாமை புலனும். இக்கருத்தைத் தாமே அழகாக நவின்ற செய் யுட்பகுதி வருமாறு:—

யான் அவர் (=தொண்டர்)
நன்னிலை பெறுதற் கன்னிய னாயினும்
அன்னவர் கமலப் பொன்னடி விளக்கிய
தீம்புன லமுத மார்ந்தன னதனுல்
வேம்பெனக் கொண்டனன் விண்ணவ ரமுதே"

ஐம்புலனுமடங்கப்பெற்ற பேரறிவாளர் பெறும் பேரின்பம் விண்ணவர்க்கரியதாகும். ஐம்பொறியடக் கத்தால், உயிர் தானே தன்னில் இன்பமுறாது இறை

வனைப்பற்றி நின்றே அது இன்புறும், புறப்பொருள் களிற் செல்லா ஐம்பறிவு உள்ளத்துள்ளே விளங்கு முதல் வன் பாற்செல்லும், கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியு மறிவு முதல்வன் மாட்டே தனக்குரியவற்றைப் பெற்று உயிர்க்கின்பந்தரும், அவ்வின்பம் நிலைபெறுவது, உயிரி னறிவிற்கு ஏதாவது பற்றுக்கோடாயிருத்தல்வேண்டும் என்ற உண்மையை விளக்குவார்,

(பண்டார மும்மணி 25)

அடங்கா வைம்புலன் அடங்கினர்க் கம்ம
ஒடுங்கா வைம்புல னுளத்தினு முளவே,
அவைதாம்
செவிப் புலனறியா அகத்தொலி யொன்றே
மெய்ப் புலனறியாத் தட்பமற் றொன்றே
கட்புல னறியாக் கதிரொளி யொன்றே
நாச்சுவை யறியா நறுஞ்சுவை யொன்றே
மூக்குயிர்த் தறியா முருகுமற் றொன்றே
போா வின்பமிப் பெற்றியிற் றிளைக்கும்
ஆரா வின்பமொன் றூர்ந்தனம் யாமே' என்றார்.

(காசிக்கலம்பகம் 37ம் பாட்டு) இறைவன் பக்குவ மிக்கதக்கார்க்கு ஞான நல்குவதுபோலக் காசிப்பதியுள் இறப்போர் செவியிலே பிரணவமறை யோதுகின்று ரென்ற கருத்தொன்று கேட்கப்படுகின்றது.

உலகைநீத்துத் துறவுநிலை நிற்போரே காசிப்பதி யுறைவோ ராவரென்றும், அன்னோர் சிவவடிவையே

நினைந்திருக்குங்காலை இறைவன் அவர் நினைந்த வடி வொடுதோன்றி யருளப்பெற்றுச் சிவசாரூப மடைவ ரென்பதே நூல் நுட்பமென்று கூறுவதுமுண்டு. காசியி லிறப்போரெய்துஞ் சிறப்பினைக் கவிநயந்துளும்ப, அடி கள் ஒரு செய்யுளுட் குறித்தனர்.

(காசிக்கலம்பகம் 48)

பல்லாண்டு தம்மைப்படைத்த அத்தேவரைப்
பார்த்துப்பைம்பொன்
வில்லாண்ட தோள்கொட்டி யெந்தையர்கோல
விடம்பழுத்த
அல்லாண்ட கண்டத்தெம் மாதிப்பிரான் அவிமுத்
தத்திலே
சில்லாண் டிருந்துசிவமாய்ச் செலுஞ்சிறு செந்துக்களே.

காசி யென்பது, சிவனாராகிய தந்தையார்க்கு எவ் வுயிரும் பிள்ளைகளென்று கருதி யாவரும் தம்முள் வேற் றுமை பாராட்டாது இறைவனைப் பூசிக்குந்தலமாதலால் அவண் உயிர்கள் ஞானமெய்திச் சிவமாதல் எளிதென்ற கருத்தால் இவ்வாறு கூறினர். அடியார் எவ்விடத்திற் சிவவிளக்கமிருப்பதாய்ப் பாவித்தார்களோ அவ்விடத் திலே சிவம் விளங்குமாதலின், காசிப்பதியிலுள்ள சிவ னடிப் பேரன்பர் பாவனையால் சிற்றுயிர்களும் சிவமாந் தன்மை யெய்தின என்பாருமுளர். அடியாருடன்கூடி யவர்கள், அவ்வடியார் நினைவின் வழிநிற்பாராதலின், தாமும் அவரைப்போலச் சிவசிந்தனையுடையராய்த்

திகழ்வர். இக்கருத்துப்பற்றியே அன்பரிணக்கம் வேண்டப்படும்.

காசியில் இறக்கு முயிர்களுக்கு இறைவன் ஓங்காரத்தை யோதுவாரென்ற கருத்தைக் காசிக்கலம்பக முதற்செய்யுளிலே 'உரையாத பழமறையின் முதலெழுத்தி னெண்பொருளை வரையாது கொடுத்திடுநின் வள்ளன்மை வாழ்த்துதுமே' என்றறி வுறுத்தனர். காசிப்பதியிலிறப்பார்க்கு அத்தகைய அருட்செயலை இறைவனருளவேண்டுமென்று தவமுனிவர் வேண்டிய வரத்தின்படி இறைவன் அங்ஙனஞ் செய்கின்றாரென்பர் பௌராணிகர். இறக்குங்காலை, சிறந்ததொன்றை நினைப்பின், அது வரும் பிறவிக்கு நன்மை பயக்குமாதலின், எல்லா மந்திரங்களினுஞ் சிறந்த பிரணவத்தை இறக்குங்காற் கேட்டலும் ஓதலும் நன்றென்ற கருத்துப் பற்றியே, பிரணவவடிவாயுள்ள சங்கினொலியை இறந்த நாட்கடனியற்றுங்காலை, முழக்குவது சைவருள் வழக்கமாயிற்றுப்போலும். காசியின் நகரவடிவே பிரணவ வடிவமென்பதையும் அப்பிரணவத்தின் உட்பொருளாகக் காசி நடுவில் விசுவேசர் வீற்றிருப்பதையும், காசியிலிறக்குமுயிர்கள் நினைப்ப தியல்பாகலின், அங்ஙனம் நினைப்பாருடைய உள்ளக்கண்ணிற்குப் பிரணவ வடிவமும், அவர்கள் அகச்செவிக்குப் பிரணவவொலியும், அவர்கட்குப் பிரணவப்பொருளாய முதல்வன் தோற்றமும் நிகழ்தல் இயல்வதொன்றே. காசியிலிறப்பார் பிரணவத்தியானமுடையராதல் வேண்டுமென்பதே இந்த ஐதிகம் நமக்கு அறிவுறுத்துமென்று தெளிக.

இறைவனுக்குத் தசாங்கங்கூறிய கந்தர்கலி வெண்பாப் பகுதிகளிலும், அன்பர் பெருமை புலனுகின்றது. (கந்தர்கலி வெண்பா 65 to 74) இறைவனது மலை, பேரன்பர் உள்ளத்திலுள்ள ஆராவின்பமே; இது அன்பின் உறுதியால் உளதாவது, இறைவன் அன்பர்க்கிரங்கியருளும் ஆனந்தமே, அவனது ஆறு. தத்துவங்கட் கப்பாற்பட்ட அருள்வெளியே அவன் திருநாடு, போக்குவரவின்மையே அவனது நகரம், ஐந்தெழுத்தால் நடைபெறும் வாசியே அவன் குதிரை, சிவஞானமே, அவனது யானை, முற்றறிவே மலர், அன்பே அம் மலரைக்கட்டு நார், அறமே, அவனது ஆன்கொடி, நாத கலையே, அவனது முரசு, புவனம்படைத்து நடாத்தலே அவன் கட்டளை, இங்ஙனம் தசாங்கமுரைக்கப்பட்டது.

குறிப்பு :—அன்பின் உறுதியே, திண்மைபற்றி மலையெனப்பட்டது. சிவானந்தம், உயர்ந்த முதல்வனிடமிருந்து தாழ்ந்த உயிர்களுக்குப் பாய்தலின் ஆறெனப் பட்டது. இறைவன் அருளே எவற்றிற்கும் ஆதாரமாக, அதனுள் எல்லா மடங்குதலின், அதன் விலாசமே நாடெனப்பட்டது. பேராவியற்கைத்தாய வீடே நகரம். ஐந்தெழுத்து மந்திரவொலியால் எல்லாம் தொழிற் படுதலின், அதற்கேதுவாய கிரியாசத்தியே இறைவனது ஊர்தியென்றலுமொன்று. சிறும் யானைபோலச் சிவஞானமானது பாசங்களை அறுத்தொழித்தலின், அதுகளிறுயிற்று. யானைபோல, ஏறுதற்குப் பயன்படுவதுமாம்.

சிவ பூரணமானது, பூவின் நாற்றம்போல் எங்கும் பரவி யிருத்தலின், அது மலராயிற்று. நாதமாகிய ஓங்கார மூலமே, முரசாயிற்று. இறைவன் ஆணைப்படியே, அதி காரமூர்த்திகள் படைப்புங்காப்பு மியற்றுதலின், அவை ஆணையாமென்றார். ஒடுக்கம், தன்னால் நிகழ்தலின், ஆணையாகாது.

இனி, இறைவன் உருவத்திருமேனியை விதந்து கூறவான் கருதிய ஆசிரியர், கந்தர்கலிவெண்பாவினுள், தமக்கு ஐந்தாவதாண்டில் இன்னருள்புரிந்து, திருச் செந்திற்பதியினுறையும் அறுமுகப்பெருமானது திரு வருட் கோலத்தினை இனிதெடுத்தியம்பினர். அக்கடவு ளது ஆறுமாமுகங்களாலும் பன்னிரு கரங்களாலுமியற் றப்படும் அருஞ்செயல்களைத் திருமுருகாற்றுப் படை யுள் ஓதியவாறே தாமும் வழுத்தினர். திருமுருகாற்றுப் படையுள், ‘மாயிருள் ஞாலமறுவின்றி விளங்கப் பல் கதிர் விரிந்தன்றொருமுகம்’ என்றதற்கேற்பக் கலி வெண்பாவினுள், ‘பாச விருள்துரந்து பல்கதிரிற்சோதி விடும் வாசமலர் வதனமண்டலமும்’ என்றார். ‘மறு வின்றி’ யென்பதன் பொருளைப் ‘பாச இருள்’ என்ற மொழிகளாற் றெளிவுபடுத்தினர். ‘ஆற்றுப் படையுள் ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிதொழுகிக் காதலின் உவந்து வரங்கொடுத்தன்றே’ என்னுங்கருத்தினைத் ‘தாகமுடன் வந்தடியிற்றாழ்ந்தோர்மகிழ வரம் பலவுந் தந்தருளுந் தெய்வமுகத்தாமரையும்’, என்னுமடிகளிற்றெரித்தார். ‘மந்திரவிதியின் மரபுளிவழாஅ அந்தணர்வேள்வியோர்க் கும்மே’ என்ற கருத்தை அடிகள் நேராகத் தழுவிக்

கொள்ளாவிடினும், அதன் உயர்நோக்கினை எடுத்தியம்பினர். ஐவகை வேள்வியியற்றி அருந் தவம்புரிவார், ஞானமெய்தி வீடெய்துதற்குரியராகலின், 'ஊழ்வினையைமாற்றி யுலவாத பேரின்ப வாழ்வுதருஞ் செய்யமலர் முகமும்' என்றனர். ஆற்றுப்படையுள் 'எஞ்சிய பொருளை யேமுறநாடித் திங்கள்போலத் திசைவிளக்கும்மே' என்று பொதுப்படக் கூறினாரேனும், உலக வழக்கில் விளங்காத நூற்பொருளை, இரவிலே திங்கள் திசையறிவித்தல்போல, நன்குவிளக்குந் தன்மை குறிப்பானுணரக்கிடத்தலின், அடிகள், 'சூழ்வோர் வடிக்கும் பழமறைகள், ஆகமங்கள் யாவுமுடிக்குங் கமலமுகமும்' என்றார். "செறுநர்த் தேய்த்துச் செல்சமமுருக்கிக் கறுவுகொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே' என்ற ஆற்றுப்படையடிகளின் கருத்து, 'வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூரனைக்கடிந்து தெவ்வருயிர்சிந்துந் திருமுகமும்' என்ற அடிகளிற் போந்தது காண்க. ஆற்றுப்படையுள், 'மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே' என்று வள்ளிநாயகிபாற் காதல்வைப்பதே குறிக்கப்பட்டது. கலி வெண்பாவினுள், இருபிராட்டியார்க்கும் அறுமுகவர் அருளளிப்பது கூறுவார் 'போக முறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும் மோக மளிக்கு முகமதியும்' என்றார்.

அவ்வாறே திருக்கரங்களுக்கும் தொழில் கூறப்பட்டது. 'விண்செலன் மரபின் ஐயர்க்கேந்திய தொருகை' என்றதற்கிடாக 'ஆரமுதம் தேவர்க்குதவுந்

திருக்கரமும்' என்றனர். ஐயரென்றது, முனிவர்களை; அவர்கள் உலகத்திற்கு வெப்பத்தைத் தாம் ஏற்று மாற்றுதலால், அவர்களுக்கு வெப்பந் தீர்தற்பொருட்டு அமுதம் வழங்குவது ஒருகை, அதற்கு நேரான மற்றொருகை மருங்கிலே அமைந்ததென்பார் 'உக்கஞ்சேர்த்தியதொருகை' என்றார் ஆற்றுப்படையார்; 'வாமமருங்கிற்கரம்' என்றார். நமது அடிகள் ஆற்றுப்படையுள் 'ஒருகை நீல்நிற விசும்பின்மலி துளிபொழிய' என்றதற்கேற்ப அடிகள்' ஓவாது மாரிபொழிந்தமலர்க் கரமுமென்றார். 'பூந்தொடையல் சேரவணிந்த திருக்காமும்' என்ற பகுதி, 'ஒருகைதாரொடுபொலிய' என்ற ஆற்றுப்படை வாக்கியத்திற்கு நேரானது; 'மார்பகத்தில் வைத்த காதலம்' என்பதும் 'ஒருகைமார்பொடுவிளங்கி' என்பதும் ஒருபொருளுடையன. 'உய்த்த குறங்கிலொருகரமும்' என்பது 'குறங்கின்மிசை அசைஇயதொருகை' என்றதனேடொத்தது. 'சிறுதுடி சேர்கையே' (2)' 'தொடியொடுமீமிசைக்கொட்பது' போலும். (ஆ) 'பாடின்படுமணி யிரட்டுங்கையே' (ஆ) மணிசேர்ந்த தடங்கையாகும் (க).

'அங்குசங்கடாவவொருகை' என்றதற்கேற்ப 'கறுவுசமாங்குசஞ்சேர்கை' என்றார். 'தெறு போர் அதிர் கேடகஞ்சுழற்றுமங்கைத்தல'மும், 'கதிர் வாள் விதிர்க்குங்கரமும்' ஆகிய இரண்டும், 'ஐயிருவட்டமொடு எஃகுவலந்திரிக்கும்' இருகைபோலும். 'ஒருகைவானரமகளிர்க்கு வதுவைசூட்ட' என்றதற்கேற்ப, அடிகள்

'சூர்மகளிர்மேவக் குழைந்தணைந்த மென்காமும்' என்றார்.

கலிவெண்பாவுள் முதற்கண் இறைவன் பேரியல்புகளை யெடுத்தோதிப் பின்னர் அவன் கயிலைப்பெருமான் பாற்றோன்றிய மூவிருமுகச் செம்மலாய்த் திகழ்ந்தனன், என்று அடிகள் மொழிந்தனர். அறுமுகக்கடவுள் சிவபெருமானே யெனவும், அவர் உருத்திர முதல்வருள் ஒருவராய்ச் சிவபெருமானோடு அத்துவித முற்றவரெனவும், இருவேறு கருத்துக்கள் நூலுணர்ந்தார் உள்ளத்தில் எழுவன, இவை முறையே சம்புபக்கமெனவும், அணுபக்கமெனவுங் கூறப்படும். அறுமுகக் கடவுளை அணுபக்கமாகக் கொள்ளினும், அவர் செயலைப் பரமசிவனது திருவருட்செயலாகக் கோடல் பொருத்தமே. சிவஞானிகளது செயல்கள் சிவன் செயல்களேயென்பது நூற்றுணிபு. அறுமுகக்கடவுளை மும்மூர்த்திகட்குத் தலைவராகக்கருதும் வழக்கம் பரிபாடலிலுந் திருமுருகாற்றுப் படையிலுங் காணப்படும். பிரகிருதிமாயைக் கதிபதியாகிய ஸ்ரீகண்டருத்திரரோடு ஒத்த புவனத்தே வைகும் பெருமையுடைய முருகர், உமை முதலிய கணதிபர்கள், கீழுள்ள அண்டங்களிலுள்ள அயன், மால், உருத்திரர் முதலியோரினு மேம்பட்டவரென்பது சைவநூற் கருத்து. தமது முதற்குருவாய் விளங்கிய முருகப்பெருமானைப் பரம்பொருளாக வழிபடுதல் அடிகள் செயற்பாலதே, முழுமுதற் கடவுளின் ஆனந்த வடிவத்தை முருகனாக வழிபடுதல் மரபாய அறுநெறிகளுள் ஒன்றே.

கலி வெண்பாவிற்குறித்த அறுமுகச்செம்மலின் பிறப்பு வரலாறு, இறைவன் ஐம்பூதங்களையுந் திருமேனியாகக் கொண்டமையையே குறிக்கும். ஆறு பொறிகள்—ஐந்தாம் பூதமாகியவானிலெழுந்தவை, காற்றும் நெருப்பும் அடுத்த பூதங்கள். பொய்கை, இரண்டாம் பூதமாகிய புனலையும், சரவணம், முதற்பூதமாகிய நிலத்தையுங்குறிப்பன. தெய்வத்தன்மை வாய்ந்தோர், மக்களினுமிகுதியான உறுப்புக்களுடையராய்த் தோன்றுதல் இயலாத தொன்றன்று. முருகப்பெருமான் சூரனை மறக்கருணையாற் றடுத்தாட்கொண்டதே, கந்தபுராணக் கதையின் உள்ளீடாகும்.

,'ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்புங்
கேட்பான் புகிலளவில்லை" என்றபடி

இறைவன் பல்வேறுயிர்களை அவ்வவர் தகுதிக்கேற்பப்பல் வேறு முறையால் ஆட்கொண்டருள்வன், சூரபதுமன் மயிலுஞ்சேவலு மாகியவுடனே, அவை முருகப்பிரானுக்கு ஊர்தியாகவும் கொடியாகவும் அமைக்கப்பெற்றன. புராணங்கள் கடவுள் உயிர்கட்கு அருள் புரிந்த முறைகளைக் கூறுவதனேடமையாது, கவிநயங்கள் பலவற்றையுங் கொண்டுள்ளன. பொருத்தமில்லாதனவும் வெறுத்தொதுக்கத் தக்கனவுமாய பல அவற்றுட் புகுந்துள்ளன. இவைகளைக்களைந்து, புராணங்களின் உள்ளீடான நற்பகுதிகளையே நாம் தழுவிக்கொள்ளவேண்டும். கவிநயங்களைப் பாராட்டுவதிற் குற்றமில்லை, அவற்றை மெய்யென மயங்குதலேதவறாகும்.

பரம்பொருளையே முருகப்பிரானுகக்கருதி அடிகள் கூறிய அருண்மொழிகள், நயஞ்சிறந்தன; அப்பிரான் அகவிருளைநீக்கும் ஞான ஆசிரியனுகலின், அவனை அருட்கதிர்பரப்பும் அகிலஞாயிறுகவும், அறிவின் முடிவாய பெரும்பொருளாகவும் கூறுவார்,

(மு. கு. பி. 28)

"விண்ணொடு மண்ணை விழுங்கியருட் கதிர்
விரியு மிளஞ்சுடரே
மெய்ப்புலன் வேய்ந்து சமைந்ததொர் வீட்டை
விளக்கும் விளக்கொளியே"

(மு. கு. பி. 59)

'அலகில்புவனமுடியும் வெளியிலளியு மொளியினிலயமே
அறிவுளறிவை யறியுமவரு மறியவரிய பிரமமே'

என்றவிடத்து, முதற்கண்—தத்துவங்கட் கப்பாற்பட்ட மெய்யறிவினுற் பொதிந்த திருவருள் விலாசத்தை வீடெனவும் அதிற்றிகழும் விளக்கொளி குமரப்பெருமானெனவுங் கூறினர். பின், எல்லாவுலகங்கட்குமப்பால் விளங்கும் அருள் ஒளியினிலயமாய்ப், பரஞானத்தாற் கடவுளையறியு முயிர்களாலும் முற்றுமறியப்படாத பெரும்பொருள் அவன் எனவுமியம்பினர். கலி வெண்பாவுள், முருகரைக் 'குருபரன்' என்று அடிகள் மொழிந்தவாறே அவரை முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் வருகைப்பருவம், முதல் ஐந்து பாட்டினிறுதியிலும் 'குமரகுருபரன்' என்றழைத்தமையுங்காண்க.

தமக்கு இளமையிலேயே பேரருள்புரிந்த பெருமானாகிய முருகப்பிரானே கண்கண்ட தெய்வமும் கருதியதெல்லாமீயுங் கடவுளுமாவானென உறுதிப்பாடுடன் வழுத்துவார்,

(மு. கு. பி. 66)

"ஒழியாத புவனத்துயிர்க் குபிரதாய் நிற்ப
தொருதெய்வ முண்டெனவெடுத்
துரையா லுணர்த்துவதை யொழிய வெவரெவர்கட்கு
முன்கண் ணுளக் கண்ணதாம்
விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டியவரங் கொடுப்பான்
மெய்கண்ட தெய்வமித் தெய்வமல்லாற் புவியில்
வேறில்லை யென்றுணர்தியால்
பொழியாத புயல்தங்கு புவனமும் திசைமுகப்
புத்தேள் பெரும்புவனமும்
பொன்னுலகு மண்ணுலகு மெவ்வுலகு வேண்டினும்
பொருளன் றிவற்குமற்றை
அழியாத வீடுந்தரக் கடவ னிவனுட
னம்புலீயாட வாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீயாட வாவே" என்றார்.

உலக நெறியும் வீட்டு நெறியும் வெவ்வேறுள்ளன. உலகநெறிசென்று நிலையாமையுணர்ந்து, முடிவான இன்பத்தைப் பெற முயல்வார், சமயவாராய்ச்சி செய்வான் புகுந்து தத்தமறிவிற்கேற்ப, ஒவ்வொரு சமயத்

தைத்தழுவி யொழுகுங்காலை, அவ்வச்சமயத்தையே மிக நல்லதாகக் கருதுவர். இக்கருத்தைத்

(கந்தர்கலி வெண்பா)

"தொன்னூற் பரசமயந் தோறுமதுவதுவே
நன்னூ லெனத்தெரிந்து நாட்டுவித்து" என்றவிடத்து அடிகள் குறித்தனர். தொன்னூலென்பது பழமை யான ஞானநூல். இறைவன் சுத்த மாயையிற்றோன் றும் வாக்குகளாலே, பக்குவமுடைய அருந்தவர்க்கு உயிரிய கலைஞானத்தை நல்க, அவர்கள் தந்த ஞான நூல்களே நாற்பொருள் கூறுமியல்பினவாயின் வேத மெனவும், வீட்டுநெறி கூறுஞ்சிறப்பினவாயின், ஆகம மெனவும்படும். அவற்றின் ஒவ்வொரு பகுதியை மாத் திரம் உணர்பவர், உண்மையை முற்றுமுணராது, தாமறிந்ததே மெய்யாமென வற்புறுத்துங்காலை, வெவ் வேறு சமயங்களுளவாம், அச்சமயங்கள் எல்லாவற்றி னும் விழுமியதாய், முற்றுண்மைதெரிப்பது சைவசித் தாந்தமென்பது அடிகள் கருத்து; பண்டார மும்மணிக் கோவை 10-வது செய்யுள் அதனைத்தெரிக்கின்றது:— 'பல உயிர்களும் பயன்கொண்டுய்யும் வண்ணம் குடிலை யென்ற பெரிய வயலிலே அருளாகிய வித்தினையிட்டுக் கருணையாகிய நீரைப்பாய்ச்சி, ஞானநூலென்னு மரத் தினை நீ வளர்த்தனை; மரத்தின் பயன் பல; அம்மரத்தின் இலையைக்கொண்டு பலர் மகிழ்ந்தனர், இலையைநீக்கித் தளிரை எடுத்துப் பயன்கொண்டவர் பலர், இன்னும் பலர், அரும்பு, மலர், பிஞ்சு, அருங்காய் என்பவற்றைத்

தனித்தனிகொண்டு உவப்பெய்தினர். இவ்வாறு ஆறு பகுதியும் அறுவகையார்கொள்ள, நுண்ணிதின் ஆய்ந்தறிதற்குரியதாய வேத மரத்தின் முடிவாகிய வேதாந்தமென்ற உச்சியிற்பழுத்த தெவிட்டாத பேரின்ப அருங்கனியைப்பிழிந்து நயமிக்க சைவ சித்தாந்தத் தேனமுதமருந்தினவர்கள் ஒரு சிலரே" யென்றனர்.

'பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற' என்றவிடத்து 'மறை' என்ற சொல் வடவேதத்தைக்குறித்தது. 'பூமேவுசெங்கமலப் புத்தேளுந்தேறரிய', 'உரையாத பழமறையின் முதலெழுத்தின்' என்றுமடிகளிலே, அது நாத தத்துவத்திலுள்ள நாதகலையைக் குறிக்கும். 'பழமறையின் குருந்தே வருக', 'செழுமறை தெளிய வடித்ததமிழ்த் திருப்பதிகம்' என்ற விடங்களில், அது தமிழ்மறையைக் குறிப்பதாயிற்று.

அடிகள் இறைவன் ஆணைவழிநின்று தாம் குழந்தையன்பொடு பொழிந்த புகழ்ப்பாடல்களை, சகுண நற்சொல் போலவும், பல்லியும் பிறவும் ஒலித்தநற் குறிப்புப்போலவுங் கொள்க, (சிதம்பர மும்மணி 22) என்றமையோடமையாமல் தமது நெஞ்சம் திறமையற்ற தம்மை நோக்கி நகையாடுவதாகவுங் கூறினர். எல்லார் சொல்லும் இறைவனேவலாற்றேற்றுமென்பதைத் தமது நெஞ்சம் அறியாமையால், அங்ஙனம் தம்மை நகைத்ததென்றார்.

'பல்லியும் பிறவும் பயன் றூக்காது
சொல்லிய பொருளுந் துணிபொரு ளுடைத்தெனக்
கொண்டோர் கொளினுங் குறைபா டின்றே
அதனால்
யாவர் கூற்றும் நின்னவலின் அல்லதை
நிகழா நிகழ்ச்சி யுணராது போலும்
குழந்தையன்பிற் பெரும்புகழ் நவிற்றி நின்
ஆணையி னின்ற என்னை
நாணிலே கொல்லென நகுவதென் மனனே'



# தமிழ்ச்சிறப்பு.

கந்தர்கலி வெண்பாவினுள், இறைவன்பால் வேண்டிய பலவரங்களுள்,

'எழுத்து முதலா மைந்திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப் புல்மை பாலித்தல்' ஒன்று, இதனால், அடிகட்குத் தமிழின்கணுள்ள ஆர்வம் தெள்ளிதிற்புலனும், செவ்விதிற்றமது கருத்துக்களை மன்பதைகளுக்கு அறிவித்தற்கு அது பயன்படுதல்பற்றி அதனை விரும்பினர். பிறமொழிகளிலே அடிகட்கு வெறுப்பில்லையென்பது (மு. கு. பி.) 'வடகலையலபலகலையொடு தமிழ் வளருங்கூடல்', 'தென்கலைக்கும் பழைய வடகலைக்குந் தலைவ' என்றற்றொடக்கத் துறைகளாற்றெளியப்படும். வடமொழி பலவற்றைத் தொடுத்தலை ஓர் அணியாகக் கொண்டு, மதுரைக் கலம்பகம் 68ம் செய்யுளிலே அங்ஙனம் தொகுத்தமை காண்க.

"பால லோசன பானுவி லோசன
பரம லோசன பக்த சகாயமா
கால காலத்ரி சூல கபாலவே
கம்ப சாம்ப கடம்ப வனேசனே"

'உலகளித்தனை தமிழ்தெளித்தனை' என்ற காசிக் கலம்பக அடியால், உலகத்தை யுய்வித்தற்குத் தெளி தமிழ்ப்பவனுவல் பெரிதும் பயன்படுவதென்ற நுட்பம் குறிப்பாக விளங்குதல் காண்க. தமிழ்மறையும் முதற் சங்கப்பாவலர் பாநயமுங்களிந்த பசுந்தமிழ் விளங்கவந்த முருகப்பிரான் என்பார்,

(மு. கு. பி 44)

'கலைப்பா னிறைந்த முதுக் குறைவிற்
கல்விச் செல்வர் கேள்வி நலங்
கனியக் கனிப அமு தூறுங்
கடவுண் மறையு முதற் சங்கத்
தலைப்பா வலர் தீஞ்சுவைக் கனியும்
தண்டே னறையும் வடித் தெடுத்த
சாரங் கனிந் தூற் றிருந்த
பசுந் தமிழும் நாற' என்றார்.

தமிழானது வளமிக்க மொழி யென்பார், 'வார் காசி வளமெல்லாங் கொழுத்த தமிழாற்பாடி' என்றார். (காசிக் கலம்பகம் 21) இறைவன் திருக்காதினைச் சிறப்பிக்குமிடத்து 'தொண்டர் தண்டமிழ்ச் சொற் கொண்ட குண்டலக்காது' என்றமைகாண்க. செவ்விய இன்றமிழ்ப் புலவர்க்குச் செய்கடன் யாதெனை அறிவுறுத்துவார், "இன்னிசைப் பாத்தொடுத்தடுத்த பாஞ்சுடரை—நாத்தழும் பிருக்க ஏத்துமினீரே" என்றார். மீனாட்சியம்மை யிரட்டைமணிமாலையுள் இறைவனை வழிபடத் தமக்கு நற்றமிழுணர்ச்சியுண்டு, ஆனால், பாமாலை தொடுத்தற்கு நாராகிய அன்பில்லை யென்பார்,

(மீனாட்சியம்மை யிரட்டைமணிமாலை)

"நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமிழுண்டு நயந்தசில
பாவுண்டு இனங்கள் பலவுமுண்டே பங்கிற்கொண்
டிருந்தோர்
தேவுண்டு வக்குங்கடம் பாடவிப்பசுந்தேனின்பைந்தாட்
பூவுண்டு நாரொன் றிலை யாற்றெடுத்துப் புனைவதற்கே"

என்றார். திருஞான சம்பந்தர்க்கு அவர் தமிழ்ப்பாட் டருமையறிந்து தாளம் வழங்கினதைப் பின்வரும் அடிகள் குறிக்கும்

(மதுரைக் கலம்பகம் 11)

"புகலியர் குரிசில் பண்ணொடு தமிழருமை
அறிந்தொரு தாளம் வழங்கப் புகுந்தன"

இறைவனுடைய புயங்களிலே தமிழ் மாலைகள் இலங்கு வனவென்பது

(மதுரைக் கலம்பகம் 11)

"தருசுவை யமுதெழ மதுரம தொழுகு
பசுந் தமிழ்மாலை நிரம்பப் புனைந்தன"

(மீ. பி. 14)

"மண்ணுலா வடிதமிழ்ப் பைந்தாமம்
விரியும்பணைத் தோள்"

என்றமையாலறிக. இறைவனை முத்தமிழ்ப் பயனென்பார் (மதுரைக் கலம்பகம் 45) 'தலைச்சங்கம் பொங்கும்—பண்முத்தமிழ்க் கோர்பயனே சவுந்தரபாண் டியனே', 'முச்சங்கம் வளர்கூடலிற் சென்றுபுகலீர்' என்ற விடத்து முச்சங்கமும் கூறப்பட்டன. சிவபெருமானும் உமையம்மையும் முருகப்பிரானும், மதுரையிலாசாட்சிபுரியக் கருதியது தமிழினிமையை நுகரும் விருப்பத்தாலெனின், தமிழ்ப் பெருமை யாராலளத்தல் கூடுமென்பார்,

(மதுரைக் கலம்பகம் 92)

"தமர நீர்ப்புவன முழுதொருங் கீன்றாள்
தடாதகா தேவியென் றொருபேர்
தரிக்கவந் ததுவுந் தனிமுத லொருநீ
சவுந்தர மாறனா னதுவுங்
குமரவேள் வழுதியுக் கிரனெனப் பேர்கொண்டதும்
தண்டமிழ் மதுரங்கூட்டுணை வெழுந்தவேட்கை
யாலெ னிலிக் கொழி தமிழ்ப்
பெரு மையா ரறிவார்" என்றார்.

"தமிழ்" என்ற சொல்லை அடைமொழியாகப் பல விடங்களில் அடிகள் பயன்படுத்துகின்றார். 'தமிழ் மதுரையிலொரு குமரியை', 'தமிழ் மதுரைக் கொற்றியார்', 'மும்மைத் தமிழ்க்கூடல்', 'முத்தமிழ் வெற்பமர்', 'அறம்வளருந் தமிழ்க்கூடல்', 'விரிதமிழ்க்கூடல்' தெளிதமிழ் மதுரை. 'செஞ்சொற் றமிழ்க்கூடல்', 'தெய்வத் தமிழ்க்கூடல் தழையத்தழைத்தவன்', 'தமிழ் வேளூரடிகேள்' 'தமிழ்க்கமலை' என்றும் வருவன காண்க. திருமால் திருவிழாக் கொண்டருளும்போது திருவாய் மொழி யோதுவார் பெருமாளுக்கு முன்செல்ல, வடமொழி வேதமோதுவார் பின்செல்வது, பெருமாள் தமிழ் மறையை விரும்பி அதற்குப் பின்போக, வட வேதம் பெருமாளைத் தேடி அவரைப் பின்தொடர்ந்து முறையிடுதல் போலுமென்பார், 'பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே' என்றார். தமிழினிமையுரைப்பார் 'மதுரமொழு

கிய தமிழின் இயல்பயில் மதுரை' என்றார். 'முதுசொற் புலவர் தெளித்தபசுந் தமிழ்நூல் பாழ்போகாமே தழை யுங்கொடி' 'செழுமறை தெளிய வடித்த தமிழ்ப்பதிகத் தோடே திருவருளமுது குழைத்து விடுத்தமுலைப் பாலாற்—கழுமல மதலை வயிற்றை நிரப்பி மயிற்சேயை' என்றுமுறையே அம்மையையுஞ் சேயையும் வழுத்தி யது காண்க. இன்னும் அங்கயற் கண்ணம்மையை, பழந்தமிழாகிய பாற்கடலிற் றோன்றிய திருமகள் என் றும், தீந்தமிழின் சுவையென்றுஞ் செப்பினர்.

(மீ. பி. 52, 61)

'முதுதமிழ் உததியில் வரும்ஒரு திருமகள்',

"தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றுறைத்தீந்
தமிழினொழுகு நறுஞ்சுவையே"

'இழுமென் மொழித்தெளி தமிழின்வடித் திடுகவாசமே' என்றார்.

அடிகள் காலத்தே முத்தமிழ்க் கழகங்கள் பல, புள்ளிருக்கும் வேளூரிலிருந்தன. 'கழகந்தொறுங் கொத்துமுத் தமிழ் மொய்த்த கந்தபுரி' என்றதற் கேற்பக் குமரப்பெருமானைத் 'தோலாதமுத்தமிழ்நாவா' 'சங்கத்தமிழின் றலைமைப்புலவா' என்றது மோர்க.

கலைமகளைத் தமிழ்த் தெய்வமாக அடிகள் பல விடங்களில் வாழ்த்தியுள்ளார். (மீ. பி. 54) 'மதுர மொழுகுங் கொழிதமிழ்ப் பனுவற்றுறைப்படியுங் கூந் தலம்பிடி', 'வடிபசுந் தமிழினிசை பயின்றபெடை'

(சகலகலா வல்லிமாலை 3) "அளிக்குஞ் செழுந்தமிழ்த் தெள்ளமுதார்ந்துன்னருட் கடலிற்—குளிக்கும்படிக் கென்று கூடுங்கொலோ", 'தொண்டர்—தீட்டுங் கலைத் தமிழ்த் தீம்பாலமுதந் தெளிக்கும் வண்ணம்—காட்டும் வெள்ளோதிமப்பேடே'. (மீ. பி. 9) 'தெள்ளித் தெளிக் குந் தமிழ்க் கடலின் அன்பிணைந்திணை யெனவெடுத்த இறைநூற் றெள்ளமுது கூட்டுணுமொர் வெள்ளோதிமம்' என்பன காண்க.

'தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்தகொடி' என்றவிடத்து, அங்கயற்கண்ணி தமிழொடு இந்நாட் டிலே தோன்றியதாகக் கூறினமையால், தமிழ்ப் பழமை யறிக. 'தென்னன் தமிழி னுடன்பிறந்த சிறுகாலரும்பத் தீயரும்பும்' என்ற விடத்துத் தமிழோடு தென்றற் காற்றுத் தோன்றியதாகக் கூறினமையால், தென்னுடுண் டாய காலந்தொட்டு, தமிழ்மொழியானது வழங்கி வரு கின்றதென்பது அடிகள் கருத்தாதல் காண்க.

அடிகள் 'மறை' என்ற சொல்லைப் பண்டைத் தமிழ்மறைகளையும் வடமொழிமறைகளையுங் குறிக்கப் பயன்படுத்துகின்றார். (காசிக்கலம்பகம் 19) 'பண்ணோர் வேதம்' என்றவிடத்துப் பண் என்பது தமிழிசையைக் குறிக்குமாதலின் 'வேதம்' என்பது தமிழ்மறையை யுணர்த்தும்.

---

## நீதிநெறிவிளக்கக்கருத்து.

இதுகாறும், அடிகள் நூலுட் போந்த சமயநூற் கருத்துக்களையாய்ந்தனம், இனி, அவற்றுட் போந்த அறநூற் கருத்துக்களைத் தொகுத்துரைப்பாம். அடிகளியற்றியருளிய நீதிநெறிவிளக்கம் கல்வி, செல்வம், உலகியல், அரசியல், தவம், மெய்புணர்வு முதலிய விழுமிய பொருள்களின் இயல்பினையும் பயனையும் திட்பநுட்பஞ்சிறக்க விளக்குந் தன்மையது. அறம் இனையதென்றறிதற்குக் கல்வி வேண்டுமாகலின், அதன் பெருமையை முதற்கண் பேசினர். அறநூல் பொது நூலாதலின், பொதுவாய் எம்பிரான் மன்றினை வழுத்துதல் இன்றியமையாமை குறித்தார். இறைவழிபாடு, எக்காலத்தும் வேண்டுமென்பதை வற்புறுத்துவான், இளமை, செல்வம், யாக்கை முதலியவற்றின் நிலையாமையை இனிதெடுத்தியம்பினர்.

### கல்வி.

'அறம் பொருளின்பம் வீடடைதல் நூற்பயனே' என்ற இலக்கண நூலார் பொன்மொழிக்கேற்ப, அடிகள், நூற்கல்வி அவற்றைப் பயக்குமென்றார். 'தொடங்குங்காற்றுன்பமா யின்பம் பயக்கும்' என்ற செய்யுளில், கல்வி யின்பத்திற்கும் காமவின்பத்திற்கும் உள்ள வேற்றுமையை அழகுற அமைத்தார். கல்வி தொடக்கத்திற்றுன்பமாய் முடிவில் நிலைத்த இன்பம் பயக்கும். காமம், தொடக்கத்தே இன்பந்தருவாய்த் தோன்றி முடிவாகப் பெருந்துயர் விளைக்கும் என்றார்.

உலகத்திலே இளைஞர் பலரும், கல்வியைப்பற்றாது காமநெறிநிற்குமியல்பினராகலின் காமத்தின் கேட்டைக் குறிப்பித்தார்.

(செய்யுள் 79) காமத்தாற் பிணிக்கப்பட்டவர், கொலைபஞ்சார், பொய்கூறநாணார், மானங்காவார், களவு முதலிய பல தீமைகளுஞ்செய்வார், பழியும் பாவமுங் கருதார், வேறு என்செயமாட்டார்?

(83) சிற்றின்பம் சிறிது காலத்ததாய்ச் சிறிய தன்மையதாயினும், அதனை விழைந்தவர்கள், பிற இன் பங்களெல்லாவற்றையுங் கைவிடுவார் என்றமைகாண்க.

(4) கல்வி விருப்பமுடையார், மனைவிமக்களை நா வதினும், தாங்கற்ற கல்வியே மனைவியாகவும், தாமியற்று நூலினையே புதல்வனாகவும், சொல்வளத்தினையே செல்வமாகவுங் கருதுதல் நலம். (5) கல்வியின் பயன் அறிவு. மக்களொடு கற்றவன் பழகுமிடத்து, இடமறிந்து செய்யத்தக்கதை அறியானாயின், அவனது கல்வியாற் பயனில்லை. தான் அறிந்ததனைப் பிறர் ஏற்கும் வண்ணம் சொல்லும் ஆற்றல் இல்லையாயின், பெரும்பயன்விளையாது; சொல்லாற்றல் வாய்க்கப்பெற்றால், அது பொன் மலர்க்கு மணம் அமைந்தாற்போலும். சொல்வன்மையுடையார், அதனை நற்காரியத்திற்குப் பயன்படுத்தாமை, அந்நற்செய்தியைக் கெடுப்பதாகுமன்றி வேறல்ல. தமது சொல்லினாற் பிறர்க்குப் பயன்விளையுமாயின், அதனாற்றமது செல்வத்திற்குக் கேடுவருமா

யினும் அறிஞர் அதற்கஞ்சமாட்டார்கள். (6) சொல் வன்மைக்குத் துணையாவது அஞ்சாமை, ஆயினும், சொற்பயன் கொள்ளமாட்டாதார் அவையிலே பேசுதலும், ஈகையில்லாதார் செல்வமும், வறியவன் இல்லறச் சிறப்பும் இருப்பதினும் இல்லாமைநன்று. (7) கற்றோர் வாய்ச்சொல், உலகிலே நீடித்தகாலம் நிலைக்குமாதலின், அவர்கள் இயற்றும் பாக்கள், அயன்படைக்கு முடம்பி னுஞ்சிறந்தன. அயன் திருநாவிலே, கலைமகளிருப்பி னும், அவன் கலைவாணர்க்கு ஒப்பாகமாட்டான்.

(8) கல்வி அவையகத்தே பயன் படுதற்குரியது. அவைக்கஞ்சுவானிடத்தேயிருக்குங் கல்வி, அயலா னிடஞ்சென்ற இல்லாளினுமிழிந்தது, என்னை? அய லான் பாற்கண்ட மனைவியை அகற்றிவிடலாம், பயன் படாக் கல்வியுடையானிடமிருந்து அக்கல்வியை நீக்க முடியாது. (9) கற்றவற்றை நினைவில் வைத்துப் போற்றவேண்டும். வருந்தி மிகுதியுங் கற்றவற்றை மறந்து, மேலுஞ் சிலவற்றைக் கற்க முயலுதல், பாடு பட்டுத் தேடிய நிதிக்குவியலைத் தூர வெறிந்துவிட்டு, அரிப்பரித்து இளைத்துப் பொருளீட்டுவது போலாம். கல்வி பயன்படவேண்டுமாயின், அது கழிபெருமிடி யுடையார் பாலிருத்தல்கூடாது. வறுமை வாய்ப்பட் டார் நன்னெறியொழுகார்; நல்ல ஆண்மகன் இல்லறம் நடாத்த முயலுங்கால், அவன் மனைவி நற்குண நற் செய்கையிலளாயின் அவன் இல்வாழ்க்கை சிறப்படை யாமைபோல, வறியவன் கல்வியுஞ் சிறப்படையாது.

(14) கல்விச் செருக்குத் தீயது, கற்றவர்கள் தாம் எல்லாவற்றையும் அறிந்துவிட்டேமென்று இறுமாப் படைதல் தவறு, அவர்களால் ஆகாததொன்று கல்லா ரால் ஆதல்கூடும். கொல்லன் சம்மட்டியினுல் உடை படாத கல்லானது, சிற்றுளியால் தகர்ந்துபோம். (13) கற்றோர்க்குக்கல்வியின் அழகே போதுமானது, வேறு அணிகவன் வேண்டியதில்லை, அது எவ்வாறெனில், மணிகளான் முற்றுமிழைத்த நகையை அழகுசெய்யப் பிறிதொரு நகைவேண்டப்படாமைபோலாம்.

(15) கல்வியுடையார் தம்மினுங் கற்றாரைநோக்கி யாங்கற்றது எவ்வளவு குறையென்று மேன்மேலுங் கற்கவேண்டும், கற்றவர், தாம் கற்ற நன்னெறியில் நில்லாவிடத்து, அவர் போதனை பயன்பெறாது. (22) அவர்க்கு மானக்கேட்டினை விளைக்கும். (22) விற் பனைக்கு மாத்திரம் கல்வி கற்றல்கூடாது! விற்குங் கல்வியின் பயன் பிறர்க்கும், அதன் தீமை தனக்குமாம். (24) குற்றமற்ற கல்வி நல்லறிவுடையார் மாட்டே காணப்படும். நகையாடிப் பொழுது போக்குபவ ரிடத்தே அது நிலையாது. திருமகள் விரும்பும்பெண் ணழகு, பேடியர்க்குப் பயன்படாமைபோல, மிகச் சிறந்த கல்வி, தீயோர்க்கு நற்பயன்விளையாது. (23) கல்லாதார் கற்றாரவையில் அடக்கமின்றி வாய்திறத்தல், விலங்கும் பறவையுங்கண்டஞ்சும் புல்லுருவைப் போன்ற தமது உருவத்தைக்கண்டு அஞ்சற்கவென்று அறிவித்தவாறும். (25) கல்லாரியல்புணராது கற்றார்

அவர் பாற்சென்று பேசியிடர்ப்படுவாராயின், அது கற்ருர் குற்றமே. கற்றவர் தமது பகுத்தறிவுகொண்டு கல்லார் தன்மையையுணராது அவரைப் பழிப்பதாற் பயன் என்?

## செல்வம்.

கல்விப் பொருள்போலச் செல்வப் பொருளும் போற்றப்படுதற்குரியதாகலின், அதனியல்பையும் அடிகள் அழகாக விளக்கியுள்ளார். வறியவன் இனிய சொல்லும் பணிந்த நடையும் உடையனுயிருந்தாலும், அவனைப் பிறர் வன்சொற் கூறியிகழ்தல்கூடும், செல்வமுடையான் பிறரை எவ்வளவு கடிந்துரைத்தாலும், அவர் அவன் காற்கீழொதுங்குவர். ஈயாது செட்டுச் செய்யுந் தன்மையுடைய செல்வரையும், பிறர் குறையிரந்து அவர்க்குக் குற்றேவல் செய்வர். இலர்பலராதற்குக் காரணம் நோலாமையே என்ற திருக்குறட் கருத்திற்கிணங்க, செல்வராயுள்ளவர் நோற்றவர், பிறர் நோலாதவர், நோலாதவர் நோற்றவரைப் பின்பற்றுதல் முறையேயன்றித் தவறன்று.

செல்வமுடையார் செருக்குறின், மூதேவி விரைவின் அவரை அடைதல் கூடும். அவர்கள் பேராசைப்படாது, தம்மின்மெலியாரை நோக்கித் திருத்தியடைய வேண்டும். செல்வர்க்குப்பணிவு அவர்கள் செல்வத்தையழகுசெய்யும். பெருந்தகைமையுடைய செல்வர், அஃதில்லாத பொருளாளருடைய செருக்கினைக்கண்டு தாம்

தாழ்ந்து செல்வர். அது, மெலிது மேலெழ, வலியது தாகின்கண் தாழ்ந்து போதலை யொக்கும்.

(38) பெருஞ்செல்வமுடையார் தாம் கவலையின்றிச் செலவிடும் பணத்திலே ஒரு பகுதியை வறியார்க்கீந்தால், அது அவர்க்குப் பெரும் பயன்தரும், யானையானது தான் உட்கொள்ளுங் கவளத்தில் ஒரு சிறிது நழுவவிடின், அதனல் யானைக்கு ஒரு கவலையுமில்லை. தவறிவிழுந்த பகுதியை ஒருகோடி யெறும்புகள் தங்கிளைகளோடு உண்டுமகிழும். பொருளாசை மிகுந்து பெற்றதைச் சிறிதாகவும் பெருததைப் பெரிதாகவும் எண்ணுகின்ற சிற்றுயிர்க்கு மேம்பாடுண்டாகாது. (64) விறகு எரியஎரியத் தழல் மாய்ந்து போவதுபோல, பேராசையால் ஊக்கமுறுகின்ற சிற்றுயிர் ஒன்றுங்கிடையாதபோது மாய்ந்தொழியும்.

(39) பெருஞ்செல்வத்திற்கழகு ஈகையிற்றலை சிறத்தல். ஈகையாளன் நோக்கிய அளவிலே, இரவலாது நகை முகமே அவனது பெருமதிப்பையுணர்த்தும். (37) பிறர்க்கீவோர் தமது கண்ணேக்கம் அரும்பாகவும், புன்சிரிப்புடைய முகம் புதுமலராகவும், சொல்லும் இன்சொல்லின் மெய்ம்மையே இனிய காயாகவும், கொடையே கனியாகவும் உடையாதல்வேண்டும், அவர்களே வேண்டுவார் வேண்டியதை யீவதிற் சலிப்பில்லாத கற்பக மரங்களொப்பர்.

(67) கொடையிலான் செல்வத்திலும் கொடையாளனது வறுமையே மிகச் சிறந்ததாம். முன்னையோன் இரக்கமில்லாதவன், கொடியவனென் றிகழப்படுதல் போலப் பின்னையோன் இகழப்படான். (68) ஈவது முடியாவிட்டாலும் இன்சொல்லாவது சொல்லுதல் கூடாதா? இன்சொல்லிலும் வறியவனாதல் மிகக்கொடுமையே, தீவினைக் கொல்லனால் வாய் பூட்டப்பெற்றவர்கள் வேறு என்செய்வர் ?

இழிந்த உவமைகூறிச் சிறப்பான கருத்தைத் தெரிவித்தல் ஓர் அழகாக இந்நூலுட் காணப்படும். வள்ளற்றன்மையிற் றலைசிறந்தவர்கள் செல்வம், பொதுமக்கள் நலம்போல யாவர்க்கும் பயன்படும். பிறர் செல்வம் குலமகள் நலம்போல, உடையார்க்கே பயன்படும். கடைமக்கள் செல்வம், கைம்பெண்டிர் நலம்போல ஒருவர்க்கும் படன்படாது. (66)

(65) தனது உயர் நிலைக்கும் குடிச்சிறப்பிற்கும் ஊனம் வாராதபடி ஏற்ற கடமைகளை முயன்று செய்து, வருவாய் குன்றியிளைத்த காலத்தும், தீயவழியிற்செல்லாது பிறன் பொருளைக் கவரவிரும்பாதவரது வாயிலின்கண், பொருள் சென்றடையும். (63) சமயம் பார்த்து எளியவரை அச்சுறுத்தியாதல், வஞ்சித்தாதல், அவரது உடைமைகளைக்கவர்ந்து இறுமாப்பவருடைய செல்வம் பெண்டிர் நகில்போற்பெரிதாகத்தோன்றினும், அவர்கள் இடைபோலத் தேய்ந்தொழியும். (70) இழிந்த

முயற்சிசெய்து பெரும்பயன் கொள்ளக்கூடுமாயினும், அதற்காகத் தமது நிலையிற்றாழார் பெரியோர். (71) தீய செயல்களை யாற்றுவார்க்கு ஆக்கம் பெருகினாலும், தீய வைகள் அக்காரணம்பற்றி நல்லனவாகா, தீயன என்றுந்தீயனவே. (75) காட்டுப்பசு நமதுடம்பை நக்குங்கால் இன்பம் பயப்பினும், அது இறுதியிலே உயிரைக் கொல்லும், குடிப்பிறப்பின் மாண்பினைவிற்றுப் பெறும் 'வெறுக்கத்தக்க' செல்வமும், பொய்கூறி யீட்டும் பொருளும் உரிமையைவிற்றுப் பெறும் ஊதியமும் விலக்கி யொதுக்கப்படத்தக்கன. (70) அறமல்லாதவற்றை எளிதாய்ச் செய்தல்கூடுமாயினும் அவற்றைச் செய்யாது நன்னெறியில் நிற்பாரே நல்லோர்ஆவர்.

நல்லவழியிலே ஒழுகி மேம்பட்டவர்கள் வறியராயகாலையும், தகாதன செய்வதற்கிணங்கார். (61) அது, புலிபசித்தாலும் பசும்பயிரைத் தின்னாமைபோலும்.

கடவுட்பத்தி யுடையார் இழிந்த செயல்கள் செய்யார், தெய்வமுண்டென்பார் தீயனசெய்தால், தெய்வமே அவர்களை நன்கு தண்டிக்கும். தெய்வம் இல்லையென்பார் நன்னெறியடையமாட்டார். தமது இனிய புதல்வர்க்கே தந்தையார் பயனுறத்தக்கவற்றைப் போதிப்பர். அது போலத் தெய்வச்செயலுமாம்.

## புகழ்.

பொருளினும் புகழையே மக்கள் விழையற்பாலர். தம்பால் அடைக்கலம் புகுந்தார்க்கிடுக்கண் வந்த

விடத்து, தமதுபுகழுடம்பு நிலைப்பக்கருதி ஊனுடம்பை யோம்பமாட்டார் பெரியோர். (41) சிறு பொழுதாவது உடம்பானது நிலைக்குமென்பது திண்ணமாயின், திற மையையும் புகழையுமிழந்து உடம்பைப் பாதுகாக்க.

(42) அணிகளைப் பொருட்படுத்தாத கற்புடைப் பெண்டிரும், ஐம்பொறி யடக்கமுடையவாய்மையாள கும், போரிற் சிறந்த வீரரும், நமன் எதிர்த்துத் தம் மொடு போர்புரியவந்தாலும், உயிர்விட அஞ்சார். (43) தமது உடம்பானது புழுப்பற்றி நெடுந்தூரம் முடை நாற்றம் வீசுந்தன்மையிலிருந்தாலும், வீணர் அதனை நீப்பதற்கஞ்சிப் பெருமூச்செறிவர். மெய்யுணர்ந்தார் அந்நாற்றச்சுமையைக் கீழே எறிவதற்கு முகஞ்சுழிக்க மாட்டார்கள். (72) நிலைத்த நற்புகழையே பெரியர்நாடி அடக்கமுடையராயிருப்பர். தாம் செயற்கரிய செயல் கள் செய்தாலும், பிறர் அவற்றைச் செய்தார்போலத் தோன்றுமாறு, அறிமடம்பூண்டு நிற்பர். சிற்றினத்தார், ஆரவாரமொன்றனையே விரும்பித் தாஞ்செய்த பொருந் தாச் செயல்களையும் பெரிதாக வாய்விட்டுப்பிதற்றுவர்.

சோற்பயன்.

சொல்லினை நன்னெறியிற் பயன்படுத்த வேண்டு மென்பதை அடிகள் பலவிடத்தும் வற்புறுத்தியுள்ளார். (60) பொய், கோள், கடுஞ்சொல், பயனற்றசொல் என்ற நான்குங்கலவாத சொல்லினைத்தவறாது பயின்று, ஐம் புலனுமடக்கி, மனமாசற்றவரே, நன்னெறியொழுகுபவ ராவர். (73) பகையில்லாதபோதும், பலருடைய குற்றங்

களை எடுத்துப்பேசி நகையாடலையே பொருளாகக் கொண்டபேதை, பிறர் துன்பத்திலின்புறுங்கொடிய கொலையாளனைப்போல எவரானும் அஞ்சப்படுவான்; (71) ஒருவர் மகிழ்ச்சிக்காக, அவர் ஏவிய தீப தொழிலையுஞ்செய்வேமென்று செய்வாருடைய கண்ணோட்டம், எத்தன்மையதெனில், ஒருவரைச் சினந்துரைத்தால், அவர் நெஞ்சு புண்படுமென்று கருதி, அவர் தலையை வெட்டிவிடுந் தன்மையினையைப்போலும், ஆதலால், தீயவற்றைத் தீயவென்று அஞ்சாது யார்க்கும் எடுத்துரைக்கவேண்டும். (59) உண்மையாக இனியவராயுள்ளார் எத்தகைய கடுஞ்சொற்களைச் சொன்னாலும், அச்சொற்கள் இனியனவே. பகைவருடைய கனிவான மொழியும், நச்சுத்தன்மையுடையனவே. வெங்காரமென்னும் உப்புச்சரக்கு உட்கொண்டபோது சூடாயிருந்தாலும், நோயைத்தீர்க்கும். சிங்கியென்னும் நஞ்சானது குளிர்ந்திருந்தாலும் உயிரைக்கொல்லும்.

## நட்பு.

தக்கவர்களையே நட்பினராகக் கொள்ளவேண்டும். உடற்குக் கெடுதிசெய்யும் புண்ணினை மூடிவையாது கருவியிட்டாயினும் போக்குதல்போல, வெளியே நட்புக் காட்டி உள்ளே வேறுபடுவாரது விடம்போன்ற பகைமையைக்களைந்து அவரை விட்டுப்பிரிதல்வேண்டும். நண்பரை மறைவாக வஞ்சித்துப் பிறர் அறியாமல் அவர்கட்குத் தீமைசெய்யக்கருதி அவர்களுடைய எதிரி பக்கஞ்சார்ந்து நிற்பார்க்கு ஆயுண்முடியாமைக்குக் கார

ணம், 'நடுவன்' என்ற பெயருடைய நமன் நடுவுநிலை நில்லாமையேயாம். எவ்வளவு தீயசெயல்கள் செய்தாலும், மனத்திலே களங்கமில்லாதவர்க்கு, அவை நல்லனவாகவே தோன்றும். மனத்திலே களங்கமிருப்பின், நல்ல செய்கைகளும் தீயனவாகவேதோன்றும்.

(76) நன்மக்களாற் புகழப்படுந்தன்மையுடையார், ஊழ்வலியாற் தீயன சிலவற்றைச் செய்தாராயினும், பழிவருமென்றஞ்சி மனம் வருந்துவர்; அன்னோர் செவ்விய நெறியில் நிற்பாரோடொப்பர்.

## காதலொழுக்கம்.

(50) புறப்பகைகள் பலவற்றினும், அகப்பகையாகிய காமமே மிகவும் அஞ்சத்தக்கது. (77) பிறன்மனை விழைதல் அறனல்லாமற்போதலோடு, உள்ளமுமுடம்பும் நடுங்கத்தக்க நோயினைக் கொடுத்தலால், அது எவ்வாற்றானுந்தீயதே. அது முறையல்லாவிடினும், இன்பம்பயக்குமாயிற்கொள்க. அதுவும் பயவாமையின், அது என்றுந் தவிர்தற்குரியதே, மணந்த மனையாள்பால் நலம்நுகர்வாரும், காரியச்சிதைவில்லாமலும், கல்விகெடாமலும், அறநெறிக்கு மாறில்லாமலும், இல்வாழ்க்கை நன்மைகள் குறைவுபடாமலும், அதனை நுகரவேண்டும். (78) சிலர், திருமகளினும் அழகிய மனையாளைப்பெற்றாலும், பிறன் மனையாளையே விழைந்தொழிவர். அது சில விலங்குகள், தமது வாயிலே நல்ல மணமுள்ள பொருள்கள் இருக்கப்பெற்றாலும், அவற்றைப் பயன் படுத்தாது, கசப்பானவற்றையே விரும்பித்

தின்பது போலாம். (89) எவ்வளவு தாழ்ந்தோராயினும் அவர்பால் சிற்றின்பத்தவறுகள் இல்லையாயின், பகை வரும் அவரைத் திக்குநோக்கித் தெண்டனிடுவர், அவையுடையராயின் எத்துணைப் பெரியாரும், விடரா லும் பழிக்கப்படுவர். (96) தாழ்ந்தோர் தவறினு மூய் தல்கூடும் உயர்ந்தோர்தவறின் உய்தலரிது பஞ்சுபோல் மெல்லியன, கீழேவிழுந்தால், ஊறுபடுவதில்லை கற் போல வலியன, விழுந்தால், சிதறிப்பின்சேர்வதில்லை.

(82) தமது கணவன் அழகுமிகுந்தவனும், இள மைச் செவ்வியுடையனும், இசைவல்லானும், மகளிர் மனங்கவருங் கண்ணினனும், நயம் பொருந்திய இன் சொல்லாளனுமிருந்தாலும், சிலமாதர்க்கு அயலார் பால் மனஞ்செல்வதுண்டு. (83) கற்பில்லாத பெண்டி ரைப் பார்க்கிலும் விலைமாதர் நல்லவர்கள், கற்பிலார், தமது கணவர்க்கும் தங்கட்கும் உறவினர்க்கும் அய லார்க்கும் இழிவினையுண்டாக்குவதுபோலப் பொது மாதர் இழிவுவிளையார்.

கற்பில்லா மகளிர் பிறப்பு, பெரும்பாவச் செய்கைக் கேதுவாயது. அவர்கள் இனமுறையையும் குடிச்சிறப் பையும் தகுதியையும் பார்க்கமாட்டார்கள். தமது மன உறுதியையும் மானத்தையும் பாதுகாக்கமாட்டார் கள். அத்தகைய அறிவிலிகட்கு என்ன நற்றன்மை யுளதாம்?

முயற்சியின் இன்றியமையாமையை அடிகள் அழகாக வற்புறுத்தியுள்ளார். உயிர்க்குறுதி பயக்கத்தக்க முயற்சிகளை, அம்முயற்சியின் முடிவுவரை முயலுதலே நன்று. அவைகள் உடனே கைகூடவில்லையென்று கவலாதொழிக. (49) சாகுந்தறுவாயிலுள்ள உயிர்க்கு, ஆயுள் நிலைத்தற்கேதுவாய மருந்தினைச் சிறிது சிறிதாகக் கொடுத்தல் குற்றமன்று. சாவதுபோலிருந்த உயிர்பிழைத்தலுங்கூடும். அதுபோல, சித்திபெறாததாய்த் தோன்று முயற்சி கைகூடுதலுமாகும். முயற்சியாதுஞ்செய்யாது வினையின்படி எல்லாம் நடைபெறுமென்று செப்புதல் தவறு, நன்றாக எரியாத விளக்கைக் காற்றின் முன்வைத்து ஏற்றுவாரில்லை, (51) தவறாத முயற்சியையே தமக்கு ஆதாரவாகக்கொண்டு ஊழின் வலியைத் தொலைக்குந்திறலுடையார் உலகத்தும் ஊழின்வேரைக்கிள்ளி நமனை மடிவித்த பெரும் பிள்ளையாகிய மார்க்கண்டர் வரலாற்றை உற்றுநோக்குக.

(52) முயற்சி செய்யுங்காலை, காலமுமிடமுஞ் செய்யுஞ் செயலின் முதற்காரணமு முடிவுமறிந்து, செய்யுமுறையினையாய்ந்து, துணைநிற்பார் திறமையுமறிந்து அதனையினிதாற்றவேண்டும், முயற்சி செய்யுமிடத்து, யாராவது ஒருவரிடத்தே பகைமை ஒரு சிறிதுதோன்றினும், அதனை உடனே நீக்கிவிடவேண்டும். (54) பகைமையை முற்றவிட்டால், பின்னர் அது பெருங் கேடுவிளைக்கும். அல்லது சிறிய இடையூறு ஏற்பட்டாலும், முயன்றகாரியம், முற்றுப்பெறாது தடைப்படு

தனுங்கூடும். அது எதுபோலவெனின், யானை பெரிதா யிருந்தாலும், அது தன்னிழலைப்பார்க்கக் கருதிய நீர் நிலையில், ஒரு தவளை பாய்ந்தால், நீர் கலங்கித் தன் னிழலைப்பார்க்க முடியாமைபோல வென்க. எடுத்த முயற்சியிலே முழுக்கருத்தையுஞ் செலுத்துவார் தன் மையை அழகாகத் தெரிக்கும் பாட்டு வருமாறு:—

(53) "மெய்வருத்தம்பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையுமேற்கொள்ளார்—செவ்வி
அருமையும்பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயினர்"

மடியுடைய கீழ்மக்கள் தமக்கு வருங்கேடு கண் ணிற் கெதிராகத்தோன்றிலும், உணர்ச்சியு முயற்சியு மில்லாதிருப்பர். (34) அன்னோர், தீயானது தன்னுடம் பைப்பற்றிய பின்னும், பெருமூச்செறிந்து தூங்கும் மலைப்பாம்பு போல்வர். வருமுன்னர்க் காப்பாரே அறி வுடையார்.

இனி, வேந்தன் கடமைகளைப்பற்றி அடிகள் கூறு வதைத் தொடுத்துரைத்து, தவத்தைப்பற்றிய செய்யுட் களையாய்வாம். அரசின் பெருமையையினிது விளக்கு வார், 'குலமகட்குத் தெய்வம்போல் மதிக்கப்படுதற் குரியவன் கணவன், நற்புதல்வர்க்குத் தந்தையும்தாயும் தெய்வம்; துறவிகளுக்கு ஆசிரியனே தெய்வம், எல் லார்க்குந்தெய்வம் அரசனே' என்றார். (27), (28) அரச னானவன் தனது கண்ணினாலேயே ஏவலாளர்க்கு வேலை

கற்பிப்போனுய்த்தக்க ஒற்றர் வாயிலாக நிகழ்ச்சிகளின் உண்மைகளையறியுமாற்றல் உடையோனுயிருத்தல் நல்வினைப்பயனே. திறமைமிக்க அரசன் கருணையோடு குடிகளை யோம்பாதவனுபின், பெரிய படையுடைமை அவனுக்கு என்ன நிலைத்த நன்மையைப் பயக்கும்? (29) அரசன் குடிகளை வருத்தி, வரிவாங்குதல் கன்றுடைய பசுவின் மடியையறுத்துப் பால்கொள்ளுவதோடொக்கும், குடிகளைத்தழுவித் தக்க முறையில் இறைகொள்ளுவார்க்கு, நிதியானது வெள்ளத்திலுமிகுதியாய்ப் பெருகும். (30) இன்றைக்கு வாங்கக் கருதும் வரியை நாளைவரை பொறுத்து வாங்கிக்கொள்ள மாட்டாதவனுய், கொடுக்க இயலாதவன் குறையிரந்தால், அதனைக்கேளானுய், செய்யத்தக்கனவற்றை ஒருவன் கூறின், சினந்து பற்கடிப்பானுயுள்ள அரசன், வேந்தியல்பில்லாதவன். மேலும், வழிப்பறிபறிக்கும் கொள்ளைக்காரனிலுங் கீழ்ப்பட்டவன், என்னை? வழிப்பறி காரன் பொருளுடையோரை வருத்துவன், பிறரைவருத்தான்.

(31) அரசன் பொது நலத்தினை நாடவேண்டும். சுயநலத்தையே பாராட்டுதல், கடமைத்தவறுகும். நறுமலர் மாலைசூடி, நன்மணப் பொருள்களைப்பூசி, நல்லுடைகளையுடுத்தி நல்லுணவுகளையுண்டு தன்னல நோக்கமுடையனுய்ப் பிறர் தனது கடமைகளை இடித்திடித் துரைத்தாலும், அவர் நல்லுரைகளுக்குச் செவிசாயாது அவரைக் கண்திறந்து பாராதிருக்குமன்னன் மூச்சுடன்கூடிய பிணம்போல்வான். ஒற்றர்களாலறிந்த

வற்றின் உண்மையைத் தெளியும் பொருட்டு, தானே மாறுவேடங்கொண்டு, நகரிலுலாவி மெய்யீதெனத் தேர்ந்தும், தவறுநிகழ்ந்தக்கால், குற்றம் யார் பாலுள தென்றறிதல் கடினமென்றஞ்சி, அதனை ஆய்ந்து தெரிந்தும், நீதி செய்வதே, செங்கோன்மையாகும். (32) குறைகளை முறையிட்டாலுங்கேளாமை, அஃதாகாது, (33) அரசன் உண்மையை யாயுமனத்தனுயிருத்தல் இன்றியமையாதது. உலகத்தில் காக்கை வெண்ணிற முடையதென்றும், தாயைக் கொல்லுதல் தக்கதே யென்றுங் கூறுவாருமுளர். ஆதலால் அரசன் தான் கேட்பனவற்றுட் குற்றமானவற்றை நீக்கிவிடுதலே அறிவாகும். அரசன் நம்பினவரைத் தம்மைவிட்டுப் பிரித்தலும், பகைவரை நட்புக் கொள்ளுதலும், ஒற்றரை இகழ்தலும், பக்கத்தாரிடத்தே நம்பிக்கையின்மையும், தக்காருடைய உறுதிமொழிகளைப் போற்றுமையும், குணம் வேறுபடுதலும், தனக்குக் கெடுதி காட்டுங் குறிகளென அறியக்கடவன். (44) 'மன்னனெப்படி மன்னுயிரப்படி'; அரசன் ஒருவனை இகழ்ந்தால் எல்லாரும் அவனை யிகழ்வர், அவன் ஒருவனைப் புகழ்ந்தால், எல்லாரும் அவ்வாறே புகழ்வர். அது, ஆற்றுநீரிலகப் பட்ட புணையானது நீரின் வழியே செல்லுதல்போலாம்.

(45) அமைச்சன் எத்தகையனுயிருக்க வேண்டு மெனின், அரசன் செவி பொறுக்கும்படி, இடித்துரைப் பனவற்றை இடித்துரைத்து நல்லறிவுகொளுத்தி, அர

சன் வெகுண்ட காலையிலும், தான் சினங்காட்டாது, அவனினீங்காது, யானையைத் தன்வசமாக்கிக்கொள்ளும் பாகனைப்போல, அரசனைத் தன்வயப்படுத்திக் கொள்ளுந் திறமையுடையனாயிருத்தல்வேண்டும். (46) அரசன் நமக்கு எப்போதும் இணங்குவான் என்று கருதி அவன் ஒன்றை ஏற்றுக்கொள்ளக்கூடாத பொழுதிலே, அதனை அவனிடஞ்சொல்லுதல் தவறு. அரசன் ஒரு சமயத்திலே எளியனாயிணங்கிச்சென்றாலும், மற்றொரு சமயத்திலே உட்சினமுடையனாய்க் கெடுதிவிளைத்தலுங்கூடும். பழக்கம், நன்பு, உரிமை முதலியனபற்றி அன்புவைத்தல், சினமிக்க அரசன் மாட்டிலதாகும். சினமுற்றபோது, அவனுக்கு அயலாரும் நண்பரும் ஒரே தன்மையராய்த் தோன்றுவர்.

பெருந்தன்மையாளர் சிலர் அரசவை காத்தும், பெற்ற பயனாற்றிருத்தியடையாதிருப்பர் சிலர் திருத்தியடையர். (26) பின்னையோர், அந்தப்புரத்துப் பூனை போல்வர், முன்னையோர் அரசர் வாயிற்புறத்து யானை போல்வர். (48) அரசர்கடைவாயில் காத்துப் பயனில்லையென்று வருந்தவேண்டியதில்லை, பலநாட் காத்தபயன் ஒருநாட் திரண்டுவந்து, அரசவையிலேமிகுந்த நலனை விளைத்தல்கூடும்.

## தவம்.

முயற்சிகள் பலவற்றுள்ளுஞ் சிறந்தது தவ முயற்சியே. (90) சுறுசுறுப்போடு பயனற்றவாய பலவற்றைச் செய்து இரவும் பகலும் நேரத்தை வீணாக்குஞ்சிலர்,

ஒருக்கால் நல்லவழியிற் செலுத்தப்படின், பதறிக்குலே குலேவர். இவர் எவ்வாறுய்வர்? (91) வாழ்நாளின் அளவினைத்திட்பமாக அறியக்கூடுமாயின், இப்போது இளமையோடிருக்கிறேம். முதுமையிலே தவஞ்செய்வோமென்று வருத்தமின்றித் தூங்குதல் முறையாகும். வாழ்நாளின் அளவறிந்த முனிவர்களும், அப்படித்தூங்காது தவஞ்செய்கின்றார்கள். நல்லவற்றைச் செய்யத் தொடங்கினாலும், தீவினைப்பயன், பொருத்தமில்லாத நெறியிற்கொண்டு செலுத்துதல்கூடும். (92) அது, இரவு நல்ல அகலமானவழியிற் செல்வோரை, வழிப்பறி பறிக்குந்திருடர், தவறாயவழியிற் செலுத்துதல் போலும். தவத்தினை மேற்கொண்டோர், காவாகத் தமது உள்ளத்தைக் கூடாவொழுக்கத்திற் செலுத்துதல் கூடாது. (93) உடை ஐம்புலனைக்காவாவிடினும் உடம்பை மறைத்து ஒருவன் மானத்தைக்காக்கும், துறவானடை உடம்பைக்கூட நன்கு மறையாது. (94) பிறரறியாது காவாகத் தீயவொழுக்கிற் செல்லும் அறிவிலிகள் தாங்கள் பிறரை வஞ்சித்துவிட்டோமென்று மகிழ்தல் தவறு. எங்குமுள்ள கடவுள் அறிந்து தம்மைத் தண்டிப்பானென்று நடுநடுங்கியஞ்சுவதே அறிவாகும். (95) மறைவாக இழைத்த பழியைப்பற்றிய பேச்சு, தெய்வமானது பறையறைந்தாற்போல எங்கும் விரைவிற் பரவும், தீயநாற்றமிகுதியுடைய புலாலினைப் பொதிந்து மூடினாலும், அதன் கெட்டவாசனை தூரத்திலுள்ளார் முகத்திலே போய்த்தாக்கும். யார் யார் எவ்

வெத்தகுதியாரோ, அவ்வத்தகுதியுடையார்போலத் தாமும் அவ்வவர்க்குத் தோன்றுந்தன்மையராய் அவ ரவர்க்கு ஆவனகூறி நாடத்தக்க நலங்களையறிவுறுத்தித் தமது தனி நிலையில் எல்லார்க்கு மேம்பட்டுத் தம்மை யுடைய கடவுள் அவ்வவர் பொருளாய் எங்கும் விளங்கி நிற்பதுபோலத் திகழ்வர், எம்மை யடிமையாகக் கொண்ட பெரியோர், (99) மெய்யுணரும் விருப்பத் தார், நிலையற்ற பொருளினிடம் அறிவைச் செலுத் தாது, மெய்யுணர்வு கைகூடுதற்கேதுவாக, ஐம்புலன் களையுமடக்குவர். அவர்கள், அடக்கமே வாயிலாகவும், பழிக்கஞ்சுதலே, நெடுங்கதவாகவும், கலங்காமையே தாழாகவும் உடையராய்த்திகழ்வர்.

கல்வியிற் சிறந்த காதலர்க்குக் கற்பிற்சிறந்த காதலி பெற்றுக்கொடுத்த முதல் மகன்போல, துறந்தார்க்கு மெய்யுணர்விற்றோன்றுமின்பமே உயர்ந்த ஆனந்தமாம், (100) பிறவெல்லாம் துன்பங்களின் வேறல்லவாம். (97) பெரியோர் செய்கை பிறர்க்குப் பொருத்தமில்லாதன போற்றோன்றினும், அவை உண்மையாகப் பெருநலம் பயப்பனவாதலின், இழிவானவையல்ல, (101) நிலைத்த பெருநெறிச் செல்வார் யாரெனில், கற்றவற்றைத் தெளிந்து, தெளிந்த முறையில் அடங்கி நடந்து, தீமை யை நீக்கி நன்மையாற்றிக்கொண்டு மனநிறைவுற்று, வீட்டுநெறி கடைப்பிடித்து வீட்டிற்குரிய சாதனங் களையே கைக்கொண்டு செயலற்று நின்று ஒரு பொரு ளாகிய கடவுளை நாடி நிற்பவரேயென்க.

ஐயந்திரிபற உண்மையை உரையளவையாலறிந்து கருதலளவையாற்றெளிந்து, மெய்ப்பொருளையுணரும் ஞானக்கண் விழித்திருப்ப, ஊனப்பொருள் தோன்றப் பெறுதவர் தமது அறிவின்கண்ணே காண்பதே ஞானமாம், அத்தகைய கனவுக்காட்சியே அவர்க்கு நனவிலும் நிகழப்பெறுதலே முடிந்த நிலையாம். நனவு கனவு நிலையாகப் பெறுதலே முடிந்த இடமென்பாருமுளர்.

இல்லறத்தினியல்பினையும் துறவறத்தினியல்பினையும் சிதம்பர மும்மணிக்கோவை முதற் செய்யுளிலே அடிகள் அழகாகத் தொகுத்துரைத்தார். இல்லறமாவது, உயிர்க்கும் உலகவாழ்விற்கும் உறுதிபயக்கும் முயரிய நூல்களைக் கசடறக்கற்றுத்துறைபோய பின், விதிப்படி மணந்த கற்புடைமனைவியொடு தொடர்புடையார் பால் அன்பும், பிறர் பால் அருளும் உடையராய், இன்சொல்லினலே விருந்தோம்பி, அருந்தவரை யாதரித்து, ஐவகை வேள்வியாற்றிப் புகழ்படைத்துப் பிறர்மனைவிழையாது, மனைவாழ்க்கைக் கணிகலமாய மக்கட்பேறடைதற்பொருட்டு, நன்னளிலே மனைவியோடின்பந்துய்க்குமியல்பிற்று. துறவறமாவது, நிலையாமையுணர்ந்து, அறிவு முதிரப்பெற்று, இன்பத்தையும் பொருளையும் நாடாது, அருளும் பொறையும், அடக்கமும் ஒழுக்கமும், வாய்மையுந் தூய்மையும், உடையராய்க் கால் நடையாகப் பலபதிகட்குஞ்சென்று; இறைவனை வணங்கி மான்றோலாடை, புலித்தோலாடை முதலியவற்றை உடுத்து, எலும்பு தோன்றும் யாக்கையராய்,

இடர்வந்தாற்கலங்காது, மலையுங்காடும் புகுந்து, சருகுங் காற்றும் நீரும் உட்கொண்டு, கடும்பனிக் காலத்தில் நீரினுள், வேனிற்காலத்தே ஐவகை நெருப்பினடுவிலும், தவமியற்று நிலையாகும் என்றது காண்க.

கற்பனை நயம்.

இனி, அடிகள் திருப்பாடல்களுட் செறிந்த கற்பனை நயங்களை யாராய்வாம், கற்பனைகளுள்ளும், சமயக் கருத்துக்களையும் நீதிநூற் கருத்துக்களையும் அடிகள் இனிதமைத்துள்ளார். (மு கு. பி. 56) கட்குடித்த கடைசியர், நெற்கதிரைக் கரும்பெனவும், கரும்பினைக் கமுகெனவும், மயக்கத்தாற் கருதுங்கால், தத்தங் கருத்துக்கமைந்தபடி சாற்றிச் சாற்றி முழுமாயச் சலதி மூழ்கித்தடுமாறுஞ்சமயத்தவர் போலாவர் என்றனர்.

(மு. கு. பி. 57) கடைசியருடைய கூந்தல் வரிசைகளிலே வண்டுகள் ஓலமிட, அக்கூந்தற்றொகுதியைக் கருமையாகிய நீர்ப்பரப்பென்று கருதி, மடுவிலுள்ள வாளை மீன்கள் விசையோடு மேலேதுள்ள, அவை வான் கங்கைப்புனலில் விழப்பெற்றமை ‘வீட்டின் பயன் துய்க்கும் உள்ளக்கருத்தாற் பிறிதொன்றை உண்மைப் பொருளென்றுள்ளவுந் தம் உணர்விற்றெய்வங் கடைக்கூட்ட உறுதிகிடைத்தபடிபோலும்’ என்றது காண்க. (மீ. பி. 81) அம்மை விளையாடுமம்மனை, அவளது பல்லொளிதோய்ந்து வெள்ளையாவதைப் பார்த்தவர்கள், அதை வெள்ளிறத்ததென்றும், அவனது செவ்விய

திருக்கரத்தின் ஒளிபெற்று அது சிவப்பாயிருந்ததைப் பார்த்தவர்கள் அது செந்நிறத்ததென்றும், அம்மையின் கருவிழியின் ஒளிபெற்று அம்மனை கருநிறமாயதைக் கண்டவர்கள் அது கருநிறத்ததென்றும் தம்முள் மாறு பட்டுரைப்பது 'மற்றைச் சமயத்தமைவு பெறு:—தத்த மில்நின்று பிதற்றுவபொருவ' தென்றார்.

(பண்டார மும்மணி 14) பாசக்கட்டினின்றும் விடுபடாத சிந்தை போன்ற இருளடர்ந்த பெரிய பொழி லின் கண்ணே, இரவலர்க் கீயாதமாந்தர் போன்ற வேங்கைமரங்கள் பல வண்டுமொய்யாத பொன்மலர் பூத்துவிளங்க, அதனருகே புன்னையானது இலையில்லா மல் தன் கிளைகள் முழுவதிலும் வெண்பூப் பூத்துநிற்ப, அதன்மீது மெய்யறிவிலார் கண்போலப் பயனற்ற பல கண்ணையுடைய பசுந்தோகை மயிலானது அமர்ந்திருக் குந்தோற்றம், கற்பகச் சோலையிலே, பல கொம்புகளை யுடைய வெள்ளையானைமீது வீற்றிருக்கும் ஆயிரங் கண்ணனது காட்சியை நல்கிற்று.

பண்டார மும்மணிக்கோவை நான்காவது பாட் டிலே 'ஈயாமாக்கள் தீமொழிகவர்ந்த சிற்றிடை' என்ற விடத்து 'இல்லை' யென்பதை உலோபிகள் வாயிலுள்ள கெட்ட சொல் என்றார். திருவாரூர் நான்மணிமாலை 8ம் பாட்டினுள், வானைத்தொடும்படி மேலோங்கி யெழுந்த கொடிகள் மதியின் வயிற்றிலேதட்டி, அத னைக்கீற, அதன்கணுள்ள அமுதம், கொடிகளின் வெப்

பத்தை ஆற்றுதல்; எத்துணை கெடுதி செய்வார்க்கும் நன்மையைச் செய்யும் அறிஞரியல்பினையுணர்த்து மென்ரூர், காசிக்கலம்பகம் 45-வது பாட்டினுள்,

"வச்சை—மாக்களெனவே

முடவலவன்வளை வாயடைக்கு மறைநாளே" என்ற விடத்து வளைந்தநண்டு தனது வளையின் வாயிலையடைப்பது, உலோபிகள் தமது வாயிற்கதவை யடைத்தாற் போலு மென்றனர்.

இனி, இறைவர் திருமேனிச் சார்பாய கற்பனைகளை ஆய்வாம். இறைவன் திருமுடிப் பொருள்களை அடிகள் பலவிடங்களிற் பலவகையாகப் புனைந்துரைத்தமை கருதத்தக்கது (திருவாரூர் நான்மணிமாலை 26) "தியாகாது சடையானது, பொய்த்தலைபோன்ற வெண்டலை வைத்த தினைப்புனமொக்கும், கங்கையானது தினைப்புனங்காக்கு மாதரைப்போலும், பிறை அம்மாதர்பாலுள்ள கவணை யொக்கும்" என்றவர் பிறிதொரு பாட்டிலே

(திருவாரூர் நான்மணிமாலை 38) பிரானாது செஞ்சடைக்காடு—தீயொக்கும்; கொன்றைப்பூவானது எரியில் இட்ட பொன்போலும், அப்பூவைச்சூழும் வண்டுகள் கரித்துண்டுகள்போல்வன; கங்கை, அப்பொன்னைப் பணியாக்குவதைப் பார்க்கும் பெண்ணொருத்தியைப் போலும் வெண்பிறை அப்பொற்பணிசெய்யும், கிழத்தன்மையாற் கூனுற்ற கொல்லனையொக்கும் என்றனர்.

மற்றொரு கற்பனை வருமாறு :-(சிதம்பர மும்மணி 12) சடையானது, தாமரைப் பூச்செறிவுபோலும்; கங்கை, தாமரையில்வாழும் அன்னத்தை யொக்கும், பிறை, தாமரையின் பாங்கர்க்கிடக்கும் வெண் சங்கு போலும். (காசிக்கலம்பகம் 37) பொன்னுருக்குப் போன்றது. கொன்றைப் பூங்கொத்து, வெள்ளிமுளை போன்றது பிறை, காந்தட் பூமலர்ந்தாற்போன்றது பாம்பு, கங்கையில் வெள்ளைக்கமலம் விரிந்தாற்போன் றது, வெண்டலையின் சிரிப்பு.

(காசிக்கலம்பகம் 4ம் பாட்டு) சிவபெருமான் தோளிற்போர்த்த யானையினுரியானது குலவரைமீது தவழுமுகில்போன்றது. இறைவனது இருகண்களாகிய கதிரவனும் திங்களும் அவனது தோளாகிய மலையினை வலம்வருவது போன்றன.

(திருவாரூர் நான்மணிமாலை 11) இறைவனது திரு மேனியின் இடப்பாகத்தை மலைமடந்தை கொண்டது போல, வலப்பாகத்தை நீர்மங்கை கொண்டனளென் பார், இறைவனது வலப்பாகமானது திருநீற்றொளியால் வெண்மையாக, வெண்டலை வரிசையானது நுரைகக்க அம்மையின் கயற்கண்ணாய மீன் உலாவிற்றென்றார்.

(திருவாரூர் நான்மணிமாலை 31) வெண்ணீறணிந்த இறைவர் திருமேனி வெண்மையாயும், அம்மை திரு மேனி கருநிறமாயும், இருவர்க்குமிடையேயுள்ள சேயோன்திருமேனி செம்மையாயும் தோன்றுங்கால்,

முக்குணங்களின் நிறம் காணப்படுதலால், முக்குணத்தாலாய உலகிற்கு இவர்களை காரணரென்றறிக, என்ற அடிகள் பிறிதொரு பாட்டிலே

"கங்குலும் பகலும் கலந்தினி திருந்தாங்
கிடம்வலம் பொலியு மிறைவியு நீயும்
நடுவண் வைகுநா கிளங் குழவியை" என்றார்.

(34) மயிலுக்கும் பாம்புக்கும் பகையாதலின், மயிலாகிய அம்மை தமது திருமேனியிலிருக்குந் துணிவு கொண்டு, தியாகேசர் அஞ்சாது புற்றினிற்குடிகொண்டார், பாம்பினை மணியாகப்பூண்டார், விடத்தையுமுண்டார், என்றனர். கணபதியின் சிறப்பைச் சில பாடல்களிலே அடிகள் விதந்தோதினர். (திருவாரூர் நான்மணி 6) இறைவன் திரு மார்பிற்பொறித்த அம்மை நகிற்றழும்பு அவன் இருத்தற்கு ஒரு கற்பனைக் காரணங்கூறுவார், இறைவன் முதுகிலே யானைத்தோல் போர்த்திருப்பதைக்கண்ட ஆனைமுகக்குழந்தை, அதனைப் பெருமாள் முதுகிலூர்ந்த யானையென்றெண்ணிப் பாய்ந்தபோது, அக்குழந்தைக் கடவுளின் மழவிளங் கொம்புகள் இறைவன் மார்பிற்பட்டபோதுண்டாகிய சுவடே, அத்தழும்புகளென்றார். (மீ. பி. 56) மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழிலே, ஆனைமுகப்பிரான், அம்மை திருமுலைப்பாலுண்டு, கடைவாய் மதம் பொழிவது போல, நிலவொளிகாலுங் கிம்புரியணிந்த தமது மருப்பினால், மலைகளைத்தாக்கிப் பொழில்களகத்துள்ள பொன்னிறப் பூந்துகள்களை நெற்றியிற்றிலகமணிவது

போலணிந்து, எழுகடலையுந் துதிக்கையால் அள்ளி யெறிந்து, மதநீரால் அவற்றை நிரப்பி வானளாவிய தனது தோற்றத்தால், பிறையானது அங்குசம்போல வும், முகில்கள் முகபடாம்போலவும், விண்மீன்கள் முக படாத்திற்பதித்த முத்தம் போலவும் விளங்குமாறு பெருமித நடையுடன் துதிக்கையால் வான்முகடு தட வும் பெரியதோர் இளங்களிறுபோல் வானென்றவிடத் துக் கற்பனைப்பெருமையை அற்புதமாக்கினர். கயற் கன் அம்மை பிள்ளைத்தமிழ்க் காப்புச் செய்யுளிலே, கணபதியினது கதுப்பினின்று பாயுமதமும், கண்ணின் றெழுங்கனலும், எல்லை கடவாதவண்ணம் தடுப்பதற்கு அவரது காதினசைவினலெழுங்காற்றுப் பயன்படுவ தென்றார். பிற்பாட்டுக்களிலே 'சித்தமாகியதறியிலே கட்டும் யானை' என்றும், 'ஐம்புலக்களிலு ஓடுமாறு புந்தியில் நின்றுபிளிறுந்தந்தி' என்றுங் கூறியவர், பண்டார மும்மணிக்கோவைக் காப்பினுள், 'மால், அயன், இந்திரன் வணங்குங்கற்பக' மென்றார். காசிக் கலம்பகக் காப்பினுள் ஒப்பற்ற யானைமுகத் தெய்வம், பாசமாகிய கட்டையறுத்துப் பாவக்கடலைக் கலக்கி யொழித்து, அன்பினுற் பிணிக்கப்பட்டு அடியாருள் ளத்தே நிலவும் என்றமை காண்க.

பிற்காலத்து இலக்கியமுறைக் கேற்ப உயர்வு நவிற்சியினை இயற்கையளவிற்கு மிகைபடக் கையாண் டுள்ளார். ஒருத்திஅமுதவிழிநீர் முந்நீரை யுவர்நீராக் கிற்று. (மீ. பி. 17) மதுரை நகரத்திலுள்ள பொய்கை

வின்கண் உலவும் வாளை மீன்கள் மேலே துள்ளிப்பாய்வ தால், திங்கள் மண்டபத்தி லுள்ள முபற்பகுதி கிழிபட் டுக் கீழே அமுதவெள்ளருவியுகுத்தது. அம்மீன் தமது தகடுபோன்ற வயிற்றுடன் மீண்டபோது, தாமரை யரும்பினில் முட்ட, அது விரிந்து தெள்ளியதேனருவி பொழிந்தது.

(25) வாளை மீனனது கருக்கொண்ட மேகங்களின் வயிற்றிலேதாக்கி, அதை ஊடுருவிச்சென்று அப்பா லுள்ள விண்ணவருலகத்துக் கற்பகக் காட்டினையுங் கடந்து வான்கங்கையைநீந்தி மதிமுயலைத்தடவி, விண் மீன் கூட்டத்தைக்கடந்து, அண்ட முகட்டிற்கு வெளி யிலுள்ள பெரும்புறக் கடலிலுள்ள வலிய சுறவினேடு விளையாடும், என்றவிடத்து, உயர்வு நவிற்சியென்பது வாளைமீன் பாயும் உயரத்தையே நவில்வதாய் முடிந்தது.

கூடன்மாநகர் வீதியிலே, மகளிரது கூந்தலின் நின்று வீழ்ந்த பூந்துகள் அடங்கும்படி குங்குமக் குழம்பு தெளிக்கப்பட்டது. (26) அது துகளோடு சேர்ந்து சேருகிவிட, அச்சேற்றிலே மதயானைகள் வழுவி மேற்செல்லாது தெருவிலே நின்றன. அரசர் தேரும் ஒதுங்கிச் செல்லும்படியாகச் சிறுதேருருட்டும் இளைஞரது குதிரைகள் கக்கிய நுரைப்பெருக்கம் ஆறு கச்சென்றது.

(27) சோலைகள் வானளாவிவளர்ந்தமையால், வண்டுகள் ஆண்டுள்ள பூக்களிற்படிந்துதிர்த்த மகரந்தம்

வான் கங்கையை நிறைத்துத் தூர்த்தது. சோலை மந்திகளின் ஆரவாரத்தால் ஒதுங்கிய கருமுகில்கள், சூடடித்துக்குவித்த நெற்பொதியிற்படர்ந்து, வைக் கோற் போராகிய குன்றின்மீது ஏறுங்கால், கட்குடித்த மள்ளர் பிணையலிடும் எருமைக்கன்றோடு சேர்த்து அம் முகில்களையுமடிப்ப, அவைகள் இடியாகிய குரலைக் காட்டி ஒலித்தன. (மு. கு. பி. 29) வேளூரைச்சேர்ந்த அகழியைக்கடலென்று கருதி அதன்கண், மேகங்கள் படியவும், அங்குநின்ற ஓர்யானை, அவற்றை எருமைக ளென்றெண்ணிப் பிளிறவும், நிமிர்ந்த முகில்கள், மதில் கள் மிசைபடியச் சென்றகாலை அம்மதில்கள் விண்ணுல கிற்கேறவைத்த ஏணிபோலுயர்ந்து அங்குள்ள கற்பகக் காட்டிற்கு வேலியாயுமிலங்கி ஏழுலகையும் வளைத்தாற் போன்றமையால், முகில்கள் அவற்றின் முடிவு காணு திளைத்தன.

(57) விளையாட்டுச் சிறுமியர்கள் சுளகாலெடுத்துக் கொட்டிய மணிகளின் குப்பையானது உயர்ந்து வான் வழியை அடைத்தலால், கதிரவன் தனது வழக்கமான வழிதப்பிச்சென்றான். வைகையானது வானளாவும்படி பெருகியுயர்ந்தமையால், பகலவன் அந்நதிமீதுள்ள பொன்தோணிபோன்றான்; திங்கள் கைத்தோணியாக வும், விண் மீன்கள்; சிறு மிதப்புக்களாகவும் விளங்கின. வைகையானது வெள்ளையானையின் மதநதியையும் வான் கங்கையையும் எதிர்த்துச்சென்று ஆகாயத்தையுங் கற் பகக் காட்டையுங் கடந்து இரைகொழித்தது.

(மு. கு. பி. 82) காவிரியாற்றின் சிறப்பும், முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழில் இவ்வாறே கூறப்பட்டதறிக.

(59) நெற் கதிர்களின் குலைகள் முகில்களை யளாவி நின்றன வென்பார், மகரந்தமாகிய சுண்ணத்தைப்பூசித் தேனருவிபடிந்து திளைக்கும் வண்டுக்கூட்டங்கள், தமது நீங்காரத்தாற்பசிய இதழ்களைத் திறப்பத் திரு மகள் உட்புகுந்து வீற்றிருக்குந் தாமரைக் கோயில்கள் பலவற்றை யமைத்த மருதநிலமாகிய தச்சன் கமுக மரக்கால்களை நிறுத்தி யமைத்த பந்தலின் மேற்கட்டி யாகிய மேகச் சேலையிற்றூக்கிய பன்மணிக் கோவை போல, நெற்கதிர்கள் உயரநிமிர்ந்து பொலிவுற்றன வென்றார்.

(மு. கு. பி. 25) சோலையிலுள்ள தென்னமரங்கள் வளர்ந்தோங்கி விண்ணவர் கோமான் கொலுவிருக்கு மிடத்தே நடனமாடும் மயிலினம்போன்ற மாதர்க்கு இளவேனிற் களைப்புத்தீரும்படி செவ்விள நீர்க்குலைகள் கொடுத்தன. கமுகமரங்கள் பழுக்காயாகிய பவளமுடன் பூவாகிய முத்துக்களுஞ்சேர்ந்த தமது தோகையினால், அந்நங்கையர்க்குக் கவரிவீசின.

இனி, உயர்வு நவிற்சிமிக்கில்லாத உவமை நய முணர்த்தும் பகுதிகள் வருமாறு :—(காசிக்கலம்பகம் 57) பூங்காவிலுள்ள மரங்களிலே கொடிகள் படர்ந்து கமுகமடலிற்படிந்து தொங்கித் திசைதோறும் நீண்ட வாழைக்குலைகளைச் சூழ்ந்துசெல்ல, அக்கொடிகள்மீது

செம்முகமந்தி விளைந்த பலாக்கனியைத் தலையில் வைத்துச் சுமந்து செல்லுவது, ஒரு கூனற் கிழவன் குடமொன்றைத் தலையில் வைத்துக்கொண்டு நெடியதொரு கம்பத்திற்கட்டிய கயிற்றின்மீது நடந்தாற்போல வியப்பினையுண்டாக்கும்.

(87) பொழில்களிலே வெண்ணிற அரும்புகள் ஆண்டாண்டுத் தொக்கு நிறைந்திருப்பது, விண்மீன் கூட்டங்களின் காட்சியைத்தருவன.

(மீ. பி. 45) அங்கயற் கண்ணம்மை வனப்பை வர்ணிப்பார், முத்துக்கள் தோன்றும் பொருள்களையெல்லாம் அழகாகத் தொகுத்தனர். அம்மையை நோக்கிக் கூறுவார், நின் கூந்தலுக்குத்தோற்ற கொண்டலும், மொழியின் இனிமைக்குத்தோற்ற கரும்பும், சிறிய திருவடிக்குடைந்த செந்தாமரையும், பசிய கழுத்திற் கொவ்வாத சூல்கொண்ட சங்குங்கமுகும், தோளிற்குத் தோற்ற மூங்கிலும், நகிலிற்குத்தோற்ற யானைமருப்பும், பயக்கின்ற முத்துக்கள் நின்றிரு நகைக்கொவ்வாமை யியல்பே.

(மீ. பி. 86) மலையருவிவளத்தால் வெள்ளப்பெருக்கு மிகுந்தகாலை, மலைப்பாம்புகளாற் சுற்றப்பட்ட யானை யானது ஒரு சுழலிலகப்பட்டுச் சுழல்வது வாசுகியால் வளையப்பட்ட மந்தரமலையானது பாற்கடலிற் சுழல்வது போன்றது என்றவிடத்து அழகும் பெருமிதமும் ஒருங்குமிளிர்தல் காண்க.

(87) ஆற்றின் மூழ்கு மடந்தையர் செம்பொற் சுண்ணத்தை ஒருவர்மீது மற்றொருவர் எறிந்து விளையாடுங்காலை, அச்சுண்ணத்தாற் சிவந்த வெளியிலே அம்மை குழற்கணுள்ள வண்டெழுந்துபறப்பது, இறைவனது செம்மேனி மிசை அவள் விழிகள் பொருந்தினாற்போன்றிருந்ததென்றார். இது குறித்த செய்யுளுள் இளைஞர் காமத்திக்கு மகளிர் தமது கூந்தலுக்கூட்டும் அகிற்புகையைப் புகையாகக் கூறினர்.

(94) அம்மை வெண்ணிறமான முத்துமாலைபூண்டு முத்தூஞ்சலிலிருத்தல், வெண்டாமரையிற் கலைமகள் வெள்ளைப்பணிபூண்டு வீற்றிருப்ப தொக்குமாகலின், கலைமகளும் அம்மைவடிவமேயென்பதும், மதிமண்டலத்தில் அம்மை தங்கினதுபோற் றோற்றலால், மதியமுதமும் அவளேயென்பதும் அறிவுறுத்தவாறாயிற்றென்றது காண்க.

முகில்கள் மாணிக்கம்பதித்த மதில் முகப்பிலேறித் தவழ்தல், கதிரவன்மடியில் அவன் மகள் யமுனை விளையாடுவதுபோற்றோன்றியதென்றார்.

(மீ. பி. 95) அம்மை ஊஞ்சலிலாடுங்கால், அசோக மரத்தினையுதைப்ப, அம்மரம் பூத்துச்சொரிதல், மன்மதன் தன்னுருவத்தை மறைத்து மலர் வாளிதொடுப்ப தொக்கும் என்றார்.

(சி. மு. கோ. 2) தில்லையிலே, திருமன்றமானது தாமரை நடுவிலுள்ள பொகுட்டாகவும், மதில்கள் இதழ

மூாகவும், மாடங்களிலே தங்கும் புயல்கள் வண்டாகவும் பெற்ற நல்ல அழகிய தாமரையையொத்திருக்கின்றது, கூத்தப்பெருமான் திருக்கோயில் என்றது காண்க.

(செய்யுட்கோவை 14) மற்றொரு பாட்டிலே அம்பலத்தைக் கமலத்திற் கொப்பிட்டார்; பொன்னம்பலமானது, பொன் தாமரைபோலும், அம்பலவர் திருமேனி அத் தாமரையிலுள்ள தேனைப்போலும், எம்பெருமாட்டியின்விழி அத்தேனையுண்டுவக்கும் வண்டினைப்போலும்.

(4) நெடு மடற்றாழையானது, சங்கினையும் சங்கீன்ற முத்தினையும் தனது மடலிலே தாங்குதல், வெண்மதிக் கடவுளையழைத்து விருந்தோம்பி இன்பக்கண்ணீரொடு தழுவி வெண்சோறுண்பித்து, அவனையும் அவனினத்தராகிய விண்மீன் கூட்டத்தையும், தனது இல்விற் தங்கும்படி செய்தாற்போன்றது.

(28) தில்லையம்பதியிலே, தடாகங்கள் திருமால் பள்ளிகொண்டருளும் பாற்கடல்கள் பல ஓரிடத்திருந்தாற்போன்ற தோற்றத்தொடு திகழ்ந்தன. அது எவ்வாறெனில், அவற்றின் தீம்புனல் பால் போன்றது; அவற்றிலுள்ள சங்குகள் நிலவொளிவீசி நீரிற்கு வெண்ணிறந்தந்தன; ஆண்டுள்ள அலைகளின் செறிவு பாம்பணைபோன்றது; பசிய இலைத்தொகுதி திருமாலின் திருமேனிவண்ணங்காட்டிற்று. அங்குள்ள தாமரைகள்,

அப்பெருமானது, விழி, இதழ் முதலிய உறுப்புக்கள் போன்றன. அன்னப்பறவை திருமகள் போன்றது.

(பண்டார மும்மணி 22) நன்மழைபெய்து நன்ளுகத்தழைத்த நிம்பலவின் வேரிலே பழுத்துப் பூமியுட் கிடந்த பலாக்கனிகள் வெடிப்புற்று மணம் வீசுதலும், அதனையறிந்த மந்தி நிலத்தையகழ்ந்து பொன்னிற முடைய சுளைகள் பலவற்றைத் தோண்டுவது முன்னுளொருவர் பொன்குடநிறைய நிதிவைத்துப் புதைத்ததை மையிட்டுக் காண வல்லவர் கண்டெடுக்குங் காட்சியினைப்பயந்தது.

ரூற் கதைகளையமைத்து அவற்றிற்கேற்ப உவமங் கூறுதல் பல பாடல்களிற் காணப்படும். (திருவாரூர் நான்மணிமாலை 5) கரிய விரலையுடைய மந்தி பலாப் பழத்தை முன்னே கண்டவுடன் பல்லைக்கடித்துச் சென்று அதைத் தன் மடியில் வைத்துக்கொண்டு நகங்களால் அதனுள்ளேயிருக்கும் சுளைகளையெடுத்து வாயிற் போடுவது, தூணிலே தோன்றிய நரசிம்மமூர்த்தி இரணியன் மார்பினைப்பிளந்து அவன் குடரினுள்ள கொழுப்புத்துண்டுகளை வாயிலிட்டு விழுங்கினுற் போன்றது.

(மதுரைக்கலம்பகம் 47) வண்டு செவ்வழிப்பண் பாட, செவ்விய இதழினைவிரிக்கும் பொன் தாமரையானது பாணனொருவனது பாட்டிற் கிரங்கிப் பொற் பலகை நீட்டிய இறைவர் செங்கைக்கு ஒப்பிடக்கூடிய

த்தாய்த் திகழ்ந்தது. இறைவர் திருக்கைகளையும் திருவடிகளையும் தாமரைகளுக்கொப்பிட்டு, முன்னவை, கல்லாகிய மேருமலையையும் பின்னவை இரும்பாகிய தமது நெஞ்சையுங் குழைத்தனவென்பார் (5) 'வரும் புண்டரிகம் இரண்டால், ஓர் கல்லும் என்வன்னெஞ்சமாம்—இரும்புங்குழைத்த மதுரைப்பிரான்' என்றார். கூத்தப்பெருமான் திருமுடியிலுள்ள பிறை அவன்றிருமேனியிலுள்ள பாம்பிற்குப் பயப்படாது, அம்மையின் திருநுதலுக்கு அஞ்சியது; அவன் திருக்கரத்திலுள்ளமான், திருநடனங்காணும் புலிமுனிக்கஞ்சாது, அம்மை திருவிழிக்கஞ்சியது என்றவிடத்தே, உவமங்கள் குறிப்பானுணர்த்தப்பட்டன, ஈண்டு, எதிரிகட்கஞ்சாது தன்னினத்தார்க்கஞ்சு மியல்பு சுட்டப்பட்டது.

வெண்மதிக் கடவுள் மேலே வானிற்செல்ல, மேகக்கூட்டங்கள் கீழே படியக்கண்டபோது வெண்ணிற அன்னமாகிய அயன் மேலே சென்றும், கருநிறத்திருமால் வராகமாய்க் கீழேசென்றும், இறைவன் அடியுமுடியுந் தேடியதோற்றம் நினைவிற்கு வருகின்றதென்றார். (செய்யுட்கோவை)

ஒளி, நிறம் முதலிய காரணங்களால், ஒரு பொருளைப் பிறிதொரு பொருளாகத் திரியக்கொள்ளுமுணர்வு ஏற்படுதல் பல பாடல்களில் எடுத்தியம்பப்பெற்றது. உமைபம்மை திருக்கையிலுள்ள கிளி இறைவனது கறைமிடற்றினைக் களங்கனியென்றெண்ணி அதைத் தின்னச் சமயம் பார்த்திருந்தது. (காசிக்கலம்பகம் 51, 68)

கங்கைக்கரையிலுள்ள கனத்த பருமுத்தினை அன்னங்கள் தமது முட்டையென்று கருதித் தழுவிமகிழும். மாதர் அகிற்புகையிட்டு ஈரம்புலர்த்துங் கூந்தற்றொடுதியை மேகமென்றெண்ணி மயில்கள் ஆடும். (மு. கு. பி. 23) அவர்கள் பவளவாயிற்றோன்றும் புன்னகையினை நிலவொளியென்று சகோரப்புள் அதனை அருந்தக் கருதும்; அவர்களுடைய முழுச்சிரிப்பின் ஒளிபாலே, மாளிகையிலும் சூளிகையிலும் பதித்த சந்திரகாந்தக் கற்கள் உருகிப் பெருகியநீர் வெள்ளமானது கடலின் புலவு நாற்றத்தைமாற்றின.

(மு. கு. பி. 48) மாதர் வடிவத்திலே ஆடவர் ஒரு புதிய உலகங்கண்டு மகிழ்ந்தாரென்பார் கூறுவதாவது:- மலர்முடித்த மாதர் தமது கூந்தலினை விரித்துக்காட்டுங் காலை வெளிப்போந்த பூந்துகட்படலமும், அக்கூந்தல் கட்காட்டும் அகிற்புகைப்படலமும், கருமுகிற்படலம் போற்றோன்ற, அவர்களது கமலமுகச்சோதியொடு கூடிய புன்னகை, நிலவொளிவீச, தீப்போலொளிரும் அவர்களது மணிபணிகள் வெயிலினைக்கொடுக்க, அன்னார் நகிலும் பிறவும், மலையுங் கடலுமாய்த்தோன்றக் கண்ட ஆடவர், கௌசிகனைப் போலப் பிறிதோருலகமும் நீங்கள் படைக்க வல்லீரெனக் கூறிவியந்தனர்.

(பண்டார மும்மணி 19) பளிங்கினாலே செய்யப்பட்ட நிலா முற்றத்திலே, மடந்தையர் விளையாடுங் காலத்திலே, அவர்களுடைய கருங்குழலும், குவளை

போன்ற விழியும், கமலம்போன்ற முகமும் வரிசை வரிசையாக ஒளிப் பாயும் பத்தி விசுதலினல் அவற்றின் செறிவைப், பாசிபடர்ந்து கயல்மீன் பிறழுந்தாமரையோடையென்றெண்ணி, ஆடவர் சிலர், நிலாமுற்றத்திற் சென்று ஆண்டுக்குழுமிய மகளிரை நோக்கி 'நீவிர் விண்மாதர்போலும், இந்நீரோடையில் நீராடவந்திரோ? நும்பெயர் யாதெனவினவ, அவர்கள் ஒன்றும் பேசாது சிரிப்பதைக்கண்டு, தமது ஐயம் நீங்கப்பெற்று வெள்கினர்.

(பண்டார மும்மணி 28) மும்மதம் மொழியும் யானைகள் படிந்து அலைவீசிக்கொண்டிருந்த ஆழமான பொய்கையிலே, தாமரையிலுள்ள பசும்பொன் பொடியினை அளைந்து பெண் அன்னமானது நிறம் வேறுபட்டு விளங்குதலைக்கண்ட ஆவல்மிக்க சேவலன்னம், இது மலர்வாவியன்று, பாற்கடலே. இது யானையன்று, மந்தரமலையே தும்பிக்கையையும் பிற உறுப்பினையுந்தடவுவோர், பாகரல்லர், வாசுகியைப்பற்றும் வானவரே, இங்கு வெண்முத்துப்போற்றோன்றுவது, பாற்கடலிலெழுந்த ஆரமுதே. பசிய இலைக்கூட்டம், கற்பகக்காடே, செந்தாமரையாகத் தோன்றுவது, பதுமநிதியே சங்காகத்தோன்றுவது சங்கநிதியே, சிவந்த கிடைச்சாய்த் தோன்றுவது, சிந்தாமணியே. ஆதலாற் பெண் அன்னமாய்த்தோன்றுவது, திருமகளேயென மயங்கிற்று.

(மு. கு. பி. 21) மாளிகைகளின் மேலிடத்துள்ள பளிக்கு நிலா முற்றத்தின் உச்சியிற்பதித்த மாகதத்தி னெளி விண்ணுலகிலே பத்தி பாய்ந்திலகியபோது, ஆண்டுள்ள பசுக்கள் அப்பச்சைக்கதிர்களை வான் கங் கைக்கரையிலுள்ள புல்லாமென்றுகருதி அவற்றைத் தின்பதற்கு நாவினைவளைத்தன.

(22) உயர்ந்த வீடுகளின் சூளிகையிற்பதித்த நீலக்கல்லின் ஒளியானது பாய்தலினல், விண்ணுலகத்து வெள்ளானை காரானையாகத்தோன்றவே, விண் மாதர், அதனை நிலவுலகம் நின்று அவண் போந்த களிறென மயங்கினர். வெள்ளானை தானும், தன் மேனிமிசைச் சேறுபட்டதாகக் கருதி அதனைக்கழுவுதற் பொருட்டு வான் கங்கையிற் படிந்தது.

(86) முருகப்பெருமான் குழந்தைப் பருவத்து முழக்கிய சிறு பறையினைக்கேட்டுப் பலர் பலவாறு அதன் ஒலியைக் கருதினர். அதனை மேக முழக்க மென்றெண்ணி மயில்கள் ஆடின. கடலொலியென் றெண்ணி மடந்தையர் காதல் கூர்ந்தனர். மறையொலி யென்றெண்ணி அந்தணர் உள்ளங்களித்தனர். சிவானு பூதியாளர், அதனைப் பரநாத வொலியென்றெண்ணி நெக்குருகினர். தேவருமுனிவரும் அதனை வாணன் குடமுழாவொலியெனவும், திருமாலின் மத்தளமென வுங்கருதி ஆரவாரஞ்செய்தனர்.

பொருள்களின் ஒளி நயத்தைச் சிறப்பாகவுணர்த் துஞ் சில பகுதிகள் வருமாறு:—

(மீ. பி. 78) வெண்சுதை தீற்றிய மேடையும், குளிர்ந்த முத்துக்கள் பதித்த மாடமும், தெள்ளிய நில வொளி வீசுவதால், திசைகளிலுள்ள யானைகளெல்லாம் வெள்ளையானையாய்த் திகழ்ந்தன. (85) பகலிலே இருளை யொழிக்குஞ் செம்மணி மாடங்களின் வரிசையும், இராவிலே நிலவொளிகாலுஞ் செழுமுத்து மாடங்களின் றொகுதியும் வெயிலினையும் நிலவினையுமொருங்கே தருத லாலும், ஞாயிறுந்திங்களும் வேளுருட்புகாதபடி மதில் கள் தடுத்தலாலும், அவ்வூரிலே இரவுபகலென்பன, குமுதமுந்தாமரையும் விரிதலின் வைத்தே அறியற் பாலனவாயின. (மீ. பி. 24) சிறுமியர்கள் மணிகளா லமைத்த சிறு வீட்டிலே குடிபுகுந்து அழல்போல வொளிவீசும் இரத்தினங்களை அனற்றுண்டுகளாக அடுப்பிலிட்டுப்பவளத்தின் கொடிகளை விறகாகஅடுக்கி வளைந்த சங்காகிய மிடாவிலே, தேன்வார்த்து, முத்தா கிய அரிசியிட்டுச் சோறாக்கிப் பக்கத்துவீட்டு மகளிர்க் கெல்லாஞ் சிறுசோறு வழங்கினர்.

(திருவாரூர் நான்மணி 20) மக்களுணர்ச்சிகளை இயற்கைப் பொருள்களுடையன போலக்கூறும் நயம் இவ்வாசிரியர் நூலுண் மலிந்திருப்பது. உயரிய கமுகிலே பிணித்த நெடுங் கயிற்றினாற்கட்டிய ஊஞ்சலில் மகளி ராடும்போது, கமுகிலிருந்து பழுத்த பாக்குக்காய் சிந்து வதும், வெள்ளிய பூவுதிர்வதும், தமது கழுத்தின் அழகினைக் கவர்ந்தமைக்காக, அம்மரங்கள் கழுத்துக்

றேி உதிரஞ்சிந்துவதாகவும், கண்ணீருகுப்பது போலவுந் தோன்றின.

(மீ. மி. 79) பவளத்திலிழைத்த அம்மனையானது மேற்சென்று மீள்வது, கயற்கண்ணியின் விரலின் செவ்வொளியைத் திருடவருவதும் போவதும் போன்றது, கலைமகள் நீருள்மூழ்கி யொளித்தகாலை தடாதகைப் பிராட்டியார் ஒரு அன்னத்தைப் பிடித்தமை, அம்மையின் சதங்கை யொலியையும் மடநடையையுந் திருடிய கள்வனைப் பிடித்தாற்போன்றது. (சி. மு. கோ 7) பலாமரத்தின்வேரிலே பழுத்த பலாக்கனிகள் நிலத்தைப் பிளந்து செல்வது, நிலமகள் தனக்குப் பதஞ்சலி முனிவரைக்கொடுத்த பாதலத்திற்குத் தன் நன்றியுணர்த்தப் பல பழங்களைக் கொடுப்பதுபோன்றிருந்தது. (காசிக் கலம்பகம் 37) இறைவன் முடிமீதுள்ள வெண்டலையானது பிரமனைப்பார்த்து நீ காணமுடியாத திருமுடியை நானே கண்டுகொண்டேனென்று தனது வெண்பல் தோன்றச் சிரித்தாற் போன்றிருந்தது, (61) இறைவனது வடிவத்தைப் பலர் பெறுதற்குரியர், கபாலம் ஒவ்வொருவருக்குக் கொடுக்கவேண்டும். முன்னிறந்த பிரமன் தலைகளும் விண்டுதலைகளும் செலவாய்விடின், நம்முடைய தலை பறிபடுமோவென்ற கவலையால் விண்டு அயஃந்து துயின்றனர்; அச்சத்தாற் பிரமன் துயின்றிலன், ஈதறிந்தும் அனுமார் பிரமபதத்தை விரும்பியது எதனால்?

(மீ. பி. 35) மகளிர் கைகளினல் ஆற்றும் விளையாடல்களைத் தொகுத்துரைக்கும் பகுதி வருமாறு:—பொழில்களிலே நறுந்தளிர்கள் கொய்தும், சேடியர் குழுவுடன் வண்டல் விளையாட்டயர்ந்தும், மயிற்குஞ்சும் அன்னக்குஞ்சும் புறக்குஞ்சும் பிறவும் வளர்த்தும், கிளிக்குச் சொற்பயிற்றிப் பால் உண்பித்தும், கமல முகங்களிலுள்ள கண்களைப்பொத்தி விளையாடியும், பொன்னிஞகிய கழற்காயெறிந்தும் பல்வகை விளையாடல் புரிந்த இயற்கைச் சிவப்புமிகுந்த தெய்வத்தளிர்க் கையாற் சப்பாணி கொட்டியருளினள் அம்மை யென்றூர்.

(மீ. பி. 1) வேறு சிலகற்பனை நயங்கள்:—இறைவனது திருக்கண்கள் பகவவனும் திங்களுமாகலின், அவற்ருல் மாறிமாறி நோக்குங்காலை, அம்மை திருநகில் வெம்மையும் தண்மையு மாறிமாறிப் பெற்றன. (மீ. பி. 8) திருமகள் திருமாலின் மார்பிலுள்ள அணிகளின் மணிகளாய பரற்கற்கள் தனது காலிலுறுத்தப் பெற்றுத் திருவடி வருந்தி அவற்றின் ஒளியாகிய வெயிலாற் றிருமேனியினைத்துப் பசுந்துழாய்மாலைக் காட்டினிழலிலொதுங்குகிருள். திருமாலாகிய தந்தை பால், தயிர், நெய் திருடி இடைக்குடியிற்கட்டுண்டு இன்னும் வருந்தாமல், நான்முகன் பால், தயிர், நெய், தேன் கடல்களைப்படைத்துத் தனக்கேற்ப அன்னம் படைத்தனர், என்றவிடத்து, மாலாகிய குழந்தைக்கு நீர்த்தாய உணவும், தனக்கு அன்னமாகிய கட்டியுணவும் படைத்தானென்ற பொருட்குறிப்பறிக.

இனிமையும் மென்மையுமுணர்த்தும் நயமிருந்த அன்பு ததும்பு மொழிகளால், அங்கயற்கண்ணம்மை பாற்றமக்குள்ள குழந்தையன்பினை அடிகள் அறிவுறுத்தும் புனைவுரைகள் வருமாறு :—(மீ. பி. 91) அணியின்கணுள்ள மணிகள் வெயில்வீசத் தனது மாகதத் திருமேனியாற் பசிய நிழல்தருங்குன்றமே, செவ்வாய் நின்று வெளிவருங் குழலோசையுடன் கூந்தலாகிய கருமுகில் தங்கும் இளங்கொம்பே, வெவ்விய பாசப் பிணிகெட மலையரசன் தந்தஅருமருந்தே, பரம்பரையாய் வரும் உலகங்களறிதற்கரிய மறையின் எல்லைப் பொருளே, செந்நிறமுடைய மலரிலே கயலாகிய கண் திரியப்பெற்ற பசுநிறக்கரும்பே, மதிமரபினிலுதித்த தோரிள மதியென வளர்கின்ற கன்றேயென்று திருமகளுங் கலைமகளும் தமது தலைமகளாகிய நின்னைப் போற்ற, நீ செங்கிரையாடியருள்க.

(மீ. பி. 46) பல்வகை மணிகளையு முத்துக்களையுந் தொகுத்தியம்பி அவை வேண்டிற்றிலம், நின்கனிவாய் முத்தமே வேண்டுமென்று குழந்தை வடிவினளாய அம்மையைக் கேட்கும் பல பாடல்கள் நயஞ்சிறந்தன. அவற்றின் பொருள் வருமாறு :—விண்ணவர் கோமான் பாலுள்ள சிந்தாமணியும் நிதிக்கிழவன் பாலுள்ள தெய்வ மணியும், திருமால் மார்பினிற் றிருமகள் வீட்டிற்கு விளக்குப் போற்றிகழும் கௌத்துபமணியும் எனக்குத் தராதே, நின்கனிவாய் முத்தமே தருக. குமரித்துறை முத்தும், கொற்கைத்துறை முத்தும், பொருநையாற்

றுத் தெள்ளியமுத்தும், பொதியமலைச்சாரலிலே அருவி சொரியுங் குளிர்ந்தமுத்தும், நீ விளையாடு மிடத்தே குவித்துவைப்பாய், எனக்கு நின்முத்தமே தருக.

பல பிறவிகளிலுந் தொடர்ந்துவரும் உழுவலன்பினை அடிகள் பல பாடல்களில் விதந்தனர். (மீ. பி. 64) அம்மையை வழிபடுவாரை 'உருகியுருகி நெக்கு நெக்குளுடைந்து கசிந்திட்டசும்பூறும் உழுவலன் பிற்பழவடியார்' என்றார். (காசிக்கலம்பகம் 30) தமக்கன்பின்மையை நினைந்து கவலுறுவார் 'உருகிலை நெக்குடைந்திலை மொண்டு ஆனந்தவனத்தேனை யோடியோடிப் பருகிலை கண்ணரும்பிலை மெய்பொடித்திலை மற்றுனக்கென்ன பாவந்தானே' என்றார். அறிவினாலே வழிபடுவார்க்கும், இடைவிடாது நினைப்பார்க்கும், விருப்பு வெறுப்பற்றவர்க்கும் இறைவன் வெளிப்படுவாராதலின், (மீ. பி. 43) 'உயிர் ஆலவாலத்துணர் வுநீர்பாய்ச்சி வளர்ப்பார்க் கொளிபூத்தருள் பழுத்தமலைக் கற்பகமே', (மு. கு. பி. 10) 'ஊதியமெனத்தனை யிருப்பினு நடப்பினு நினைப்பவரிருக்க வெமர்சித்தத்திருப்பானை', 'வெறுப்பொடு விருப்பினை யறுத்தவருளத்துமலர் பத்மப்பதத்தானை' என்றார். தொண்டர் பிழைபொறுக்கும் குமரவேளை (மு. கு. பி. 3) 'தாட்டுணைக்குருகு தொண்டர் பிழையற மறந்து பிறர்குணமிகழ்ந்த தகவில்லியை' என்ற நலமறிக.

அங்கயற் கண்ணம்மை திசைகொளுஞ் சென்றெய்திய பெருவெற்றியைச் சிறப்பிக்குமிடத்தே விரமும்

நகையும் விளங்கவைத்தார். எதிரிகளின் சேனைத்தலைவர்களையும் திசைத்தலைவர்களையும், முடிதுணித்துத் தேருங்கொடியுந் தாழப்பெருக்கிய குருதிவெள்ளமாகிய கடலிடைக்கூத்தாடுந் தலையிலாக் கவந்தப்பேய்கள், (மீ. பி. 29) கடற்சுழிகளிலே சுழலும் ஆனைத்திரளையும் குதிரைத்திரளையும் ஆனைமீனெனவும் குதிரைமீனெனவுங்கருதி மேலெடுத்து வீசி அம்மனை விளையாடின. கயற்கண்ணியைப் பார்த்து 'பெண்பிள்ளையாகிய நீயோ கயிலையைப்பிடிப்பாயென்று வீரம்பேசிய நந்தியொடு பூதகணங்களும் பின்னிட்டோடுங்காற்றாழ்மையுற்ற விடைக்கொடியும், இறைவனுலெரிக்கப்பட்ட மன்மதனது மீனக்கொடியும், அம்மையின் கயற்கொடிக்கீடாகா.

(மு. கு. பி. 36, 38) உதிரவெள்ளத்திலே, வீரர் தலையும் தேருருளும் பிறவுஞ்சுழல்வதற்கு, தாழியில் மத்தும், குயவன்றிகிரியும், பம்பரமும், சிலபாடல்களில் ஒப்பிடப்பட்டன.

(மு. கு. பி. 37) சூரன் சமரிலே இறந்தவீரர் விண்ணெய்தி விண்மாதருடன் மகிழுங்காலை, அவரும், கீழே நடக்கின்ற போரினைப்பார்த்துத் தம்மை யவுணரென்றறியாது, முருகவேளை நோக்கிச் சூரனைக்கிளையொடு தடிந்து வெல்கவென்று வேண்டினர்.

முருகப்பிரானது தோழாதுவீர விளையாட்டை மிகப் பெருமிதமாக உயர்வு நவிற்சியணியமைத்துப் பாடிய பாடல் வருமாறு :—

(மு. கு. பி. 13)

கைக்கெட்டு மெட்டுக் களிற்றைப் பிடித்து
களிற்றெடு முட்டவிட்டுக்
ககன வட்டத்தி னெடுபரிதி வட்டத்தை
வளைதிகிரி வட்டத்திலிட்டு
முக்கட்டிருத்தாதை கோதண்டமெனவைத்த
வேதண்ட மாதண்டமா
மூதண்ட கூடந்திரி கூடத்தொடுஞ் சாடி
மூரிக் கடாசலமவன்
மெய்க்கிட்ட சட்டைக்கு நேரிட்டிடப்பட்ட
மேகபடலத்து மொண்டு
மேல்கட லினைப்பெருங்கீழ் கடல்புகப்பெய்து
விளையாட்டு வீரர்களொடுந்
திக்கெட்டும் விளையாடு சேனாபதிக்கடவுள்
செங்கீரை யாடியருளே
செத்துப்பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை யாடியருளே.

இறைவன் திருநடமியற்றுங்காலே, அவன் திருமேனி மிசையுள்ள பரம்புகள், அவன் ஆடுங்காற் படுங் காற்றின் வேகத்திற் காற்றாது தமது மணிகளைக் கக்கி வீச, அவை எட்டுத்திசையிலுமுள்ள யானைகளின் முதுகிற்பட, அந்த மணியெறி பொறுக்கமாட்டாது, அவைகள் பிளிறினவெனக் காசிக்கலம்பக விறுதிச் செய்யுளிற் கூறியதுகாண்க.

இனி, அகப்பொருட்டுறைகள் பல அடிகள் திருப் பாடல்களிலே வந்துள்ளன. அவை பலவற்றினுஞ்

சிறந்த பகுதி, இறைவன் திருவருள்பெற விரும்பிக் காதலுற்றவரின் பிரிவாற்ருமையுந்துயரமு முணர்த்துந் துறைகளே. அத்துறைகளுள் 'மதியினைப் பழித்தல்' என்னுந் துறை மிகவும் நயமானது, பல பாடல்களிலே அத்துறையமைந்துள்ளது. (காசிக் கலம்பகம் 27) காசிப்பெருமானது நெற்றிவிழியும் இடது விழியும் வெண்ணெருப்பே, நெற்றிவிழி காமனைக்காய்ந்தது. காமன் படைகள் நாமென்று கருதி, நெற்றிவிழிக்கு இனமான இடதுவிழி நம்மைக் காய்கின்றதுபோலும், என்று ஒரு நங்கை செப்பினள்.

(காசிக்கலம்பகம் 76) 'இராவாகிய கரிய எருமை மீதேறி மதியாகிய கொடுங்கூற்றம், எனது உயிரைப் பருகுவதற்கு நிலாக்கதிராகிய பாசத்தை வீசி வளைந்து கொண்டது. யான் இங்கு என் செய்வேன்? மணங் கமழ்கின்ற கூந்தலினையுடைய பொற் கொம்புபோன்ற வர்களே, அவிமுத்தமாகிய காசியையும் பத்தருள்ளத் தையுங் கோயிலாக்கொண்ட பெருமானுக்கு எனக்கு நேர்ந்த இடுக்கண் ஈதென்று சொல்லுங்கள்' என்றது காண்க. தலைவியின் தோழி திங்களைப்பழித்தலுமுண்டு. பிறையை நோக்கித் தோழி கூறுவது :—(மகள் 88) 'குறுமுயலும் பலகலையுமிழந்து மான்போன்ற நங்கை யின் உயிரைக் கொள்ளைகொள்ளப் புறப்பட்ட யமனே! அவளது தூக்கக்குறைவையும், பெருமூச்சையுங்கண் டும் இரக்கமில்லாதிருக்கின்ருயே, உடலும் பல கூருக் கப்பெற்ருய், நீ நினக்கியல்பான கருநிறத்தை, முதிர்ந்த

நரையினுலிழுந்தாய்போலும், வயோதிகனுன் நின்னே, இறைவன் முடியிலிருக்கும் இளந்திங்கள் என்கின்றூர் களே!

(காசிக்கலம்பகம் 64) பிரிவுற்ற மடந்தையர்க்குப் பிரிர்தாரது தார் மன அமைதியைக்கொடுக்கும், இறைவன் பாற்கொன்றையந்தாரினைத் தலைவி விரும்புதல் மரபு. அக்கருத்தைக் குறிப்பிப்பார், கூறுவது :— இறைவன் தமது திருமுடியிற் கங்கையானையும் பிறையையுமொன்றாக இருத்திப் பிறையால்வரும் நலனழிவை நீக்குதற்குக் கொன்றையும் ஆண்டுவைத்தனர்.

(மதுரைக் கலம்பகம் 14) சண்டேசர் பெருந்தவத்தால் இறைவர்தார் பெற்றூர், எனக்கு அவர் மலர்மாலையைத் தரமாட்டீர்களோ·என்று தோழியரைத் தலைவி வினவுவதாகவும், தார் பெருமையாற் பெரிதும் வருந்துவதாகவும் கூறுந் திருப்பாட்டு :—

“அம் மகோவெனும் விழும்அழும் எழுந்துநின்று
அருவிநீர் விழிசோரும்
விம்மும் ஏங்கும் மெய்வியர்த்து வெய்துயிர்க்கும்
என்மெல்லியல் வேட்டுஅம்மா
வம்மின் மாதரீர் மதுரையுங் குமரியு
மணந்தவர் மலர்த்தாமம்
தம் மினேவெனும் தவப்பயன் பெரிதெனுந்
தந்தைதா ளெறிந்தார்க்கே”

இதன்கண் துயரத்தின் மெய்ப்பாடு செவ்விதின் விளக்கப்பட்டமை காண்க. (மதுரைக் கலம்பகம் 51) இறைவன் கங்கைக்குச் சடையும் உமையம்மைக்கு இடப்பாகமுங் கொடுத்து, தனது மகளுக்குப் பொற் புயம் வழங்காமை ஓரமாகுமென்று செவிலி கூறுவதாக அமைத்த பாட்டில், "பொதுவில் நின்றாய்க்கு நடு வின்மை யிடையே புகுந்தவா றென்கொலோ புகலாய்" என்றது காண்க. இறைவன் பிரம்படிபட்ட கதையை வைத்து ஒரு புதுநலம் அமைத்த செய்யுள் கருதத் தக்கது. அது தலைவிகூற்றாய்த் திகழ்கின்றது. அதன் கருத்தாவது, 'இறைவன் பட்ட பிரம்படி, நம்மேலும் பட்டது. நம்மேல் அடிவிழுந்ததற்குக் காரணம், முதல் வன் பிரம்படி பெற்றது: நாம் இப்போது காமநோயாற் றுன்புறுதலால் இறைவனது திருவுள்ளத்தும் இந் நோயுண்டோ' என்பதே.

இறைவன் மதுரையில் வளையல் விற்கப்போய்ப் பல மகளிர் மனத்தினைக்கவர்ந்து அவர்கள் வளைகழலும் படி செய்து, அவ்வளையல்களைக் கொண்டமையால், அவரை நோக்கி, நீர் வளையல் விற்கப்புறப்பட்டீரா, கொள்ளப்புறப்பட்டீரா என்று வினவிய செய்யுள், நகைச்சுவைத்தும்பியுள்ளது.

(மதுரைக் கலம்பகம் 7)

வலங்கொண்ட மழுவுடையீர் வளைகொண்டு விற்பீர்
போல் மதுரைமூதூர்க்
குலங்கொண்ட மெய்வளையார் கைவளையெல்லாங்
கொள்ளை கொள்கின்றீராற்
பலங்கொண்ட செட்டிமக்கும் பலித்தது நன்றாய்
நீரிப்பாவை மார்க்குப்
பொலங்கொண் டவரிவளைகள் விற்பதற்கோ
கொள்வதற்கோ புறப்பட்டீரே.

தலைவன் புன்னகையொன்றே தலைவியை வருத்துவதற்குப்போதும், நோக்கங்கூடவேண்டியதில்லை யென்பார் 'நகையே யமையும் இந்த நாகரிகநோக்கு மிகையே' என்றார். சிவபெருமான் பாண்டியமன்னனாய்த் திகழ்ந்த காலை வேப்பந்தார் சூடினனாதலின், தலைவி அதனை விரும்புவாளாயினள், மன்மதனது கரும்புவில் தன்னைத் துயருறுத்துவதால் அதனை வேம்பென்றும், சோமசுந்தரக்கடவுளது வேப்பந்தார் தனக்கு இன்பந்தருதலால், அதனைக் கரும்பென்றுந் தலைவிகருதினள்.

(மதுரைக்கலம்பகம் 50)

'தேன்அறாத சிலைக்கரும்பு கொலைக்கு அரும்பு ஒரு
வேம்பெனும்
தேம்புயத்தணி வேம்பினைக்கனி தீங்கரும்பெனும்'

(53) கிளியைச் சொக்கர்பாற் றூதனுப்புந் தலைவி, அதனைப்பார்த்து, நீ பலகாலும் அவர் பெயரைச்சொல்

னுதல் வழக்கம். நீ அழைத்த சொல்லிற்குப்பயன், உன் சொல்லைக்கேட்டு அவர் என்பால் வருதல்; அவர் அப்படிச்செய்வாரா என்று தெரிந்துவா வென்றதாகக் கூறுவார்,

"சந்ததநீ
பழகியசொற்குப் பயன்தேர்ந்துவா இங்கு என்னைப்
கிளியே"

என்றார். தலைவி இறைவனைப் பவனியிற்கண்டபின், காதல் மிகுந்து உண்ணாதும் உறங்காதும் ஆடாதும் பாடாதும் இருக்கின்றாளென்பார்,

'பெருமான் முன்சென்றாள் சிறுமான் என்சொல்கேன்
பாடாள் அம்மனையும் நாடாள் எம்மனையும்,
பயிலாள் தண்டலையும், முயலாள் வண்டலையும்
சூடாள் மஞ்சனமும், தேடாள் அஞ்சனமும்
அயிலாள் அன்னமுமே துயிலாள் இன்னமுமே'

என்றார்.

அன்பர் இறைவனைப்பெறாது வருந்துங்கால், 'ஆவியின்றிய உடல்போலானார் என்பார்', சிலர் ஆவி யின்றியுடலே கமந்து திரிவார்கள்? என்றார். இங்ஙனம் வரும் நயங்கள் பல.

சொன்னயம்.

அடிகள் பாடல்களிலே பலவகையான சொல் நயங்கள் ததும்பியுள்ளன. அவற்றை யொருகிறிது ஆய்வாம். ஒரு சொற்றொடர் பிரிவுற்றுப் பலபொருள்படுமாறு அமைக்கும்அணி, 'மடக்கு' என்பது. கலம்பகங்களிலே

இவ்வணிமிருநயமாக வந்துளது. (காசிக்கலம்பகம் 28) 'விழைகுவது அன்பர் அகஞ்சுகமே வெங்கரியின் னுரி கஞ்சுகமே' என்றவிடத்து, 'அகம்சுகமே',' கஞ்சுகமே' என்பவை. 'அன்பர் அகம் சுகம் விழைகுவது' 'வெய்யயானையின்றோல், போர்வை' என்று பொருள் படுதல்காண்க. 'தொழில் அடிகட்குளமாலயமே, தூமுனிவோருளமாலயமே' என்றவிடத்து 'மாலயம்' என்பது முறையே அனைத்தினொடுக்கம் எனவும், முதல் வருஞ்சொல்லோடு சேர்ந்து 'உளம் ஆலயம்' எனப்பிரி வுற்று, 'கோயில்' என்ற பொருள்படுதல் காண்க. 'என் பணியே' என்பது எலும்பு அணியே யெனவும் 'எனது பணிவிடையே' யெனவும் இருவேறு பொருளு டைமை காண்க. 'அவள் அம்பதியே, வளம்பதியே, என்பன முறையே அவனது அழகியபதியே', வளமான ஊரே, என்னும் பொருளுடையன. மதுரைக்கலம்பகம் 55-வது பாட்டிலே இளவேனிற் காலவர்ணனை மிக அழகாக இயம்பப்பட்டுள்ளது.

"குறுமுகை வெண்டளவின் மணந்துவக்குங்காலம்
 கொழுநரொடு மிளமகளிர் மணந்துவக்குங்கால்ம்
மறுகுதொறு நின்றெமர்களுருத் திகழுங்காலம்
 வரிசிலை கொண்டுருவிலியு முருத்திகழுங்காலம்
சிறுமதி நம்பெருமதி யினுகப்படருங்காலம்
 தென்றலிளங்கன்று முயிருகப்படருங்காலம்
நிறையினொடு நாணினொடு மகன்றிரியுங்காலம்
 நேசர் மதுரேசர் வரையகன்றிரியுங்காலம்"

இதன் முதலடியில் 'மணந்தலக்கும்' என்பது, 'வாகனைதொடங்கும்', 'கலியாணஞ்செய்து மகிழும் என இருபொருளுடைத்து. 'உருத்திகழும்' என்பது, உருவிளங்கும், 'கோபித்து இகழும்' என்று பொருள் படும். 'உகப்படரும்' என்பது உவப்பினையழிக்கும், (உகப்புஅடரும்) சிந்தும்படி பரவும் (=உக+படரும்) என்று பொருள்படும். 'அகன்றிரியும்' என்பது அக மாகிய உள்ளந்திரியும்', (அகன்று இரியும்) நீங்கிபோடும் என்று இருபொருளுடைத்து. சிற்றம்பலம், பேரம் பலம் என்பவற்றை நயமுற அமைத்த செய்யுள் வரு மாறு:—

(சி. மு. கோ. 9)

'பற்றம்பல மிதித்துத்துதித்தே செவ்வி பார்த்துப் புல்லர்
வெற்றம்பலந் தொறுமெய் யிளைத்தேறுவர் வீணர் கெட்டேன்
குற்றம்பல பொறுத்தென்னையு மாண்டுகொண்டேன் புலியூர்ச்
சிற்றம் பலங்கண்டு பேரம்பலத்தைச் செய்யாதவரே'

இதன் கருத்தாவது பல்வினூற்சுவைத்து வெற் றிலைச்சாற்றுமிழ்நீரை மிதித்து நெருங்கிப் புல்லறிவா ளரைத்துதித்து அவர்கள் காலம்பார்த்துப் பேசுவன பேசி வெறும் அம்பலமாகிய வீணர் சபைதொறுஞ் சென்று உடலிளைப்பார் யாரெனில், பல குற்றங்களையும் பொறுத்து என்னையாண்டுகொண்ட வனது புலியூர்ச்

சிற்றம்பலந்தொழுது பெரிய அழகிய பலனாகிய முத்தியைத் தேடிக்கொள்ளாதவர்தாம். (எ. று,)

இலக்கண நயஞ்சிறந்த செய்யுட்கள்பல, சிதம்பரச் செய்யுட் கோவையிலுள்ளன. இலக்கணக் கருத்தைத் தழுவிய கற்பனைக்கு ஓர் உதாரணம் வருமாறு:—

'நிற்புகழ்ந் திறைஞ்சுங் கற்பின் மாக்கள்
விருப்பு வெறுப்பற் றிருப்பரென்ப
இகபர மிரண்டினும் எதிர்நிறை கோளினும்
தொகுதியுள் வேற்றுமைத் தொகைப்பொருள் கோளினும்
முன்னவர் மொழிந்தகற் கன்னிய மாகலின்
விருப்பு வெறுப்புளவாய
கருத்தின ராகவுங் கண்டனம்யாமே'

என்றவிடத்து, 'எதிர்நிறை கோளினும்' என்பது இகத்திலே வெறுப்பும், பரத்திலே விருப்பும், உடைமையைக் குறிக்கும். தொகுதியுள், வேற்றுமைத்தொகைப் பொருளென்றது, விருப்பு வெறுப்பு என்னுஞ் சொற்றொடர், விருப்பில் வெறுப்பு என்பதன் தொகையாமெனக் குறித்தவாறும் 'வெறுப்பில் விருப்பு' என்றுங் கொள்ளலாம். இதனால் அடியார்க்கும் விரும்பத்தக்கனவும் வெறுக்கத்தக்கனவுமுளவென்றார். (பண்டார மும்மணி 23) சிவத்தன்மையிலிருந்து சிவத்தன்மையானதைக் கூறுவார், சிவனென்றசொல் ஒரு மாத்திரை குறுகப்பெற்றேனென்றார்.

முற்காலத்து வழக்கங்களிற்சில, கலம்பகங்களினுற் புலனாகின்றது. மதங்கியென்னும் பெண்பிள்ளை இருகைகளினும் வாள்வைத்து வீசிக்கொண்டு சுற்றி விளையாடுவதிற் சிறந்தவள். அத்தகை மாதினைப்பார்த்துக் காமுகனொருவன் கூறும் பாட்டொன்று, கலம்பகங்களிற் காணப்படும். மதங்கி யொருத்தியைப்பார்த்து 'உமது இருகண்களாகிய வாளிரண்டும் போதாமல், கைகளிலும் இருவாளெடுத்து வீசுகின்றீரே யென்றதாகக் காசிக்கலம்பகத்துட் கூறப்பட்டது. மதுரைக் கலம்பகத்துட் கூறிய பாட்டின் கருத்து :—கண்களாகிய வேலிரண்டொடு கைவாளிரண்டும் வீசி விளையாடு மின்கொடியீரே. உமது சிற்றிடை இற்றுப்போமென்று உமது சிலம்பு முறையிடவும், அதனைக் கருதாது என்னெஞ்சு சுழல்வதையுங் கவனியாது அதிவேகமாக ஆடுகின்றீரே, என்பதே. பிச்சியார் என்னும் பெண்டிர், சிவவேடந்தாங்கிப் பிச்சைக்குச் செல்வதுபோல், கொற்றியார் என்போர் திருமாலின் சின்னங்களையணிந்து ஐயமெடுப்போர், இவர்களைப்பற்றியும், இடைச்சியர், வலைச்சியர் முதலியோரைப்பற்றியும் வருரும் பாடல்கள் கைக்கிளை நயமுடையன.

(ம. க. 66)

'கழிக்கயல் விற்பீர்மற்றிக் காசினியேழுமுங்கள்
விழிக்கயலுக் கேமுற்றும் விலையென்ப விளக்கிட்டீரே'

என்றது ஒருகாட்டு.

பிரிந்த தலைமகன் விரைவின் வருவானோவென்று துணிதற்குத் தலைவி மணலில் ஒருவட்டக்கோடு வளைத்து அது ஒழுங்காகப் பொருந்திவிட்டால், தலைவன் வருவானென்று துணிதலும், அது பொருந்தாக்கால், விரைவில் வாரானென்று கருதுதலும், ஒரு வழக்கம். இரட்டைச்சுழிகள் வருமாயின், அவன் வருவானென்றும், ஒற்றைவரின் வாரானென்றுங் கருதுதலுமுண்டென்ப.

(ம. ப. 21)

'தழைத்திடுங் கூடலார் குழைத்துடன் கூடலார்
பிழைத்திடுங் கூடலே யிழைத்திடுங் கூடலே'

சிறப்பு மிகுந்த கூடற்பிரான் 'என்னை உருகும்படி செய்து கூடமாட்டார். ஏனெனில், நான் மணலிலே சுழிக்கின்ற சுழிகள் கூடாது தவறிவிடுகின்றன. (எ. று.)

காசியிற் குற்றஞ்செய்தோரை வயிரவக்கடவுள் தண்டிப்பாரென்பது ஒரு கொள்கை. தலைவி பிரிவாற்றாமையால் இறந்துபடின் பெண்கொலைப்பாவம், தலைவனாய கடவுளைச் சேருமாதலால், அக்கருத்தினை உட்கொண்டு,

(காசிக்கலம்பகம் 55)

'ஆமோ அவிமுத்தத் தையரே பெண்பழிவீண்
போமோ வயிரவர்தஞ் சாதனமும் பொய்யாமோ'

என்றார். முற்காலத்திலே பெண்டிர் காதிலே வட்டமான ஓலையையணிந்து, பின்னர், அதனைப் பொன்னு

னும், செம்மணியாலும், வயிரத்தாலும் ஆக்கிக்கொண்டனர். காதோலையைக் கைம்பெண்டிர் அணிவதில்லையென்பது, இறைவன் நஞ்சுண்டமையால், விண்மாதர்க்குக் காதோலை நல்கினனென்றமையாற்றெளிக. (மதுரைகலம்பகம் 28) 'நாந்தேவரென்பார் தம்பாவையர்க்கன்று காதோலை பாலித்ததயவாளர்' என்றது காண்க. பாணனைத்தக்க புரவலர்பாற் செல்லும்படி பரிசுபெற்றவனொருவன் வழிப்படுத்தும் வழக்கம், பண்டை நூல்களுட்காணப்படும். பண்டைத் தமிழர் வழக்கத்தையும் சொற்றொடர்களையும் இனிது தழுவி, அடிகள் ஒரு அழகுமிக்க செய்யுளியற்றியுள்ளார், அதன் பொருள் வருமாறு :—(காசிக்கலம்பகம் 57) இழுமென்னு மழலைச் சொற்போன்ற இனிய அமுது செவிகளிற்படியும் வண்ணம், தேனொழுக்குப்போன்ற செவ்விய நரம்புகளிலே நகத்தின்நுனியாலே இசை நான்முறைப்படி தடவித்தெளிந்த இசையினை எடுத்திசைக்குஞ்சிறிய யாழினையுடையபாணனே, நீ வாழ்வாயாக. நான் சொல்லுஞ் செய்தியைக்கேள், யானும், எழிசை பயின்ற பாணனொருவனே, அரசன் மகன் அல்லேன், நீ பலவற்றையும் புகழ்தலைத்தவிர்க. சில நாள் யானும் உன்னைப்போலுள்ள நிலைமையனுய் நல்வாழ்வறியாது வறுமைப்பிணி வருத்தப்பெற்றேன், கறையானுஞ் சிலந்தியும் மேயப்பெற்ற சிறிய தாழ்ந்த குடிசையிலே, பல்வகைக் கொதுகும், குடவுண்ணிப்பூச்சியும், பகையற்ற உடலின்றசையைத்தின்ன, தாங்கமுடியாத பசியால் வாடி,

பெரு நோயினால்வருந்தி, உணவு சமைப்பதின்மையால், காளான்பூத்து, எலி தூங்கும் அடுப்பிலே தலைவைத்துத் தூங்கி, சிறு குழந்தைகள் அழுவதைக்கேட்டு, என் மனைவி தனது குடங்கையைக் கன்னத்தில் வைத்துக் கொண்டு கழிபெருங்கவலையுடன் அழுகின்ற குரல் எனது செவியைச்சுடவும், ஆதரவுகாணாது சுழலுகின்ற காலத்திலே தெய்வத்தினருளால், நல்வினைப்பயன் பிடர் பிடித்துந்தக் கங்கைக்கரைவழிசென்று காசிமா நகரத்தின்கண்ணே பெருவளமோங்க அரசுவீற்றிருக்கும், மழுவினை வலக்கரத்திற்றரித்த செம்மேனி யெம்மானைக்காண நேர்ந்து அவன் பொன்னடி வணங்கி இன்னிசை பாடினேன். பாடியதும் விண்ணின்றிழிந்த காம தேனுவுங் கற்பகமரமும் பெருவளஞ்சுரப்ப இகபரத்திற்குரிய இருமைப்பயனும் பெற்றேன். ஆதலால், நீயும் அத்திருநகரத்தின் வளம்பாடி, இவ்வுலகத்திலே, நிதிக்கிழவன் பொறாமை கொள்ளும்படியான செல்வத்தோடும் விளங்கிப் பெருமகிழ்வடைக; இதனுள் 'ஆடு நனிமறந்த கோடுயரடுப்பின்' என்ற புறநானூற்றுச்செய்யுட் கருத்துஞ் சொல்லும்போந்தமை காண்க. அடிகள் திருப்பாடல்களிலே திருக்குறட் சொற்பொருளும் தொல்காப்பியச் சொற்பொருளும் அமைந்திருப்பது வெளிப்படை; மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ஒன்பதாம் பாட்டிலே, 'அன்பினைந்திணை யெனவெடுத்த விறை நூல்' என்றது இறையனாரகப்பொருளை. சிதம்பர மும்மணிக்கோவை 24ம் பாட்டிலே, மணிவாசகப்பெருமான், பரிமேல் இறைவனை வரவழைத்ததும், பாண்டி

யனே இறைவன் ஆட்கொண்டதும், திருச்சிற்றம்பலக் கோவைக்குப் பொருள் அம்பலவனெனக்காட்டியதுங் காண்க திருத்தொண்டத் தொகைக்கு 'சித்து' என்ற கலம்பகப்பகுதியிலே இருபொருட் சொற்றொடர்கள் நகைச்சுவை பயப்பனவாயமைந்துள்ளன. (மதுரைக் கலம்பகம் 57) 'கையிற் செங்கல்—பசும் பொன்னதாக் கினேம்' என்றவிடத்து, 'செங்கல்' என்பது 'செம்மண் கல்லெனவும்' 'செம்பொன்கல்' எனவும் பொருள்படும், இரண்டாவது பொருள் கொள்ளப்படின், சித்தென்பதி யாதுமில்லையென்ற கருத்துப்புலனாதல் காண்க. 'அகிலே சர்க்கிருப்பை ஆடகமாகக் கொடுத்தோம்' என்ற விடத்து, இரும்பைப் பொன்னாக்கினேமென்றும், இருக்குமிடத்தைப் பொன்னம்பலமாக்கினேமென்றும், என்ற இருபொருளும் புலனாம். 'இமையோர்க் கிருப்புக் கற்கனகமாக்கி' என்றவிடத்து, 'இரும்பையுங் கல்லை யும் பொன்னாக்கி' என்றும், இருக்குமிடமாகிய மலை யைப் பொன்மலையாயமேருவாக்கி' என்றும் இரு பொருள் கொள்ளப்படும். 'அண்டவோட்டைப் 'பொன்னாக்குவோம்' என்றவிடத்து, 'பொன்னாக் குவோ' மென்பது 'அழகாக்குவோம்' என்ற பொருளு முடையதறிக.

(மதுரைக் கலம்பகம் 81) 'சம்பிரதம்' என்னும் பகுதியுமித்தகையதே. 'புவிமுழுதையும் ஓர் இமைப் பினில் மறைத்துடனே வெளிப்படுத்துவன் என்பதற் குப் பொருள் யாதெனில், கண்ணை மூடினால் உலகங்

தோன்ருது, திறந்தால் உலகந்தோன்றும் என்பதே. 'எட்டுவரையும் கடலையும் ஒரு கைப்பிடிக்குள் அடக்கி விடுவன்' என்றவிடத்து முதற்பகுதி எட்டுமலையையும் கடலையும் எனவும், 'எள், துவரை, கடலைஎன்னு மூன் றையும்' எனவும் பொருள்படும்.

இறைவன் மகத்துவமனைத்தும் ஒரு செப்பினுள் அடக்கிவிடுவேனென்றது, ஒரு மந்திரமாகிய பிரணவத் தினுளடக்கிவிடுவேனென்றவாரும் (மதுரைக்கலம்பகம் 82) 'பதஞ்சலியாரஞ்சலியா நிற்ப—எடுத்த பதஞ்சலியா ரேனும்' என்றவிடத்து, பதஞ்சலி முனிவர்கண்டு கும் பிடும் வண்ணம் எடுத்த பாதமானது சலிக்கப்பெருதவ ரென்ற பொருள் புலனும். அடிகள் தமது ஞானசாரிய னது திருவடிகளை வணங்கியும் புகழ்பேசியும் நினைந்தும் தமது மனமொழி மெய்கள் சிவகரணமாய்த் திரியம் பெற்றமையால், (பண்டார மும்மணி 22) 'திரிகரணம்' என்ற சொற்றொடர் 'மூன்று கரணங்களெனவும்' திரி வுற்ற கரணங்களெனவும் இருபொருளுடையதாயிற் றென்பார், திரிகரணங்களென்றுரை செயுமப்பெயர்

ஒருபொருட் கிளவியெல் லோர்க்கும்
இருபொருட் கிளவியாயிருந் ததின்றெனக்கே

என்ருர். 'சங்கம்' என்ற சொல் 'தமிழ்ச்சங்கத்தினையும், சங்கினையுங்குறித்தலால், (மதுரைக் கலம்பகம் 87)

'முத்தகம்பயின்று காவியங்கற்றும்
சித்திரப்பாட்டியறேர்ந்தன' என்றவிடத்து,

'குளத்துச்சங்காவது, முத்தினைத்தன்னகத்தே யுடைய தாய்க் காவுகளிலே இயங்குதலில்லாது தாமரையைச்

சூழ்ந்த வண்டின் இசைப்பாட்டினைத் தாமு மொலித்தன என்றும், தமிழ்ச்சங்கங்கள், தனியே முடியுஞ் செய்யுட்களியற்றிப் பழகித் தொடர்நிலைச் செய்யுட்கள் கற்று, அழகிய பாட்டின்றன்மையையாய்ந்தன என்றும் இருபொருள் ஒலித்தல் காண்க.

இறைவன் ஆணும் பெண்ணுங்கூடிய ஒரு திருவுருவத்தைப் பொதுப்பட எச்சொல்லால் வழுத்தலாமெனின் (செய்யுட்கோவை 73) 'எந்தாய்' என்பதாலென்றார். அது 'எம்தாய்' எனவும் 'எந்தையே' எனவும் பொருள்படுதலின், (காசிக்கலம்பகம் 19) 'சொல்லாவது மறையே' என்றவிடத்து, 'சொல்லானது வேதமே' யென்றும் 'சொல்லாதது எதுவோ அது இரகசியமே' என்றும் இருபொருள் ஒலிக்கும்.

பெயர்கட்குப் பொருட் பொருத்தங் கூறுவதில் அடிகள் மிக வல்லவர். 'பிச்சி யார்' என்பவர் ஐயமேற்றுண்ணுஞ் சிவவேடம் பூண்டபெண்டிர். இறைவன் பிச்சனாதலின், அவனோடொத்த வடிவினர் 'பிச்சி யாரென்றார். பிச்சன் ஆண்பால், 'பிச்சி' பெண்பால். சிவபெருமானே தமது ஞானசாரியாராகிய மாசிலாமணி தேசிகராக வந்ததாகக்கருதியவடிகள், இறைவன் தனக்குரிய நீலகண்டமாய களங்கமில்லாமல் வந்தமையால், 'மாசிலாமணி' என்ற திருப்பெயர் அவர்க்கமைந்ததென் பார், 'காசுலாமலினங் கரந்தகாரணத்தால்
மாசிலாமணியென வண்பெயர்நிறீஇ' என்றார்.
'அயனுமாலும்' என்பதற்கு (காசிக்கலம்பகம் 47) 'எண் கண்ணனும் கண்ணனும்' என்ற அமைப்பு அயனை

மாலினும் பெரியனுகக்காட்டும். சிவகாமியம்மையாகிய கொடி பூத்த பூ, இவ்வுலகமாதலின், அது பூவெனப் பட்டது. (சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை 4ம் பாட்டினைப்பார்க்க) (மூ. கு. பி. 58) 'வேளூர்' என்ற பெயர் காமன் பதியெனவும் கந்தவேள் பதியெனவும் பொருள்படுமென்ருர்.

திருமால் சிவனுக்கு தொண்டரென்பதை, அவர் விடையானமை விளக்குதலால் (திருவாரூர் நான்மணி 21) 'விடையே விடையாக' என்ருர். சேவல், காலிற் கூரிய நகத்தை ஆயுதமாக உடைமையால், அதனைக் காலாயுதமென்ருர். பொழுதுபுலர் காலத்தையுணர்த்து தலால், சேவல், காலவாயுதமாமெனவும், காலவாயுத மென்பது காலாயுதமென மருவிற்றென்பாருமுளர். (மூ. கு. பி. 2) மலைக்குத் தலைவன் குறவனுதலின், சிவ பெருமானையு முருகப்பெருமானையும் குறவராகக் குறத்திபாடுவது, மீனுட்சியம்மை குறத்துள் அழகாக அமைந்துள்ளது.

(மீ. குறள்)

'வெள்ளிமலைக் குறவன்மகள் பழனிமலைக் குறவனெங்
கள் வீட்டிற்கொண்ட
வள்ளிதனக் கேகுறவர் மலையாட்சி சீதனமாய் வழங்கி
ஞரால்
பிள்ளைதனக் கெண்ணெயிலை யரைக்குமொரு துணியிலை
யென் பிறகேவந்த
கள்ளிதனைக் கொண்டவன்றே குறவனுக்குமெனக்கு
மிலைகஞ்சிதானே'

சும்மாவிருந்தால், கடவுளாகிய மணி கிடைக்கும். இவ்வாறு முயற்சி செய்யாது பெறக்கூடிய மணி உலகத்தில் யாதுளது' என்றவிடத்துத் தாயுமானுர் சொல் அங்கருத்தும் போந்தமை காண்க.

(பண்டார மும்மணி 8)

"எம்மா ருயிராமெழின் மாசிலாமணியை
அம்மா பெறுதற் கரிதென்றே—சும்மா
இருந்தாரே பெற்ருர் மற்றெவ்வுலகில்யாரே
வருந்தாது பெற்ருர் மணி"

பிறப்பிறப்பினை அடிகள் 'நடனம்' என்ற சொல்லாற் குறித்தார். 'நடனம்' என்பது போக்குவரவினை யுணர்த்தும்,

(மதுரைக்கலம்பகம் 68)

'வாலவிர்த்த குமாரனெனச் சில வடிவுகொண்டு
நின்ருயென்று வம்பிலே
ஞாலம்நின்னை வியக்குநயக்கும் என்
நடனம் கண்டும் வியவாமை யென்சொல்கேன்'

என்றது காண்க.

கூத்தப்பெருமான் அடியெடுத்துக் கொடுத்ததும், பிறவும் எடுத்தியம்பப்பெற்றன. மணிவாசகப் பெருமானை அடிகள் (பண்டாரமும்மணி 16) 'சொற்றமிழ் விரகன்' என்றது புதுமுறை, அச்சொற்றொடர் திருஞானசம்பந்தரையே பெரிதுங்குறிப்பது, சிதம்பரச் செய்யுட்கோவையிலே (34ம் பாட்டு) மூவர் தமிழ்

முறைகள் தில்லையிலிருந்தமை குறிப்பார், 'பாசிருக்குந் தமிழ் மூவர் பாட்டிருக்குந் திருமன்றிற் பாசொன் றேந்தி—அரசிருக்கும் பெருமானுர்' என்றனர்.

மதுரையைக்குறித்து ஔவை செப்பிய செய்யுளடியை மீனாட்சியம்மை குறத்துள் அடிகள் எடுத்தாண்டனர். (மீ. குறம் 33) 'அன்பாண்டு கல்வலிதென் றவ்வை பாடிய எங்கள்—தென்பாண்டி நாட்டான்' என்றமை,

வஞ்சிவெளிய குருகெல்லாம் பஞ்சவன்றன்
நான்மாடக் கூடலிற் கல்வலிது
சோழன் உறந்தைக்கரும்பினிது தொண்டைமான்
கச்சியிற் காக்கைகரிது' என்ற ஔவை வாக்கை

நினைவூட்டுகின்றது. காசியிலே மணிகர்ணிகை யென்ற துறை பிறவற்றினுஞ் சிறந்ததாகலின், (காசிக்கலம்பகம் 16) 'பூணுமாசை மற்றொன்றே யுடல்விடும்போது நன் மணிகர்ணிகைப்பூந்துறை—பேணுமாறு பெறவேண்டும்' என்றூர். கேதாரத் துறையே அடிகள் திருமடத்தைச் சார்ந்துள்ளது. பாண்டிநாட்டுப்பதிகள் பதினுன்கையும் அடிகள் ஒரு திருப்பாட்டின் பகுதியிலமைத்தனர்.

(மீ. குறம் 21)

'கூடல் புனவாயில் கொடுங்குன்று பரங்குன்று
குற்றாலம் ஆப்பனூர் பூவணம் நெல்வேலி
ஏடகம் ஆடானை திருக்கானப்பேர் சுழியல்
இராமேசந் திருப்புத் தூரிவை முதலாந்தலங்கள்'

திருநெல்வேலியில் இறைவன் மூங்கிலடியிலே முளைத்த சிவமுதலாகத்தோன்றினமையால், 'வேயீன்ற முத்தர்' என்ற திருப்பெயருடையர், அக்கருத்தை (மீ. பி. 46) 'வேயீன்ற முத்தமுகந்த நின்கனிவாய்' என்றவிடத்தே குறித்தார், பன்றிக்குட்டிக்குப் பால்கொடுத்த திருவிளையாடல் மதுரைக்கலம்பகத்துட் கூறப்பட்டது.

(ம. க. 34) உலக வழக்கிலுள்ள பழமொழிகளும், சகுனங்களும் பல அடிகள் பாடல்களில் வந்துள்ளன. 'பேயொடாடினுமாடிப் பெறுதுமே' என்றது, அத்தகைத்து. (காசி. க. 15) 'ஆற்றிலிட்டுக் குளத்திலெடுப்பதுபோல் என்ற கருத்தைப் பின்வருஞ் செய்யுளிற் கூறியதுகாண்க.

(ம. க. 74)

'கொங்குரை யாற்றிவிட்டுக் குளத்தினிற் றேடநீடு
மங்குல்தோய் முதுகுன்றையர் மதுரையோ மதியில்
பாணு
எங்கையர் மனைக்கண்வைத்தாங் கெம்மிடைத்
தேர்திமற்றம்
மங்கையர் மனம்போலன்றே மகிழ்நர்தம் வாழ்க்கை
தானே'

என்றவிடத்து, சுந்தரமூர்த்திகள் திருமுதுகுன்றப் பெருமானிடம் வாங்கி ஆற்றிலிட்டுத் திருவாரூர்க் குளத்திலெடுத்த கதைக் குறிப்புஞ் சுட்டப்பட்டது. இறுதியடியில் 'மனம்போலவாழ்வு' என்ற பழமொழி, வந்தமைகாண்க. இச்செய்யுள் தலைவி தலைவனைத்தேடும்

பாணனை நோக்கிக் கூறியதாகும். எமது தங்கையாராகிய பரத்தையர் மனையிலே தலைவர் உள்ளார், அங்கே அவரை யிருத்திவிட்டு இங்கே எம்பால்வந்து தேடுகின்றாயே. அங்ஙனம் தேடுதல் ஆற்றிலிட்டுக் குளத்திற் றேடுவதுபோலாம். அப்பரத்தையர் மனம்போலத் தலைவர் வாழ்வார் என்றுரைத்தவாறும். 'எங்கையர்' என்றமையால், பரத்தையர் தலைவியினும் இளையோரென்பதும், அக்காரணம்பற்றித் தலைவர் அவர்பாற் சென்றனரென்பதும் அறியக்கிடத்தல் காண்க.

(மதுரைக்கலம்பகம் 54) ஒரு பெண், மதுரைப் பிரானைப் பவனியிற்கண்டு மயல்கொண்டு, அவர் தனக்கு மாலை கொடாவிடின், உயிர்விடுவதாகக் கருதினமையால், அவர்க்குப் பெண்பழி வரும்போலும், அதற்கு அறிகுறி, அவர் அடி யெடுத்துவைத்துப் புறப்படுவதற்குமுன் காகம் இடப்பக்கம் பாய்ந்த அபசகுனந் தான், என்பார்,

"பைந்தமிழ் தேர்கூடற்பழி யஞ்சியார்க்கு அவமே
வந்தொரு பெண்பழியென் வாழ்த்துகேன்-அந்தோ
அடியிடுமுன் ஐயர்க்கு அடுத்தவா கெட்டேன்
கொடி யிடமாப் போந்தகுறை" என்றார்.

இதன் கடையடியில், 'இடமா' என்பதை 'இடம்,' 'மா' எனப்பிரித்துக் கொடியின் கண்காளை என்று கொள்ளுக. ஆஅல்லது மா என்பது உயிர்க்கறிகுறியா

யுள்ளது. உயிரினையுய்யக் கொள்ளுங்கொள்கை பரம் பொருட்கிருப்பது அவரது தனிநிலைக்குக்கீழாய தடத்தநிலையாதலின். அதைக் 'குறை' யென்றாரென் பாருமுளர்.

இப்பகுதியை அகப்பொருட் குறைப்பகுதிக்கு முன் அமைந்த அம்புலிப்பருவக் கருத்துக்கள் அடிக ளியற்றிய இரு பிள்ளைத்தமிழ்களிலுமுள்ள அம்புலிப் பருவத்திலே மதியைப் புகழ்வதற்கு மிகழ்தற்கு மேது வாய கற்பனைகள் செறிந்துள்ளனவாகலின் அவைகளைத் தொகுத்துரைப்பாம்.

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்க் கருத்துக்களை முன்னும், முத்துக்குமாரசுவாமிபிள்ளைத் தமிழ்க் கருத் துக்களைப் பின்னும் தொகுப்பாம். மதியைப் பெருமை யாகப்பேசி நீ கயற்கண்ணம்மையொடு ஒப்பிடத்தக் காய், அவள் பால்வந்து அவளொடு விளையாடுக என்று தோழிகூறும் பாட்டின் பொருள் :—'அம்மையின் திரு வடிவங்களுள் நீயும் ஒன்றாவையென மறைகளியம்பு வதினாலோ, அழகிய கலைத்தொகுப்புடையாயென்று கருதியோ, தனது தந்தை மரபிற்கு முதல்வனென்று நினைந்தோ, சிவபிரானது திருமுடிக்கண்ணியாய் நீ விளங்குவதினாலோ, பாற்கடலிற்றோன்றிய தனது தோழியாகிய திருமகளுடன் பிறந்தமையாலோ, கயற் கண் நாயகி நின்னை இங்கேவாவென்று கூவிடப்பெற்றாய் நீ வந்து விளையாடுக'. அம்புலி வாராமைபற்றி அவனைக் குறைகூறி, நின்குறைகளை யொழிப்பதற்கு நீ வருதலே

தகுதியென்று கூறுமுறை :--தேவர்கூட்டம் அமுதுண்ணப் பிழிந்த கோது நீ, இராகுவின் எச்சில், களங்கம் பொதிந்த கயரோகி, விநாயகசதுர்த்திநாளிலே நீ பார்க்கத்தகாதாய், நின் குறைகளை யொழித்தற்கு இத்தலம் போல் வேறு திருப்பதியாதுமில்லை, ஆதலால் வருக; இத்திருப்பதி விண்ணவர்கோமானும், அவன் ஊர்தியும் சாபம் நீங்கப்பெற்ற இடம் சிவனாது அரசநகராய துவாதகாந்தத்தலம். நீ குருவிற் கிழைத்த பெருங் குற்றமும் உன் மாமன் தக்கனிட்ட பெருஞ்சாபமும் இளம்பருவத்திலே உனக்குள்ள நரையுந்திரையும் நீங்கப்பெறுவாய் நீ வருக.

இனி, நீ குறைதீரப் பெறுவதுடன், நல்வாழ்வு பெறுவாய்; ஆதலால் வருகவென்பது மூன்ருவது உபாயம். எண்ணிலாத புவனங்களை ஊடுருவி நிற்கும் இவனது புகழ்ப்பெரு நிலவிலே ஒரு சிறிதுமொண்டு கொண்டு, நீ, நிலாக்கதிர் வீசப்பெற்ருய், இவன் கடைக்கண் நோக்கால், உன்பாற்றண்மையுண்டாயிற்று. மண்ணுலகத்திலே பயிர்களை வளர்க்குமாற்றல், அம்மை உன்னிடத்திலே வைத்திடுஞ்சத்தியே, உனக்குச் சுதந்திரம் யாதுமில்லை. இவள் சீறடிகள் நின் உள்ளத்தே பொலியப்பெற்ருய், இறைவன் திருமுடியில் அமைக்கவும் பெற்ருய். இவன் வந்து இவளொடு விளையாடி இவன் திருவுள்ள மகிழ்ச்சியைப்பெறின், அதுபோலத் தவப்பயன் வேறில்லை. ஆதலால் நீ வருக.

நீ, வாராவிடிற் றண்டமுறுவாய் என்று கூறி அம்புலியை அழைப்பது நான்காம் உபாயம்:—பிறையாயிருந்து இவள் திருநுதலழகினைத் திருடினை, ஆதலின் உன்னை மகளிர் மணம்வேண்டி எருப்பிட்டிட்டு வழிபடுகின்றார்கள். நீ முழுமதியானபோது அம்மை திருமுகவனப்பினைக் களவாற்றினை, அம்மைக் கெதிரியான கங்கையாளோடு இறைவன் முடியிலிருந்தனை. இக்குற்றங்களையெல்லாமறந்து உன்னை விளையாட அழைத்த கயற்கண்ணியின் பெருங்கருணையிருந்தவாறென்னே! இவண் நீவரவில்லையேயென்று அம்மை எங்களைக் கேட்டபோது, நீ அம்மை திருமுகச் செவ்விக்குத் தோற்றொதுக்கினுய், பாம்புகள் பிடித்திடுமென்றஞ்சி வரவில்லைபோலும் என்று கூறி உன்னைத் தப்புவித்தோம், இனி, அழைத்தபோது நீ வாராமற்போனல், உனக்குப் பிழைப்பில்லைகாண்.

திங்களுக்கு முருகப்பிரானுக்குஞ் சிலேடையாகச் செய்யுளமைத்து இருவர்க்கும் ஒற்றுமை கூறுமுறை:- (மு. கு. பி. 61) மண்ணினோர் போற்றும் அழகிய வடிவுடன் அமுத நிறைந்த நீ கடவுள் போலவருகின்றாய். உலகெலாம் வணங்குந் திருமேனிகொண்டு, முற்றறிவின் முதல்வனுகிய முருகப்பிரான் அழிவில்லாது தோன்றுகின்றான். நீ கங்கையொடு இறைவன் திருமுடியிலிருக்கப்பெற்றாய், கங்கையானது தன்னை யெடுத்துச்செல்லப்பெற்றான், முருகன். நீ பொங்குகின்ற பெரிய சங்குகள் ஒலிக்கும் பாற்கடலிடைத் தோன்றினை; அன்னால்,

சிவபெருமானாகிய ஆனந்தக் கடலிடைத் தோன்றினன். நீ குமுதம் விரியவும் தாமரை கூப்பவுஞ்செய்பவன், வள்ளிநாயகி திருவாயாகிய குமுதம் விரியும்படி தனது செங்கைத் தாமரைகளைக் கூப்புகின்றவன் முருகன்; பயிர்கள் தழையத்தக்க தன்மை கொடுப்பவன் நீ, குமரப்பெருமான் எல்லாவுயிர்களும் உய்யும்படி கருணை புரிவான். பரமனது ஒரு கண்ணாகிய இந்திரியம் நீ, முதல்வன் திருக்கண்களிற்றோன்றிய பொறிகளிற் றோன்றியவன், அறுமுகப்பிரான். இக்காரணங்களால், நீ அவனோடு ஒருபுடை யொற்றுமையுடைமையால், அவனொடு விளையாடத்தக்காய், நீ வருக.

இனி, நின்னினுங் குமரவேள் பல்லாற்றானுஞ்சிறந்தவனாதலின், நீ அவன் பால்வந்து குறைநீங்கப்பெற்று நன்மையுறுகவென்பார் கூறுவது :—இறைவனுக்கு நீ கண் என்றால், குமரவேள் கண்ணினுண்மணியாவன். நீ கலைகள் குறையவும் நிறையவும் பெற்றவன், எம்பெருமான் ஒரு தன்மைத்தாய முழுமதியுடையவன், நீ இரவோன் எனத்திரிகின்றவன், முருகன் அடியவர்க்கு இரத்தலையொழித்தவன், நீ உலகிற்றோன்றும் நிலையியற் பயிர்களை வளர்ப்பவனெனின், முருகப்பிரான் எல்லா உயிர்களையும் வாழச்செய்பவன், நீ தேவர்க்கு அமுதம் வழங்கினையெனின், சேயோன், யாவர்க்கும் போகமுமுத்தியும் அளித்து உலகத்தையும் படைப்பவன்.

நீ வெளியிருளை யொழிப்பாய், இவனைப்போல அக விருளை யொழிக்க அறியாய், நீ வானிற்பொலிவாய் இவனைப்போல, உலகமெங்கும் விளங்கமாட்டாய், நீ குமுதமலரைத்திறப்பாய், உள்ளமாகிய மலரைத்திறக்க அறியாய், சகோரப்புள்ளிற்கு நீ உணவளிப்பாய், பிற எவ்வுயிர்க்கும் இன்பமளிக்கமாட்டாய், நின்னினும் பெரிய பல தேவர்கள் அருகே நிற்பவும், எம்பெருமான் நின்னையழைத்தனன், நீ செய்ததவம் பெரிது, நீ அவனை நண்ணினுல், உன் கயரோகமும், கறையுநீங்கப் பெறுவாய், அவன் எவ்வுலகுந்தருவான், வீடுமளிப் பான், ஆதலால் இவன் பால் விரைந்துவந்து விளை யாடுக.

தண்ட உபாயம் :—இவன் வாவென்றழைக்கவும், நீ வாராயானுல், எட்டுத்திக்கினும், இவனது சினத்தி னின்று தப்பிப்பிழைப்பவர் எவருமில்லை. இவனைக் குழந்தையென்றெண்ணி நான்முகன்முதற் பலபெருந் தேவர் துன்பப்பட்டதைநீ அறியாயா? இவன் பொறுத் தாலும், இவன் துணைவராய வீரபாகு முதலியோர் நின்னைப்பொருர், ஆதலின் தவருது வருக.



## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 3 | 9 | கற்ப | கற்பு |
| 5 | 20 | அம்மைக்கனவிலே | அம்மைகனவிலே |
| | ,, | நாயக்கர்க்குதோன்ற | நாயக்கர்க்குத் தோன்றி |
| 6 | 21 | ஒதுங் | ஓதுங் |
| 9 | 6, 7 | போற்றிபோய் | போற்றிப்போய் |
| 13 | 5 | கடலனைய் | கடலனைய |
| 14 | 13 | உள்ன | ஊன |
| 18 | 6 | எத்துணைசெல்வம் | எத்துணைச் செல்வம் |
| 20 | 4 | குரியதே | குரியதே. |
| | 13 | செந்திமேல் | செந்தில்மேய |
| 21 | 21 | தடாகை | தடாதகை |
| 22 | 3 | தாகும் | தாடும் |
| | 13, 14 | அம்புலி பருவம் | அம்புலிப்பருவம் |
| 22 | 17 | என்று | என்ற |
| ,, | 20 | பாட்டை | பாடு |
| 23 | 11 | முப்பதுப்பாட்டு | முப்பது பாட்டு |
| 24 | 4 | குறத்த | குறத்தி |
| ,, | 9 | தளை | தலை |
| 25 | 3 | உணர்ந்துங் | உணர்த்துங் |
| 27 | 21 | கடைபிடித்து | கடைப்பிடித்து |
| 28 | 22 | என்றுக் | என்னுங் |






| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 43 | 5 | எடடு | எட்டு |
| 52 | 16 | தவப்படைத்தவன் | தவம்படைத்தவன் |
| 53 | 3 | உணரில்லதை | உணரினல்லதை |
| ,, | 22 | என்றும் | என்னும் |
| 57 | 10 | என்றுங் | என்னுங் |
| | 14 | மற்ற | மற்று |
| 66 | 19 | வீடுமே | வீடுபே |
| 70 | 16 | யல்லவர் | யல்லவா? |
| 71 | 4 | திருமலா | திருமலர |
| 74 | 22 | செய | செல |
| 75 | 6 | யுலணுதலின் | புலணுதலின் |
| 76 | 23 | தெயவ | தெய்வ |
| 84 | 6 | என்றார் ஆற்றுப் படையார்க் | என்றார். ஆற்றுப் படையார் |
| 89 | 8 | வார்டுகளாளே | வாக்குகளானே |
| 92 | 23 | களிந்த | கனிந்த |
| 98 | 10 | பொதுவாய் | பொதுவாய |
| 117 | 12 | முயரிய கசடற்கற்று | உயரிய கசடறக் கற்று |
| 118 | 3 | நீரினுல் | நீரினும் |
| 120 | 23 | போலும் வெண் செய்யும், சிழத் | போலும். வெண் செய்யுங் கிழத் |
| 121 | 17 | கொண்டனளென்பார் | கொண்டாற் போலுமென்பார் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 133 | 2 | ஒளிப்பாயும் | ஒளிபாயும் |
| 136 | 19 | ஒவ்வொருவருக்குக் | ஒவ்வொரு வருக்குங் |
| 144 | 21 | சுவைத்தும்பி | சுவைததும்பி |
| 153 | 15 | நகரத்தின | நகரத்தின் |
| 154 | 12 | பொன்னுக்கினே மென்றும் | பொன்னுக்கி னேம் |
| ,, | 13 | ,, | ;, |
| 155 | 14 | திரியம் | திரியப் |
| 156 | 10 | படுதலின், | படுதலின். |
| 158 | 3 | விடத்துற் | விடத்துக் |
| ,, | 19 | கூத்தப்பெருமான், | கூத்தப்பெருமான் திருவாதவூராடிகட்கு |
| ,, | 23 | குறிப்பது, | குறிப்பது. |
| 160 | 5 | குறித்தார், | குறித்தார். |
| | 8 | பல அடிகள் | பல, அடிகள் |
| 162 | 5 | வரியையும் ஆறாவதில், முன் அமைந்த என்ற சொற்களையும் எடுத்துவிடுக | |
| 163 | 7 | இடம் சிவனாது, | இடம். சிவனாது |
| | 15 | இவனது | இவளது |
| | 16 | இவன் | இவள் |
| | 23 | இவன் | இவள் |
| 164 | 7 | தங்கை | கங்கை |
| | 12 | ஞெதுக்கினுய், | றொதுங்கினுய், |
| 165 | 13 | தவறுதலின், | தவனுதலின் |